# கு ம ர கு ரு

பொறியியற் கல்லூரி | வணிக மேலாண்மைப் பள்ளி | வேளாண்மைக் கல்லூரி
பன்முகக் கலை அறிவியல் கல்லூரி | சக்தி மேம்பாட்டுக் கல்வி மையம்

**ஒழுக்கமே வாழ்வு**



*"கல்வியைப் போலவே தொழில்களும் கடவுளுக்குச் சமமானவை. படிக்கும் காலத்திலேயே தொழிலுக்கான பயிற்சியை மாணவர்கள் பெறவேண்டும்."*

**அருட்செல்வர் டாக்டர்.நா.மகாலிங்கம்**





## குமரகுரு பன்முக கலை அறிவியல் கல்லூரி

அடிப்படை அறிவியலிலிருந்து சமூக அறிவியல் வரையும், இலக்கியத்திலிருந்து நுண்கலைவரையும் அனைத்தையும் வழங்கி, சமூக முன்னேற்றத்திற்கான ஆய்வுகளை முன்னெடுத்து, வாழ்நாள் முழுதும் கற்றலில் ஆர்வம் கொண்டு, உலகியலின் போக்கில் தாக்கத்தை ஏற்படுத்தும் தனியாத ஆர்வம் கொண்ட இளைஞர்களை உருவாக்கும் கல்வி நிறுவனம்.



## குமரகுரு தொழில்நுட்பக் கல்லூரி

150 ஏக்கர் வளாகத்தில் 6000 மாணவர்களுடனும் 400 பேராசிரியர்களுடனும் 34 ஆண்டுகளாக 'ஒழுக்கமே வாழ்வு' எனும் உயர் குறிக்கோளுடன், ஆராய்ச்சியையும் தொழில் இணையையும் அடிப்படையாகக் கொண்டு தேசிய தர வரிசையில் முதல் நூறு நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கிறது.



## கே.சி.டி. வணிக மேலாண்மைப் பள்ளி

தொழிலகங்கள் மற்றும் சமூகத்தின் முன்னேற்றத்தில் முனைப்புடன் செயல்படும் இளைய தலைமுறைக்கான தலைவர்களை உருவாக்கும் இந்தியாவின் முதல் 100 நிறுவனங்களில் ஒன்றாகும் கல்வி, மனித வளம், மாணவர்கள் சேவை, ஐ.டி. தொழில்நுட்பம், தொழிலினைவு, சமூக பங்களிப்பு போன்றவைகளில் மிகுந்த ஈடுபாட்டுடன் செயல்படும் இணையற்ற நிறுவனம்.



## குமரகுரு வேளாண்மைக் கல்லூரி

தொழில்நுட்பம் மூலமாக வேளாண்மை உற்பத்தியைப் பெருக்கி, வேளாண்மையைத் தற்சார்புத் தொழிலாக மாற்றுவதற்குரிய வேளாண்மைக் கல்வியை, கிராமப்புற மாணவர்களுக்கு வழங்குவதை நோக்கமாகக் கொண்ட நிறுவனம்.

## ஆராய்ச்சி அமைப்புக்கள்

**மாணவர் ஆராய்ச்சிகள்**




GARAGE

re KCT'S PLATFORM FOR RESEARCH & EXPLORATION

**தொழிலக ஆராய்ச்சிகள்**








## போர்ஜ்

கே.சி.டி.யின் ஒர் அங்கமான 'போர்ஜ்' வளர்ந்து வரும் நவீனத் தொழில்நுட்பத்தையும், கணினி அறிவியலையும் இணைத்து ரோபோட் தானியங்கிஇயந்திரங்களையும் செயற்கை அறிவூட்டல் கருவிகளையும், டிஜிட்டல் வணிகத்தையும் வளர்த்தெடுத்துப் பல்வேறு தொழில் துறைகளிலும் இந்த நுண்ணறிவுப் பயன்பாட்டைக் கொண்டுசெல்லும் நோக்கில் செயல்படுகிறது.

குமரகுரு கல்வி வளாகம்
சரவணம்பட்டி
கோயம்புத்தூர்
**0422 2661100**
**kct.ac.in**
**kctbs.ac.in**
**kclas.ac.in**
**kia.ac.in**






# சுரங்கம்

# தேர்தல் அறிக்கையில் ஒரு திட்டம்

நதிகள் இணைப்பு இந்தியாவிற்கு அதிகப் பயனுள்ளது என்பதையும்விடத் தமிழகத்திற்கு அவசியமானதும் அவசரமானதுமாகும். ஏனெனில் தமிழகம்தான் பாசனப் பற்றாக்குறையுள்ள ஒரே மாநிலம்.

அதனால் தமிழ்நாட்டு மக்களின் ஆதரவைப் பெற அரசியல் கட்சிகள் தங்கள் தங்கள் தேர்தல் அறிக்கையில் நதிகள் இணைப்புத் திட்டத்தை முதல் திட்டமாக அறிவித்தால்தான் தமிழக மக்கள் அந்தக் கட்சியை அனுமதிக்க வேண்டும் என்று 20 ஆண்டுகளுக்கு (1999) முன்பே அருட்செல்வர் எழுதிய கட்டுரையை 'சுரங்கம்' பகுதியில் வாசகர்களுக்கு வழங்கியுள்ளோம்.

வாசகர்கள், அரசியல் கட்சிகளின் தேர்தல் அறிக்கையில் நதிகள் இணைப்புத் திட்டம் இடம்பெற்றுள்ளதா என்பதைச் சோதிப்பது அவர்களுடைய கடமை.

– இ.ஆர்.

ஆட்சி அதிகாரத்திற்குத் தனிக் கட்சியோ அல்லது கூட்டணியோ தேர்ந்தெடுக்கப்படுமானால், தேர்தல் அறிக்கையில் வெளியிட்ட திட்டங்களை நிறைவேற்றுவது அதன் கடமையாகும்.

இதனை அரசியல் கட்சிகளும் ஏற்றுக்கொள்ள வேண்டிய **ஒரு திட்டம்** இருக்கிறது. ஆட்சிக்கு யார் வந்தாலும் அதனை நிறைவேற்றிட முன்வருவார்களானால், நாடே அவர்களைப் பாராட்டும்.

ஒருவேளை தேசியக் கட்சிகள் இத்திட்டத்திற்கு முக்கியத்துவம் கொடுக்காமல் போனாலும், தமிழ்நாட்டுக் கட்சிகளாவது இத்திட்டத்திற்கு முக்கியத்துவம் கொடுத்துத் தங்கள் தேர்தல் அறிக்கையில் வெளியிட்டால், அது தமிழக மக்களுக்குச் செய்கிற மிகப் பெரிய நன்மையாகும்.

ஏனெனில், தமிழகத்தில் உள்ள விவசாயம் வைகை, தாமிரபரணி முதலிய ஆறுகளைச்



**டாக்டர் நா. மகாலிங்கம்**

சார்ந்து இருப்பதைக் காட்டிலும் காவிரி ஆற்றுப் பாசனத்தை நம்பியே அதிக மாக உள்ளது. காவிரி ஆறும் பருவ நிலை தவறிய காலத்தில் அதிகப் பாசன நீரை வழங்க முடியாத நிலையில் உள்ளதை நாம் அறிவோம்.

இந்தச் சூழ்நிலையில், ஒரு மிகப் பெரிய பாசனத் திட்டத்தைப் பற்றிப் பல ஆண்டுகளாகப் பேசி வருகிறோம். அரசாங்கத்தின் நிதி உதவி இல்லாமல் அதை நிறைவேற்றி ஆந்திரா, கர்நாட கம், தமிழகம் முதலிய மூன்று மாநிலங் களும் சிறந்த முறையில் இரு போகம் சாகுபடி செய்யக் கூடிய புதிய பூமிகளை அத்திட்டத்தின் மூலம் உருவாக்கலாம்.

குறைந்தபட்சம் *10* ஆண்டுக் காலத் திற்கு இந்த *3* மாநிலங்களிலும் திட்டப் பணிகளுக்கான வேலைவாய்ப்புகள் அதிகரிக்கும். திட்டம் நிறைவேறினால், தென் மாநிலங்கள் உணவுதானிய ஏற்று மதி மாநிலங்களாக மாறும். அத்தகைய ஒரு பாசனத் திட்டத்தைப் பற்றிச் சற்று ஆழ்ந்து பரிசீலிப்பது நமது கடமை யாகும்.

தென்னிந்திய நதிகளை ஒன்றோடு ஒன்று இணைப்பதற்கான திட்டம்தான் அது. வீணாகக் கடலில் விழுகின்ற தண் ணீரை, தேவைப்படுகிற பிரதேசங் களுக்குப் பாசன நீராகப் பயன்படுத்திக் கொள்கிற திட்டம்தான் இந்தத் திட்டம்.

தென்னிந்திய நதிகள் என்று குறிப் பிடுகிற போது இங்குள்ள நான்கு மாநிலங் களின் நதிகளை மட்டும் இணைத்தால் நமது நோக்கம் நிறைவேறாது. வட கிழக்கே உள்ள ஒரிசா மாநிலத்தில் ஓடும் மகாநதியைத்தான் முதல் நதியாக இதில் இணைக்க வேண்டும். இந்த நதி நீரில் *92* சதவிகித நீர் வங்கக் கடலில் வீணா கிறது. இதேபோல கேரளத்தில் *43* ஆறுகள் மேற்குத் திசை நோக்கிப் பாய்ந்து அரபிக்கடலில் விழுந்து வீணா கின்றன. இது கேரள நீர்வளத்தில் ஏறக் குறைய *90* சதமாகும்.

ஒரிசாவும் ஆந்திராவும் பாசனநீரை உபரியாகக் கொண்ட மாநிலங்கள். கேரள மாநிலத்தில் விவசாய நிலப் பரப்பு குறைவு. ஆகவே பாசனத் தேவை அங்கு அதிகமில்லை.

மாநில அந்தஸ்துள்ள பாண்டிச் சேரிக்கும் பாசனநீர் அதிகமாகத் தேவையில்லை.

மகாநதியில் உபரிநீரை அப்புறப் படுத்துவதால், அம்மாநில மக்களுக்கு எவ்வித இழப்பும் இல்லை என்பதை, அம்மாநிலத்தின் நாடாளுமன்ற உறுப்பினர்களே வரவேற்றுள்ளார்கள்.

ஒரிசா மாநில அரசு உபரிநீரைத் தருவதற்கு என்னதான் ஒப்புக் கொண் டாலும், நாளைக்கு மகாநதியின் தண் ணீரைத் தர முடியாது என்றால் என்ன செய்வது? ஆகவே, மகாநதியின் நீரைப் பாசனப் பற்றாக்குறையுள்ள தமிழகத் திற்கு நிரந்தரமாகத் தருவதற்கு (Royalty) ராயல்டியாக ஒரு தொகையை அந்த மாநில அரசுக்குச் செலுத்தி ஓர் ஒப்பந் தத்தை உருவாக்கிக் கொள்வது தான் நமக்குப் பாதுகாப்பு அளிக்கக் கூடிய தாகும்.

நதிகளின் இணைப்பில் மிகப்பெரிய தூரத்தை ஆந்திர மாநிலத்தில்தான் இத் திட்டம் கடக்க வேண்டியதாக உள்ளது.





தமிழ்நாட்டில் ஆறுகளுக்குக் குறுக்கே 50-க்கும் மேற்பட்ட பெரிய மற்றும் நடுத்தர அணைகள் கட்டப் பட்டுவிட்டன. இதன்மூலம் தமிழகத் தில் ஓடும் ஆற்று நீரில் 95 சதவிகிதம் விவசாயத்திற்குப் பயன்படும்படி செய் யப்பட்டுவிட்டது. இனிமேல் புதிய அணைகள் கட்டுவதற்குத் தமிழ்நாட் டில் ஆறுகள் இல்லை என்றே கூறலாம்.

இப்படிப்பட்ட சூழ்நிலையில், தமிழ் நாட்டில் நிரந்தரமாக வியாபித்துள்ள இந்தப் பாசனநீர் பற்றாக்குறையைப் போக்க, நாம் மகாநதி நீரை ஆந்திர மாநிலத்தின் வழியாகத் தமிழகத்திற்குக் கொண்டு வருவதைத் தவிர வேறு வழி யில்லை. கங்கை – காவிரி இணைப்பு என்பது ஒரு லட்சியக் கனவு மட்டும் தான். மகாநதி – காவிரி இணைப்பு ஒன்றுதான் காரிய சாத்தியமானது.

அமெரிக்காவில் உள்ள டென்னசி பள்ளத்தாக்கு ஆணையம் போன்று இத் திட்டத்தை நிறைவேற்றுவதற்குப் புதிய 'ஆணையம்' ஒன்றை முதலில் நாம் உருவாக்க வேண்டும். (Peninsular River Valley Authority)

மகாநதியிலிருந்து கோதாவரி, கிருஷ்ணா, பெண்ணாறு, பாலாறு, காவிரி, வைகை வரை நதிகளை இணைப்பதால், புதிதாகப் பாசன வசதி பெறும் பூமிகளை முதலில் நாம் கணக்கிட்டாக வேண்டும்.

இத்திட்டத்தினால் நிலம் அதிகம் இல்லாத கேரள மாநிலத்திற்குப் பாசன நீர் தேவைப்படாது. மற்ற தென் மாநிலங்களில் இதுவரை தரிசுகளாகக் கிடந்த பூமிகளைத்தான் இருபோக பாசன வசதியுள்ள பூமிகளாக்கப் போகிறோம்.

தரிசுகளாக இருந்தபோது அப்பூமி களுக்கு இருந்த மதிப்பு குறைவு. பாசன வசதி பெற்ற பிறகு அவற்றின் மதிப்பு பன்மடங்கு உயரும். இவை அனைத்தும் விவசாயிகளின் சொந்த பூமிகள். அவர் களுக்கு இப்பூமிகளின் மூலம் நிரந்தர வருமானம் கிடைப்பது நிச்சயமற்ற தாகவே முன்பு இருந்துள்ளது.

மகாநதியிலிருந்து காவிரி வரை புதிய புதிய அணைகளைக் கட்டுவதன் மூலம் தோன்றும் புதிய ஆயக்கட்டுகள் அவ்வப் பகுதிகளில் உள்ள விவசாயி களுக்கு அதிக வருமானத்தைப் பெரு மளவில் சம்பாதித்துக் கொடுக்கும்.

தென்மாநில விவசாயிகளை எல் லாம் ஒன்று திரட்டி, அவர்கள் வச முள்ள 325 லட்சம் ஏக்கர்களில் மூன் றில் இரு மடங்கு (2 / 3) பூமிகளை அவர் களே வைத்துக் கொண்டு, 108 லட்சம் ஏக்கர் பூமிகளை (1 / 3 பங்கு) மட்டும் இந்த ஆணையத்திற்கு (Authority) விற் பனை செய்யுமாறு ஆணையம் அவர் களைக் கேட்டுக்கொள்ள வேண்டும்.

இந்த 108 லட்சம் ஏக்கர்களை மட்டும் விவசாயிகளிடமிருந்து ஏக்கர் சராசரி ரூ. 16,000/-க்கு அதிகமாகாமல் ஆணையம் விலைக்கு வாங்கி, ஏக்கர் ரூ. 60,000/–க்குக் குறையாமல் விற்க வேண்டும்.

அவ்வாறு விற்பனை செய்தால், ஆணையத்திற்கு நிகரத் தொகையாக சுமார் ரூ. 50 ஆயிரம் கோடியைத் (ரூ. 60,000 – 16,000) x 108 லட்சம் = ரூ. 47,520 கோடி) திரட்டலாம்.

விவசாயிகளிடமிருந்து 1/3 பாக பூமி களை ஆணையம் விலைக்கு வாங்க வேண்டும் என்றால், ஆணையத்திற்கு அதற்குத் தேவையான ஆரம்ப நிதியை எப்படித் திரட்டுவது?

தேசியமயமாக்கப்பட்ட வர்த்தக





வங்கியிடம் ஓர் ஒப்பந்தத்தை ஏற் படுத்திக் கொண்டு கணிசமாக ஒரு தொகையை முன்பணமாக (Bridge Loan) அந்த ஆணையம் பெற்றுக் கொள்ள லாம்.

விவசாயிகளிடமிருந்து விலைக்கு வாங்கும் பூமிகளுக்கான தொகையில் ஒரு பகுதியை முன்பணமாக (Advance) அவர்களுக்குத் தந்து, அந்தப் பூமிகளை அந்த ஆணையம் கையகப்படுத்திக் கொள்ளலாம். திட்டமிட்டபடி பின்னர் வேலைகள் நடக்க நடக்க முழுக் கிரயத் தொகையையும் கொடுத்துவிடலாம்.

அவ்வாறு கையகப்படுத்தப்பட்ட பூமிகளை விற்பனைக்கு அறிவித்தால் வியாபாரத் துறையினரும், தொழில் துறையினரும் பாசன வசதி உத்திரவாத முள்ளதால் போட்டி விலையில் (Competitive Price) அவற்றை வாங்க முன்வருவார்கள்.

அவ்வாறு வருபவர்களிடமிருந்து, முன்பணமாக ஒரு தொகையையும், மீதி கிரயத் தொகையைப் பின்னரும் பெற் றுக்கொள்ள ஆணையம் அவர்களுடன் ஓர் ஒப்பந்தம் செய்து கொள்ளலாம்.

இதன்மூலம் திரளும் தொகையை, வர்த்தக வங்கிகளிடமிருந்து ஏற்கெனவே முன்பணமாகப் பெற்ற கடனுக்காகத் திருப்பிச் செலுத்தி வங்கிக் கடனை நேர்செய்து விடலாம்.

வியாபாரம் மற்றும் தொழில்துறை யினருக்கு நிலத்தை முழுக் கிரயத் தொகைக்கு விற்பனை செய்வதன் மூலம், திரட்டப்படும் தொகையிலிருந்து விவசாயிகளுக்குத் தர வேண்டிய பாக்கித் தொகையையும் தந்துவிடலாம்.

விவசாயிகள் தங்களின் பூமிகளில் ஒரு பங்கை ஆணையத்திற்கு ஏற் கெனவே விற்றதன் மூலம் கிடைத்தத் தொகையை, தங்களிடம் உள்ள இரண்டு பங்கு பூமிகளை விளைநிலங்களாகச் சீர்திருத்திக்கொள்ளப் பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

ஏக்கர் ரூ.60 ஆயிரம் என்று தனியார் வாங்க முடியாது. 500 முதல் 1000 ஏக்கர் வரை வாங்கும் சக்தி தொழில் நிறுவனத்தாருக்கும் வியாபாரத் துறையினருக்கும்தான் உண்டு.

இத்திட்டத்திற்காக உள்நாட்டி லிருந்தோ, வெளிநாட்டிலிருந்தோ மத்திய அரசு கடன் வாங்க வேண்டிய அவசியமில்லை. வரி விதிக்க வேண்டிய அவசியமும் இல்லை.

முன்னாள் மத்திய பாசனத்துறை அமைச்சர் மாண்புமிகு வி.சி. சுக்லா அவர்கள் மகாநதி – காவிரி இணைப்புத் திட்டம் ஏற்றுக்கொள்ளப்பட்டுள்ளது என்று கூறியுள்ளார்.

மகாநதி இணைப்புத் திட்டத்தை நாம் நிறைவேற்றுகிறபோதுதான் தென் மாநிலங்கள் உணவு தானிய உற்பத்தி யில் ஏற்றுமதியும் செய்யும் அளவுக்கு வளர்ச்சியடையும். அத்துடன் இந்தப் புதிய பாசன பூமிகளின் உற்பத்திக்காக இங்கு உருவாகும் பாசன நிர்வாக நிறுவனங்களும் பலருக்கு வேலை வாய்ப்பை வழங்கும். தென் மாநிலங் களில் விவசாயப் பொருளாதாரம் அதிவேகமாக அபிவிருத்தி அடையும். இந்தியா ஒரு விவசாய தேசம் என்பது மகாநதி திட்டத்தை நிறைவேற்றுகிற போதுதான் உண்மையாகும்.

இந்தப் பாசனத் திட்டத்தைத் தமிழ்நாட்டுக் கட்சிகள் அனைத்தும் தங்கள் தேர்தல் அறிக்கையில் முதலாவ தாகக் குறிப்பிட்டு, ஆட்சிக்கு வந்தால் அதை நிறைவேற்றுவதற்கான உறுதி மொழியை வழங்குமாறு வற்புறுத்த வேண்டும்.

தமிழக வாக்காளப் பெருமக்கள் தங்களின் அபிமானத்திற்குரிய அல்லது தாங்கள் அனுதாபம் காட்டுகிற அரசியல் கட்சிகள் வெளியிடும் தேர்தல் அறிக்கைகளில் இந்தப் பாசனத் திட்டத்தை இடம்பெறுமாறு செய்ய வலியுறுத்தலாம்.

●

# கதி எவர் கன்னித் தமிழுக்கு...

'குழந்தைக்கவிஞர்'
செல்வகணபதி

தமிழுக்கு இருவர் கதியானார்
தமிழ்ச்சான் றோர்கள் யார்அவரோ
கமழும் தமிழ்ச்சுவை அறிந்தவரோ
கற்றதைச் சொல்லவலன் ஆனவரோ

செம்மொழித் தமிழுக்குச் சீர்வரிசை
சேர்த்தவரோ புகழ் பூத்தவரோ
எம்மொழி யாயினும் உயர்வேதான்
இருப்பினும் தமிழ்ச்சுவை தனியேதான்

'க'எனில் கவிச்சக் கரவர்த்தி
கம்பனாம் கவிதையை ஆண்டவனாம்
'தி'எனில் திருக்குறள் படைத்தவராம்
திருவள் ளுவப்பேர் ஆசானாம்

கதிஇவர் தமிழுக்கு வேறெவரோ
கம்பரா மாயணம் திருக்குறளை
அதிரசச் சுவையுடன் அறிவுரசம்
அப்படிச் சொட்டிடப் படைத்தார்காண்

தேரழ கால்அதில் வீற்றிருக்கும்
தெய்வத்தின் அழகும் விரிகிறது
சீரிள மைத்திறம் தமிழ்மொழிக்கு
சேர்த்தவர் கம்பனும் வள்ளுவனும்

ஆயிரம் ஆண்டுகள் ஆயினும்என்
அசத்திடும் என்றும் இராமர்கதை
ஆயிரம் பிரச்சினை தோன்றினும்என்
அருமறை குறட்பா தீர்வுதரும்

கம்பர் திருவள் ளுவர்புலமை
கதியென ஆயின தமிழுக்கு
கம்பரைப் படிப்போம் ரசனைக்கு
குறளினைக் கற்போம் தீர்வுக்கு!



# இந்தியா- பாகிஸ்தான் யுத்தங்கள்

இந்த யுத்தங்களின் பதிவுகள் வரலாற்றில் இடம்பெற்றுள்ளவை. 1947-இல் இந்தியா சுதந்திரமடைந்ததுபோல, 1947-இல் பாகிஸ்தானும் சுதந்திரம் அடைந்தது. இந்தியா ஜனநாயகக் குடியரசாக உருவானது. பாகிஸ்தான் இஸ்லாமிய மத நாடாக உருவாகியது.

இந்தியாவில் கடந்த 70 ஆண்டுகளில் ஒரு முறைகூட ராணுவ ஆட்சி நடைபெறவில்லை. ராணுவத் தளபதி எவரும் அதிபராகவில்லை. ஆனால் பாகிஸ்தானில் இஸ்கந்தர் மிஸ்ரா, அயூப்கான், யாகியாகான், ஜியாவுல் ஹக், பர்வேஸ் முசாரப் ஆகிய ராணுவத் தளபதிகள் பாகிஸ்தான் அதிபர்களாக இருந்தார்கள்.

நவாஸ் ஷெரீப், பெனாசீர் பூட்டோ, இம்ரான் கான் முதலியோர் பாகிஸ்தான் ராணுவத்தின் ஆதரவில்தான் ஆட்சி செய்ய வேண்டியிருந்தது. அமெரிக்காவில் இரட்டைக் கோபுரங்களைத் தகர்த்த ஒசாமா பின்லேடன் பாகிஸ்தானில்தான்


லால்பகதூர் சாஸ்திரி


இந்திராஜி


வாஜ்பாய்


பிரதமர் மோடி



தேசத்தைக் காத்த வீரர்களின் சவப்பெட்டிகள்...

வசித்து வந்தான். மும்பைக் குண்டுவெடிப்புக்குக் காரணமான தாவூத் இப்ராஹிம் இன்னும் பாகிஸ் தானில்தான் உள்ளான். இப்போதுள்ள மசூத் அசார் பாகிஸ்தானில்தான் இருப்பதாக அந்நாட் டின் வெளியுறவு அமைச்சரே கூறுகிறார்.

1965–இல் பிரதமர் லால்பகதூர் சாஸ்திரி காலத்தில் நடந்த முதல் யுத்தத்தில் பாகிஸ்தான் படுதோல்வி அடைந்தது.

1971–இல் பிரதமர் இந்திராஜி காலத்தில் நடந்த இரண்டாவது யுத்தத்தில் 98 ஆயிரம் பாகிஸ்தான் சிப் பாய்கள் இந்திய ராணுவத்திடம் சரண டைந்தனர்.

1999–இல் பிரதமர் வாஜ்பாய் காலத் தில் நடந்த கார்கில் யுத்தத்தில் பாகிஸ் தான் படுதோல்வி அடைந்தது.

2019–இல் பிரதமர் நரேந்திர மோடி காலத்தில் உரியில் நடந்த நான்காவது யுத்தத்தில் பாகிஸ்தான் தோற்றது. காஷ்மீரப் பகுதி புல்வாமாவில் தற்போது நடந்த வெடிகுண்டுத் தாக்குதலில் இந்திய ராணுவவீரர்கள் 40 பேர் பயணம் செய்த வாகனம் பயங்கரவாதத் தற்கொலைப் படை மூலம் வெடித்துச் சிதறியது.

இதற்குப் பதிலடியாக இந்திய மிக்–21 போர் விமானம் காஷ்மீருக்குள் புகுந்து பாகிஸ்தான் எல்லையோரத்தில் 350 பயங்கரவாதிகளைக் கொன்று குவித்தது.

பாகிஸ்தானின் எப்–16 ரக அமெரிக்கப் போர் விமானத்தை மிக்–21 ரக விமானத்தில் சென்ற தமிழன் அபிநந்தன் வர்த்தமான் துரத்திச் சென்று அதைச் சுட்டு வீழ்த்தினார். துரதிருஷ்டவசமாக இவருடைய விமானத்தில் கோளாறு ஏற்பட்டு பாராசூட் மூலமாகத் தப்பித்தார்.

சர்வதேச நாடுகளின் நிர்பந்தத்தின் காரண மாக அவர் இந்தியாவிடம் பத்திரமாக ஒப்படைக் கப்பட்டார்.

இந்த விபரங்கள் அனைத்தையும் நாம் மறந்து விடக் கூடாது. கட்சிக் கண்ணோட்டத்திலும் இத்தகவல்களைப் பார்க்கவும் கூடாது.



பாகிஸ்தான் விடுவிக்கப்பட்ட இந்திய ராணுவ வீரர் அபிநந்தன்

இத்தருணத்தில் பாரதமாகிய இந்தியாவைப் பற்றி ஒவ்வொரு இந்தியனும் பெருமிதமடைய வேண்டும். அதற்கான இந்நிகழ்வுகள் சிலவற்றை யாவது நாம் நினைவில் வைத்துக் கொள்ள வேண்டும்.

**– தேசபக்தன்**

கட்டுரை



வித்வான்
ல. சண்முகசுந்தரம்

# பழகிப் பார்த்ததில் இவர்கள்...

## வித்வான் ல. சண்முகசுந்தரம் 4

அந்த இளைஞர் மெல்லக் கண் விழித்த போது விடியலுக்குரிய அறிகுறிகள் தென்பட்டன. கிடந்த கோலத்திலேயே திரும்பிப் பார்த்தார். நாமம் தரித்த பெரியவர் பக்கத்துப் படுக்கையில் நன்கு உறங்கிக் கொண்டிருந்தார். ஓசைப்படாமல் எழுந்து வெளியே போனவர் தன் காலைக் கடன்களை முடித்து அறைக்குத் திரும்பியபோது அந்த நாமதாரிப் பெரியவர் எழுந்திருந்தார்.

தன்னுடைய படுக்கையை மட்டுமின்றி அந்த இளைஞரின் படுக்கையையும் ஒழுங்காகச் சுருட்டி ஓரத்தில் வைத்திருந்தார் பெரியவர். அந்த இளைஞர் பதறிப் போனார். பதறிப்போன இளைஞரின் பெயர் ல. சண்முகசுந்தரம். படுக்கையைச் சுருட்டிய பெரியவர் பெயர் ராஜாஜி.

இது நடந்த இடம் குற்றாலத்தில் இருந்த ரசிகமணி டி.கே.சி.–யின் இல்லம். அந்த இளைஞர்தான் ரசிகமணியின் அணுக்க நண்பராகவும் அத்தியந்தச் சீடராகவும் விளங்கிய வித்வான் ல.சண்முகசுந்தரம்.

ஊதினால் விழுந்து விடுவது போல் உடைந்த தேகம். மூக்குக் கண்ணாடிக்குப் பின் வெளிச்சமும், குறும்பும் விகசிக்கும் விழிகள். வெற்றிலை போட்டுச் சிவந்த வாய். கறை படிந்த பற்களைக் காட்டிக் கொடுக்கும் வாய் கொள்ளாத சிரிப்பு.

இந்தக் கோலத்தில் இவரை நான் முதன் முதலாகப் பார்த்ததும் என் பள்ளிப் பருவத்தில் தான். கோவை கம்பன் விழாவில் ரசிகமணி டி.கே.சி. பற்றி உரையாற்ற வந்திருந்தார். அந்த உரையைக் கேட்க நான் ஆவலுடன் காத்திருந்தேன். ஏனென்றால் அதற்குச் சில மாதங்கள் முன்புதான் பள்ளி நூலகத்தில் 'கம்பர் யார்' என்னும் ரசிகமணியின் புத்தகத்தை வாசித்திருந்தேன்.



மரபின் மைந்தன் முத்தையா

அதனால் ரசிகமணி பற்றி மேலும் தெரிந்து கொள்ளும் ஆர்வம் அதிகரித்திருந்தது. ரசிகமணி பற்றி மிகவும் சுவாரஸ்யமான தகவல்களை ஆற்றொழுக்காக அவர் பகிர்ந்து கொண்ட விதம் அருமையாக இருந் தது. ரசிகமணி, 'கம்பர் பாடல்களை விவரிக்கும் விதம் பார்த்து காந்தி யடிகள் 'எனக்குத் தமிழ் சொல்லிக் கொடுங்களேன்' என்று அவரிடம் கேட்க, 'நீங்கள் என்னிடம் தமிழ் கற்றுக் கொண்டால் மட்டும் கம்பனை அனுபவிக்க முடியாது. அடுத்த பிறவி யில் நீங்கள் தமிழராகப் பிறந்தால்தான் கம்பர் யார் என்று உணர முடியும்' என்று சொன்னவர் டி.கே.சி.


டி.கே.சி.யும் ராஜாஜியும்

ஜவகர்லால் நேரு தந்த விருந்தில் கலந்து கொண்டபோது தனக்கான பத்தியச் சாப்பாட்டைக் கையோடு கொண்டுவந்து ரசிகமணி எடுத்து வைத்துக்கொள்ள, தவறாகப் புரிந்து கொண்ட நேரு "மிஸ்டர் முதலியார் நீங்கள் வறட்டு வைதீகமா" என்று கோபமாகக் கேட்க, "நான் வைதீக மில்லை. என் வயிறு இருக்கிறதே அது வைதீக மையம்" என்று பதில் சொன் னார் டி.கே.சி. என்று எனக்குள் கோட்டோவியமாக இருந்த டி.கே.சி.-யைத் தன் உரைவழியே உயிர்ச் சித்திரமாக வரைந்து காட்டி னார் ல.ச.

கோவில்பட்டி அருகில் உள்ள இடைச்செவல் கிராமத்திற்குப் பக்கம் தான் அவருடைய சொந்த ஊர். இளமைப் பருவம் தொட்டே எழுத்தாளர் கி.ராஜ நாராயணன் அவர்களுடன் நெருங்கிப் பழகியவர் ல. சண்முகசுந்தரம். டி.கே.சி.-யை நேரில் சந்திக்க வேண்டும் என்னும் சங்கல்பத்தில் இருந்த இந்த இளைஞர்கள் குழாமில் ஒருவர். கி.ரா. முதலில் டி.கே.சி.-யைப் போய்ப் பார்த்து விட்டார். அவரு டைய விவரணைகளைக் கேட்டு உந்தப்பட்டுத் தானும் தென்காசி சென்று டி.கே.சி.-யைச் சந்தித் தார் இவர்.

"தன்னை மறந்தாள் தன் நாமம் கெட்டாள் தலைப்பட்டாள் நங்கை தலைவன் தாளே" என்று திருநாவுக்கரசர் பாடியது போல டி.கே.சி.-யின் அன்பாலும் விருந்தோம்பலாலும் ஆளுமையாலும் ஆட்கொள்ளப்பட்டார்.

ஜஸ்டிஸ் மகாராஜன், ராஜாஜி, பாஸ்கரத் தொண்டைமான் முதலிய அறிஞர் குழாத்துடன் இளமையிலேயே ஐக்கியமாகும் வாய்ப்பு இவரைச் செதுக்கியது. திருமணமான புதிதில் புது மனைவியை விட்டுவிட்டு இவர் ரசிகமணியைத் தேடி வந்துவிட, பெண்வீட்டார் இவரைத் தேடித் தென்காசிக்கு வந்த கதையை எல்லாம் பிற்பாடு இவருடன் பழகும்போது அறிந்து கொண்டேன்.

"மங்கை ஒருத்தி தரும் சுகம் எங்கள் மாத் தமிழுக்கு ஈடில்லை" என்ற பாவேந்தர் வரிகளை வாழ்க்கையாகவே வாழ்ந்து காட்டியவர் ல.ச.

ரசிகமணி மேலுள்ள ஈடுபாடு காரணமாக 'ரசனை' என்ற இலக்கிய மாத இதழைத் தொடங் கினேன். அதனை ரசிகமணியின் பிறந்தநாளில் தென்காசியில் வெளியிட்டோம். அந்த வெளி யீட்டு விழாவிற்குப் பிறகு ரசிகமணியின் பெயரர் கள் திரு.தீப.நடராஜன், திரு. தீப.குற்றாலிங்கம் குடும்பத்தினரோடு மட்டுமின்றி ல.ச.வுடனும் நெருக்கமான பழக்கம் ஏற்பட்டது.

பழந்தமிழ்ப் பாடல்களை ரசிகமணி எப்படி ரசித்துச் சொல்வார் என்பதை அவருடைய பாணி யிலேயே சொல்லிக் காட்டுவதில் இவர் வல்லவர். உண்மை என்னவென்றால், அதுபோன்ற ஆழ மான அனுபவங்கள் கொண்டவர்கள், தாங்கள் உற்ற அறிவை உலகுக்குச் சொல்லத் தவியாய்த் தவிப்பார்கள். "கடைவிரித்தேன் கொள் வாரில்லை" என்னும் தவிப்புதான்.

அத்தகைய தவிப்பை இவரிடம் நேரிலேயே கண்டேன். தொடர்ந்து இலக்கிய நூல்களை அவர் எழுதிக் கொண்டிருந்தார். இலக்கிய உரையாடல் நிகழ்ச்சிகள் நிகழ்த்துவதில் மிகுந்த ஆர்வம் கொண்டிருந்தார்.

கோவையில் மகாகவி பாரதி அறநிலையை அமைத்த திரு. ரவீந்திரன் அவர்கள் இரசிகமணி பால் கொண்ட ஈடுபாடு காரணமாக அவருடைய வெளிவராத கட்டுரைகளைத் தொகுத்து 'தமிழ்க் களஞ்சியம்' எனும் நூலை வெளியிட்டார். நாங் கள் இருவரும் சேர்ந்து ல.சண்முகசுந்தரம் அவர் களைக் கோவைக்கு வந்து எங்கள் விருந்தின ராகக் கொஞ்ச நாட்கள் இருக்கக் கேட்டுக் கொண்டோம்.

அவரும் உற்சாகமாகக் கோவை வந்து சேர்ந்தார். அப் போது ராம்நகரில் இரண்டே அறை கள் கொண்டதாக என்னுடைய அலுவலகம் இருந்தது. கோவை காந்திபுரத்தில் உள்ள லாலா தங் கும் விடுதியில் அவரைத் தங்க வைத்தோம். எங்கள் வேலைகளை எல்லாம் முடித்துக்கொண்டு அவரை எங்கள் அலுவலகத்திற்கு அழைத்து வருவோம்.


*கி.ராஜநாராயணன்*

திரு. ரவீந்திரன், திரு. நாஞ்சில் நாடன், முனைவர் ஜெயந்தஸ்ரீ பாலகிருஷ்ணன், கந்த சுப்பிரமணியம், ஜான் சுந்தர் உள்ளிட்ட பல நண்பர் கள் ஒன்றுகூடி அமர்வோம்.

ல.ச. உற்சாகமாகத் தன் ரசனைத் தமிழை மழைபோலப் பொழியத் தொடங்குவார். அனேக மாகத் திருக்குறளில் தொடங்கும் அவருடைய உரை. ரசிகமணி பாணியில் பாடலைப் பிரித்துப் பிரித்து இசையோடு பாடிக்காட்டி நயம் சொல்வார்.

இடையிடையே "எப்படி வருது பார்த்தியளா? ஒரு ஒய்யாரம் – ஒரு கும்மாளி – குதி போட்டுக் கொண்டல்லவா வருகிறது தமிழ்" என்ற சிலாகிப் பையும் சேர்த்துக் கொள்வார். ஏழு சீர்கள் கொண்ட திருக்குறள் அவர் சொல்லும்போது பதினான்கு சீர்கள் கொண்டது போல் ஒலிக்கும்.

திரு. ரவீந்திரன் இன்னொரு நல்ல காரியத் தையும் செய்தார். ஓர் ஒலிப்பதிவுக் கூடத்தில் அவரை அமரவைத்து நாங்கள் சுற்றி அமர்ந்து இருக்க, சில மணி நேரங்கள் உரையாடி ஒலிப் பதிவும் செய்துவிட்டார். அந்த ஒலிப்பதிவில்தான் ரசிகமணியின் கடைசி நிமிடங்கள் எப்படி இருந் தன என்பதையெல்லாம் ல.ச. விளக்கியிருப்பார்.

மரணத் தருவாயில் இருந்த ரசிகமணியிடம் இவர் ''எப்படி இருக்கு?'' என்று கேட்க, "சுகமா இருக்கு, குதிரை மேல போற மாதிரி இருக்கு" என்று சொல்லிச் சில நிமிடங்களில் ரசிகமணி யின் உயிர் பிரிந்ததை அவர் சொல்லும்போது, அந்த மனிதர் மரணத்தைக்கூட ரசித்திருக்கிறார் என்று மலைத்துப் போனோம்.

தமிழ்நாடு அரசின் பாடத் திட்டக் குழுவில் ல.ச. இடம்பெற்றிருந்தார். அப்போது புலவர் குழந்தை எழுதிய 'ராவண காவியம்' நூலின் சில பகுதிகளைப் பாடத்தில் வைக்கப் பலமானப் பரிந்துரை வந்தது. ''கம்ப ராமாயணம் இருக்கட்டும்; இரா வண காவியமும் இருக்கட்டும்'' என்று குழுவினர் சொன்னார்கள். உடனே ல.ச., ''கம்பராமாயணத்தை எடுத்துவிட்டு உங்கள் இராவண காவியத்தை வைத்துக் கொள்ளுங் கள்'' என்று சொல்லியிருக்கிறார்.

காரணம் கேட்டபோது, ''கல்வி என்பது தெளிவு கொடுப்பதற்

காகத்தானே தவிர குழப்புவதற்கு அல்ல. கம்பராமாயணத்தில் நேர் மறையாக விஷயங்களைப் பார்த்து விட்டு, ராவண காவியத்தில் எதிர் மறையாகப் படித்தால் மாணவர்கள் குழம்பித்தான் போவார்கள். உங்களுக்கு ராவண காவியம் வைக்க வேண்டுமென் றால் அதை மட்டும் வையுங்கள்'' என்று சொல் லவும் அந்த எண்ணம் கைவிடப் பட்டது.


பாஸ்கரத் தொண்டைமான்

நடன மேதை பால சரஸ்வதி ரசிகமணி இல்லத்திற்கு வந்தபோது, அவருக்குத் 'திருக் குற்றாலக் குறவஞ்சி' நூலை ரசிகமணி பரிசளித்தாராம். அதன் முதல் பக்கத்தில் "குற்றாலக் குறவஞ்சியே குறவஞ்சி" என எழுதி ரசிகமணி கையெழுத் திட்டிருந்தாராம். பாலசரஸ் வதியைப் பார்த்து "ஏன் திருக் குற்றாலக் குறவஞ்சி என நான் எழுதவில்லை தெரியுமா? "குற்றாலக் குறவஞ்சியே குறவஞ்சி" என்றால்தான் அது அதில் ஒரு ரிதம் இருக்கிறது'' என்றாராம் ரசிகமணி.

கோவையில் ஸ்ரீ கிருஷ்ணா ஸ்வீட்ஸ் நடத்தும் 'எப்போ வருவாரோ' எனும் ஆன்மீகத் தொடர் ஜனவரி மாதத்தில் ஒவ்வோர் ஆண்டும் நடைபெறும். அந்த வரிசையில் ஒருமுறை 'ஞானச் செம்மல் விருது' ஏற்பவர்களில் ஒருவராக ல.ச. அழைக்கப்பட்டிருந்தார்.

அவருக்குப் பெரிய அறிஞர்கள் ஆன்மீகச் சிந்தனைகளைச் சொல்வதும் ஆயிரக்கணக்கில் மக்கள் திரண்டு கேட்பதும் மகிழ்ச்சியாக இருந்த போதும் ஒரு மனக்குறை இருந்தது. வருபவர்கள் ஆன்மீகப் பாடல்களை மேற்கோள் காட்டித் தத்துவ விளக்கங்களைத் தந்து கொண்டிருந் தார்கள். அப்போது அதுபற்றி ல.ச. சொன்ன விமர் சனம் கேட்டு எனக்குத் தூக்கி வாரிப் போட்டது.

"கவியைப் பற்றி அதிகம் சொல்லணுமா இல்லையா? கவிதைக்காகத் தானே இந்தத் தத்துவம் எல்லாம். தத்துவத்துக்காகக் கவிதை இல்லையே" என்றார். பாத்திரத்துக்காகத்தான் பாலே தவிர, பாலுக்காகப் பாத்திரம் இல்லை" என்பது போல் இருந்தது அவருடைய வாதம். ரசிகமணி செய்த ரசவாதம் அப்படி அவரிடம் வேலை பார்த்துக் கொண்டிருந்தது.

குற்றாலம் அருகே மேலகரம் என்ற கிராமத்தில் அவர் வசித்து வந்தார். ஒருமுறை ரேஷன் அட்டையை அவர் தொலைத்துவிட்டார். இந்த அதிர்ச்சியில் அவருடைய பணிப்பெண் கடும் சொல் சொன்னதை அவ்வளவு ரசித்து ரசித்துச் சொல்லிக் கொண்டிருந்தார்.

ரசிகமணி உடனான அவருடைய உரையாடல்கள் பலவற்றை அவர் பகிர்ந்து கொண்டு இருந்தாலும் சான்றுக்கு ஒன்றை மட்டும் இங்கே குறிப்பிடுகிறேன்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ல.ச. "ஐந்தருவிக்குப் போகிற வழியில் ஒரு பெட்டிக் கடை இருக்கிறது. அந்தக் கடைக்காரன் ஒரு பலகை வைத்திருக்கிறான். அதில் அவன் எழுதி இருக்கிற வாசகம் நீங்கள் சொல்லும் ரிதம் உள்ளதாக இருக்கிறது. "ஓசி வெற்றிலை, இலவசப் பாக்கு, யாசக பீடி, கடன் இவை நான்கும் கண்டிப்பாய்க் கிடையாது" என எழுதி இருக்கிறான்" என்றாராம்.

இதைப் பலமுறை சொல்லக் கேட்டு ரசித்த ரசிகமணி, அந்தப் பெட்டிக் கடைக்காரனை அழைத்து வரச்சொல்லி "வேட்டி துண்டு, வெற்றிலை பாக்கு, தேங்காய், கூடவே 50 ரூபாய் பணம் எல்லாம் வைத்துக்கொடுத்து "அப்பா, நீதான் உள்ளபடியே தமிழை வளர்க்கிறாய்" என்று சொல்லிப் பாராட்டினாராம்.

மூச்சுக்கு மூச்சு, பேச்சுக்குப் பேச்சு ரசிக மணியையே சொல்லி அவரைப் போலவே ரசனை, மனிதநேயம், துணிவு முதலியனவெல்லாம் கொண்டு திகழ்ந்த வித்வான் ல. சண்முகசுந்தரம் ஏராளமான நூல்களை எழுதியிருக்கிறார். அவற்றை வெளிக்கொண்டுவர ஊக்கம் தந்தவர்களில் அருட்செல்வர் அவர்களும் முக்கிய மானவர்.

90 வயதுக்கும் மேலே வாழ்ந்து இறுதிவரை இலக்கிய இன்பத்தில் திளைத்து வாழ்ந்தார். சான்றாண்மையின் அடையாளம் ல.சண்முக சுந்தரம் என்றால் அது மிகையில்லை!

●



# கோவை முருகானந்தம் பற்றிய ஆவணப்படத்திற்கு ஆஸ்கர் பரிசு!

சென்ற பிப்ரவரி மாத இறுதியில் அமெரிக்காவின் லாஸ் ஏஞ்சல்ஸ் நகரில் 91–ஆவது ஆஸ்கர் விருதுகள் விழா நடைபெற்றது. ''பீரியட் எண்ட் ஆஃப் சென்டன்ஸ்'' என்ற குறும்படத் திற்குச் சிறந்த குறும்படத்திற்கான ஆஸ்கர் விருது கிடைத்துள்ளது.

இவ்விழாவில் தேர்விற்கு வந்த 104 குறும் படங்களில் முதல் ஐந்து இடங்களுக்குள் இந்தப் படம் தேர்வாகியது.

இந்தக் குறும்படம், கோவையைச் சேர்ந்த 'நாப்கின் இயந்திரம்' தயாரிப்பாளரான திரு. அருணாசலம் முருகானந்தம் அவர்களின் கண்டு பிடிப்பை அடிப்படையாகக் கொண்ட கதையாகும்.

அமெரிக்காவின் லாஸ் ஏஞ்சல்ஸ் நகரின் பள்ளி ஆசிரியையான மெலிஸா பெர்டன், தனது மாணவியருடன் சேர்ந்து 'தி பேட் புராஜக்ட்' என்ற விழிப்புணர்வுத் திட்டத்தைச் செயல்படுத்தி வருகிறார். உலகெங்கும் பருவமடைந்த பெண்களின் சுகாதார மேம் பாட்டிற்காக இந்த அமைப்பின் சார்பில் பாடுபட்டு வரு கின்றனர்.

இது தொடர்பாக, ஒரு விழிப்புணர்வு ஆவணப்படம் தயாரிக்க முடிவு செய்தனர். இதற் காக அமெரிக்காவின் இரானிய வம்சாவளி இயக்குநரான திரு. ரெய்கா ஸெஹ்டாப்சியுடன் இணைந்தனர். இந்தியாவில் செயல்படும் சில தன்னார்வ அமைப்புகளுடன் சேர்ந்து படம் உருவாக்கத் திட்டமிட்டனர்.

பெண்கள் ஏழ்மையினால், மாதவிலக்கு நாட் களில், சுகாதாரமற்ற துணிகளைப் பயன்படுத்தி நோய்களுக்கு ஆளாவதற்குத் தீர்வு காணும் வகையில், குறைந்த செலவில் நாப்கின்கள் தயாரிக்கும் இயந்திரத்தை உருவாக்கி, குறைந்த விலையில் நாப்கின்கள் கிடைக்க வழிவகுத்தார். இதற்காக அவர் இந்திய அரசின் 'பத்மஸ்ரீ' விருது பெற்றுக் கோவைக்குப் பெருமை சேர்த் தார். அவரது பேட்டியை ஜூலை 2016 'ஓம் சக்தி' வெளியிட்டிருந்தது வாசகர்களுக்கு நினைவிருக்கலாம்.



அவரது கதையைப் படமாக எடுக்க எண்ணியபோது, ஏற்கனவே அக்ஷய்குமார் நடிப்பில் திரு. முருகானந்தத்தின் வாழ்க்கைக் கதை 'பேட் மேன்' (Pad Man) என்ற பெயரில்



திரைப்படமாக உருவாகியதால், இந்த ஆவணப் படத்தின் கதைக்கரு மையம் மாற்றம் செய்யப் பட்டது.

நம் நாட்டின் பெரும்பான்மையான பகுதி களைப் போலவே, உத்தரப்பிரதேச மாநிலம் ஹாபுர் மாவட்டத்திலிருக்கும் 'கதிகேரா' என்னும் சிற்றூர் அறியாமை நிறைந்த பகுதி. இங்குள்ள பெண் களுக்கு மாதவிடாய்க் காலச் சுகாதாரம் தொடர் பான விழிப்புணர்வு, மிகவும் குறைவு. இங்குப் பருவமடைந்த பெண்கள் எவரும் நாப்கின்கள் பயன்படுத்துவதில்லை.

இவர்களிடையே நாப்கின்கள் பற்றிய விழிப் புணர்வை ஏற்படுத்தியதோடு, நாப்கின் பயன்பாடு தொடர்பாக அங்கு நடைபெற்ற நிகழ்வுகளைப் பதிவு செய்திருக்கிறது இந்தத் திரைப்படம்.

இந்தச் சிற்றூரில், படக்குழுவினர் சிலரது உதவியுடன் தங்கி, ரகசியமாகச் சில ஏற்பாடு களைச் செய்து, அங்கே ஒரு வீட்டில் திரு. முருகா னந்தம் உருவாக்கிய நாப்கின் தயாரிப்பு இயந் திரத்தை நிறுவிக் குறைந்த செலவில் நாப்கின்கள் தயாரித்தனர்.

அவ்வூர்ப் பெண்கள் தங்கள் வாழ்க்கையி லேயே முதன்முதலாக நாப்கின்களைப் பற்றி அறிந்து, அவற்றைப் பயன்படுத்தி, விடுதலை உணர்வடைகிறார்கள். தங்கள் சொந்தத் தேவைக்குப் போக உள்ள நாப்கின்களை, மற்ற இடங்களில் வீடு வீடாகச் சென்று பெண்களைச் சந்தித்து விற்பனை செய்தனர். இந்த நிகழ்ச்சி களையெல்லாம் இயல்பாகப் படமாக்கியுள்ளனர். இந்த ஆவணப்படத்தில் திரு. முருகானந்தமும் தோன்றுகிறார்.

இதுபற்றி, திரு. முருகானந்தம் அவர்கள் கூறும்போது, ''ஆஸ்கர் விருது கிடைக்கும் என எதிர்பார்க்கவில்லை. மாதவிலக்கின்போது பெண் கள் படும் அவஸ்தையை விளக்கவே இந்தக் குறும்படம் எடுக்கப்பட்டது. நம் நாட்டில் 34 சத வீதப் பெண்கள் மட்டுமே நாப்கின் பயன்படுத்து கின்றனர். இந்தியாவின் ஆறு லட்சம் கிராமங் களில் மூட நம்பிக்கையால் பெண்கள் நாப்கின் பயன்படுத்துவதில்லை.

ஆஸ்கர் முதலான உயரிய விருதுகள் கிடைக்கும்போது, கண்டிப்பாகப் பின்தங்கிய கிராம மக்களின் பொது சுகாதாரம் மற்றும் வேலை வாய்ப்பு அதிகரிக்கும். நாட்டில் 48.8 கோடிப்பேர் படிக்காதவர்களாக உள்ளனர். அவர்களுக்கு வேலைவாய்ப்பைத் தர இதுபோன்ற விருதுகள் அவசியம்.

நாம் செய்யும் சேவை மட்டுமே பெரிதாக வேண்டும். சேவையைப் பயன்படுத்தி நாம் பெரிய


திரு. முருகானந்தம்

வர்களாக மாறிவிடக்கூடாது. செய்யும் சேவையை உலக அளவில் கொண்டு செல்ல விருதுகள் பயன்படுகின்றன.

இந்தியாவில் 100 கோடி மக்கள் கிராமப்புறங் களில் வாழ்கின்றனர். அனைத்துப் பெண்களும் நாப்கின் பயன்படுத்துவதற்கான இலக்கை அடைய இதுபோன்ற விருதுகள் பயன்படும். நாப் கின் தயாரிப்பு மூலம், 10 லட்சம் பெண்களுக்கு வேலை வாய்ப்பு ஏற்படுத்தித் தருவதே இலக்கு'' என்று கூறினார்.

நாப்கின் தயாரிப்பு இயந்திரங்களின் விலை கோடிக்கணக்கில் இருந்ததால், நாப்கின்கள் விலை அதிகமாக உள்ளன. எனவே, குறைந்த செலவில் நாப்கின்கள் கிடைக்க, குறைந்த விலை யில் அதற்கான இயந்திரங்கள் கிடைக்க வேண் டும் என்ற நோக்கத்தில் திரு. முருகானந்தம் அவர்கள், புதிய இயந்திரத்தை வடிவமைத்து ரூ. 1 லட்சம் விலையில் பயன்பாட்டுக்குக் கொண்டு வந்தார்.

இதன் மூலம் நாடு முழுவதும் இந்த இயந் திரத்தைப் பயன்படுத்திப் பல்வேறு நிறுவனங்கள் குறைந்த செலவில் நாப்கின்கள் தயாரித்து விற் பனை செய்கின்றன. இதனால் ஏழைப்பெண்கள் நாப்கின்கள் பயன்படுத்துவது அதிகரித்தது.

திரு. முருகானந்தம் அவர்கள், ''நாம் செய்யும் சேவை மட்டுமே பெரிதாக வேண்டும், சேவை யைப் பயன்படுத்தி நாம் பெரியவர்களாக மாறி விடக்கூடாது'' என்று சொல்லியிருப்பதன் மூலம், அவர் எந்த நோக்கத்தில் இந்தச் சேவையைத் தொடங்கினாரோ, அந்த நோக்கத்திலிருந்து வழு வாமல், தான் வகுத்த நெறியில் தொடர்ந்து பயணிக்கிறார் என்பதை அறியலாம்.

கோவைக்கும், தமிழகத்திற்கும் பெருமை சேர்த்த திரு. முருகானந்தம் அவர்கள், தொடர்ந்து தமது நோக்கத்தில் வெற்றி பெற வேண்டும். நமது மாநில, மைய அரசுகள் அவரை மேலும் மேலும் கௌரவிக்க வேண்டும்.

**– ந.நி.**

# மூலநோய்க்கு நிரந்தரத் தீர்வு



மூல நோய், இன்று உலகில் 70% மக்களைப் பாதித்துள்ள நோயாகும். சிலர் முகத்தினை எப்போதும் கடுகடு வென வைத்திருப்பர். அவர்களை 'உனக்கு என்ன மூல நோயா?' என்று கேலி செய்வர்.

இப்படி வேடிக்கையாகச் சொல்லக்கூடிய மூல நோயானது, மிகவும் ஆபத்தான நோயாகும். சரியாகச் சிகிச்சை செய்யாமல் விட்டால், பிற்காலங் களில் மலக்குடல் புற்றுநோய்வரை கொண்டு சென்று விடும்.

மூல நோய், சித்த மருத்துவத்தில் எருவாய் நோய், ஆசனவாய்த் தடிப்பு, முளை நோய், அரிப்பு (மூல) நோய் என்றெல் லாம் கூறப்படுகிறது.

இந்நோய் உருவாகின்ற வழி, அதன் குறி, குணங்கள், அதைப் பரிகரிக்கும் முறை, அதனை வராமல் தடுக்கும் முறை முதலியவற்றைப் பற்றிச் சித்த மருத்துவத்தில் கூறப்பட்டுள்ளதைப் பார்க்கலாம்.

**குறிகுணங்கள் :** நோய்கள் உருவாவ தற்கு முதற்காரணம், மலச்சிக்கல் என்ற சித்தர்களின் உரைக்கேற்ப, 'நோய் களுக்கு ஆதியான மலச்சிக்கல்'தான் மூல நோய்க்கும் முதல் காரணமாகும். நோய்களுக்கு மூலமே மலச்சிக்கல்தான். உண்டவை செரிமானமாகிய பிறகு கழிவுகளை வெளியேற்றிவிட வேண்டும். கழிவை வெளியேற்றவில்லை என்றால் ஆபத்து ஆரம்பமாகிவிடும். மனிதர் களுக்கு நீடித்த மலச்சிக்கல் இருந்தால் அது மூல நோயில் முடியும்.

1. மலக்குடலி லிருந்து ஆசன வாய் வரை உள்ள கெட்ட ரத்தத்தை எடுத்துச் செல்லும் இரத்தக் குழாய்கள் (சிரைகள்) தடித்து, வீங்கி வலியை உண்டாக்குகின்றன. சில நேரங்களில் அந்தத் தடிப்பு, வீக்கம் வலியில்லா மல் இருக்கும்.

2. ஆசன வாயில் எரிச்சல், வலி.

3. மலம் கழிக்கும் போது அல்லது மலம் கழித்தபின் இரத்தம் வெளிப்படுதல், சிலருக்கு உடலில் காயம் பட்டது போல் இரத்தம் சொட்டுதல்.

4.சிலருக்கு ஆசன வாயில் சீழ் போன்ற திரவம் வடிதல்.

முதலிய குறிகுணங்கள் இருக் கும்.

பொதுவாக மலச்சிக்கலினால் மலம் வறண்டு, தீய்ந்து மலம் கழிக்கக் கடினப் பட்டு, அதனைச் சிரமப்பட்டு வெளி யேற்றும்போது, இறுகிய மலமானது பக்கத்திலுள்ள இரத்தக் குழாய்களைக் கீறி, இரத்தத்துடன் வெளியேறுவது இதன் இயல்பாகும்.

சிலருக்கு நீடித்த நிலையில் மலக் குடலின் கடைசிப்பகுதி (குதம்) வெளிப் படும். இதனைக் 'குத நெகிழ்ச்சி' என்பர்.

சிலருக்கு இரத்தக் குழாய்கள் (சிரைகள்) தடித்து ஆசன வாய்க்கு வெளியே தொங்கும். இதனை 'வெளி மூலம்' என்பர். இரண்டையும் வேறு படுத்தி அறிய வேண்டும்.

**மூலம் உருவாகின்ற வழிகள் :** 1. அதிக

நேரம் உட்கார்ந்து வேலை செய்தல். 2. மாவுப்பொருள்கள், கிழங்கு வகைகள் அதிகமாக உண்ணுதல். 3. காரம் அதிக மாக உண்ணுதல். 4. சில நேரங்களில் பெண்கள் கருத்தரித்தலின்போது, கரு வளர்ச்சியடைந்து பிரசவத்தின் போதும் உண்டாகலாம். 5. வயிறு பெருத்தலா லும் (தொந்தி), தூக்கம் கெடுதலாலும் மூலம் உண்டாகலாம்.

**மூல நோயுடன் சேர்ந்த பிற குறி குணங்கள் :** "அனில பித்த தொந்தம லாது மூலம் வராது" என்ற வரிகளுக்கு ஏற்பப் பித்தநாடி மூலநோய்களுக்கு



அதிகமாக இருக்கும். பசியின்மை, உண்ட உணவு செரிமானம் ஆகாமல் புளித்தேப்பம், நீர்வேட்கை, உடல் மெலி தல் அல்லது ஊதல், அடிக்கடி மலம் வருவது போன்ற உணர்வு, சிறுகச் சிறுக மலம் கழிதல் முதலியவை இருக்கும்.

சித்த மருத்துவத்தில் மூல நோயினை 21 வகைகளாகப் பிரிக்கின்றனர். மூல நோயினை 'நாடி பார்த்தல்' முறையில் நாடியினைக் கணித்து, அதன் வகை யினைக் கண்டறிந்து சித்த மருத்துவச் சிகிச்சை எடுக்கும்போது மூல நோயினை அறவே தீர்க்கலாம்.

நவீனக் காலத்தில் அறுவைச் சிகிச்சை செய்து குணப்படுத்தினாலும், மூல நோயானது திரும்ப வரும். சித்த மருத்துவத்தில் சிகிச்சை எடுக்கும்போது சிறிது காலம் ஆனாலும், முழுமை யாகக் குண மடையும்.



**மருத்துவம் :** மூல நோயில் வாத நாடியும், பித்த நாடியும் அளவில் அதிக மாகக் காணப்படும். எனவே, முதலில் நாடி குணங்களைத் தன்னிலைப்படுத்த முதலில் கழிச்சல் (பேதி) மருந்துகளைக் கொடுத்துப் பேதி செய்விக்க வேண்டும்.

அவ்வாறு பேதி செய்யும்போது குடலிலுள்ள பழைய கெட்ட மலங்கள் வெளிப்படும். பின் மூல நோய்க்குரிய மருந்துகளை உண்ணலாம். மேலும் வலி, எரிச்சலைப் போக்க வெளிப்பயன் பாட்டு மருந்துகளையும் பயன்படுத்த லாம்.

**உள் பயன்பாடுகளாக :** 1. துத்திக் கீரை, தாளிக்கீரை, பாலைக்கீரை, சுக் கான்கீரை, வெந்தயக்கீரை முதலிய வற்றை உணவுடன் சேர்த்து வரலாம். 2. கருணைக்கிழங்கு உணவில் சேர்த்து வர லாம். 3. வெண்டைக்காய், அத்திக்காய், அத்திப்பழம், கோவைக்காய் உணவில் சேர்த்து வரலாம். 4. யோகா சனத்தில் குக்கட ஆசனம், பவன முக்த ஆசனம் முதலிய ஆசனங்கள் செய்வதன் மூலம் மூலநோய் வராமல் தடுக்க முடியும். 5. மலச்சிக்கல் வராமல் தவிர்த்துக் கொண் டாலே மூல நோயிலிருந்து விடுபட லாம்.

இந்நோயினைப் பற்றி முழுமையாகத் தெரிந்து கொண்டு, அதற்கான சிறப்புச் சிகிச்சையையும் பெற, கோவை வரத ராஜபுரம் கஸ்தூர்பா காந்தி சித்த மருத் துவமனை மற்றும் ஆராய்ச்சி மையத்தை நேரில் அணுகலாம் அல்லது 0422 – 2580796 மற்றும் 90432 12789 ஆகிய எண்களில் தொடர்பு கொள்ள லாம். ●

கட்டுரை

# தங்கமகனே! கொஞ்சம் திரும்பிப் பார்




**வா**ழைமரம் அனைத்துப் பாகங்களினாலும், மற்றவர்களுக்குப் பயன்தருகிறது. ஒரு பசு தன் கன்றுக்கு ஊட்டுவதைவிட மானிடக் குழந்தைகளுக்கே அதிகமாகப் பாலைத் தருகிறது. இதனால் பாரதப் புத்திரர்களே! உங்களுடைய வாழ்க்கை மட்டும், ரசிகர் மன்றங் களைக் கட்டமைப்பதில் விரயமாகலாமா? கட் அவுட்களுக்குப் பாலாபிஷேகம் செய்வதில் இளமையை வீணடிக்கலாமா?

குஜராத்தில் மொரார்ஜி தேசாய் வம்சத்தில் நிலேஷ் தேசாய் என்ற இளைஞர் தோன்றினார். அவருடைய தந்தை தினகர் தேசாய் ஓர் இரயில்வே தொழிலாளி. 1974–ஆம் ஆண்டு இரயில்வே பொதுவேலை நிறுத்தத்தில் ஈடுபட்டுச் சிறைக்குச் சென்றவர். அவர் தொழிற்சங்கங் களில் ஆற்றிய தொண்டினைக் கண்டு, மகனும் இந்தச் சமுதாயத்திற்கும் பயன்படும்படியாக வாழ வேண்டும் என்று முடிவெடுத்தார்.

எனவே இந்தூரிலுள்ள ஒரு கல்லூரியில் சேர்ந்து சமூக சேவையில் (Social Work) முதுகலைப் பட்டம் பெற்றார். அஜ்மீர் 'பேர்–புட்' கல்லூரியை நடத்துகின்ற பங்கர்ராய், பத்திரிகை ஒன்றில் ஆதி வாசிகளைப் பற்றி எழுதிய கட்டுரை, நிலேஷ் தேசாய் நெஞ்சில் நெருப் பாய்க் கனன்றது. உடன் திரு. பங்க ராயைச் சந்திப்பதற்கு, அவர் வாழும் திலோனியா கிராமத்திற்கு விரை கிறார்.



**பேரா. தி. இராசகோபாலன்**

ஓர் உத்வேகத்தோடு ஓடி வந் திருக்கின்ற இளைஞனைக் கண்ட பங்கராய், அவரைப் பாமரமக்கள் – படிப்பறிவு இல்லாத மக்கள் வாழுகின்ற ஒரு கிராமத்தில் சென்று 3 மாதங்கள் தங்கி, அவர் களுடைய வாழ்க்கையை உற்று நோக்கும்படியாக வேண்டுகிறார். இச்சந்திப்பு இராமகிருஷ்ண பரமஹம்சரை விவேகானந்தர் சந்தித்த சந்திப்பைப் போல் அமைந்தது.

மத்தியப் பிரதேசத்தின் தென்மேற்கு மூலையில் 'ஜாபுவா' என்றோர் மாவட்டம் உள்ளது. 85 விழுக்காடுகள் ஆதிவாசி மக்களைக் கொண் டது. அங்கு வாழ்கின்ற ஆதிவாசிகளுக்குப் 'பில்' எனப் பெயர். அவர்கள் வாழுகின்ற வனம் வறண் டதாலும், அவர்கள் வசிக்கின்ற மண் சாரமும் சத்தும் இழந்ததாலும், அது மழை வறண்ட பூமி ஆனதாலும், அந்த மக்களுக்குக் கொலையும் கொள்ளையுமே தொழில் ஆகிப் போனது. எப் போதும் குடிவெறியில் மூழ்கிக்கிடந்த மக்களுக்கு வேட்டையாடுதல்தான் பொழுதுபோக்கு.

மிருக வாழ்க்கை வாழ்கின்ற அம்மக்களை ஈடேற்றம் செய்வதே தன் வாழ்க்கையின் இலட் சியம் என முடிவு செய்தார், 26 வயதைக் கொண்ட இளைஞராகிய நிலேஷ் தேசாய்.

1957–ஆம் ஆண்டு ஜாபுவா மாவட் டத்தில் ரெய்புரியா என்ற கிராமத்தில் 'சம்பார்க்' எனும் பெயரில் ஒரு தொண்டு நிறுவனத்தை நிறுவினார். அம்மாவட்டத்தில் ஆண்டுக்கொரு முறை நிகழும் 'பாகோரியா' என்ற திருவிழா, அவர்கள் வாழும் நெறியற்ற வாழ்க்கைக்கு ஓர் எடுத்துக்காட் டாகும். அதனை 'மண மக்கள் சந்தை' எனச் சொல்லலாம்.

அவ்விழாவில் மணமகள்கள் ஒரு வரிசையாக நிறுத்தப்படுவர். மணமகன்கள் ஒரு வரிசையாக நிறுத்தப்படுவர். எந்த மணமகனும் எதிர் வரிசையில் நிறுத்தப்பட்டிருக்கின்ற ஒரு பெண்ணை அழைத்துக் கொண்டு போகலாம். எந்தப் பெண்ணும் தான்விரும்பிய ஆடவனை அழைத்துக் கொண்டு போகலாம்.

அவர்கள் எங்கு வேண்டுமானாலும் சென்று பல நாட்கள் வாழ்ந்துவிட்டு, பின்னர் தம் சொந்த வீட்டுக்கு வருகின்ற அம்மணமக்களைக் குடும்பத்தாரும் எதிர்ப்பின்றி ஏற்றுக்கொள்வார். இந்தக் கட்டற்ற வாழ்க்கைக்கு முற்றுப்புள்ளி வைக்க நினைத்த நிலேஷ் தேசாய், அவர்கட்குக் கிளிப்பிள்ளைக்கு எடுத்துச் சொல்வது போல் சொல்லி, அதில் வெற்றியும் கண்டார்.

ஜாபுவா ஆதிவாசிகள் வாழ்வாதாரத்திற்கு, ஆறு மாதம் குஜராத்திற்குக் கூலித் தொழிலாளர்களாகச் சென்றுவிடுவர். கட்டுமானத் தொழில் அவர்கட்குக் கணிசமான வருவாயைத் தந்தது. அப்படி அவர்கள் சம்பாதித்துக் கொண்டு வந்த பொருளையெல்லாம், சாராயத்திற்கே செலவழித்து விடுவர்.

மேலும், அவர்களைச் சுரண்டுவதற்கு என்றே ஆந்திராவைச் சேர்ந்த கந்துவட்டிக்காரர்கள் ஜாபுவா மாவட்டத்தில் காத்துக் கிடந்தார்கள். ஜாபுவா மாவட்டத்தில் ஆதிவாசிகளுடைய இரத்தத்தை உறிஞ்சும் அட்டைகள் கந்துவட்டிக்காரர்கள்.

ஆதிவாசிகளுடைய அவசரத்திற்குப் பணத்தைக் கொடுத்து, ஒட்டிக்கு ரெட்டியாக வட்டியை வசூலித்துவிடுவர். குறித்த நேரத்தில் வட்டி கட்டாவிட்டால், சர்க்கஸ்காரன் சாட்டையால் விலங்குகளை அடிப்பது போல், கந்துவட்டிக்காரர்கள் மிருகத்தனமாக ஆதிவாசிகளை அடித்து நொறுக்குவர். ஆந்திராக்காரர்கள் நடத்திய கந்துவட்டிக் கடைக்குக் 'கருப்பு வங்கி' என்று பெயர்.

கந்துவட்டிக்காரர்கள் அநியாயத்தை ஒழிப்பதற்கு நிலேஷ் தேசாய் சம்பார்க் தொண்டு நிறுவனத்தின் மூலம் 'வெள்ளை வங்கி' யைத் தொடங்கினார். ஆதிவாசிகளைத் தங்கள் பணத்தை முதலீடு செய்யும்படியாகச் செய்து, அவர்களுடைய முதலீட்டிலிருந்தே தேவைக்கு எளிமையான வட்டியில் பணம் பெறுமாறு செய்தார். அதனால் கந்துவட்டிக்காரர்கள் கடையைக் கட்டிக் கொண்டு ஆந்திராவிற்கே திரும்பினர்.

ஆதிவாசிகளை முற்றாகக் கடைத்தேற்றுவதற்கு என்ன வழி எனச் சிந்தித்த நிலேஷ் தேசாய், கடைசியாகக் கல்வி ஒன்றே வழி எனக் கண்டறிந்தார். 'பனியாடி' எனும் பெயரில் மாணவர்கள் தங்கிப்படிக்கும் ஒரு பள்ளிக்கூடத்தைத் தொடங்கினார். அந்தப் பள்ளிக்கூடத்திற்கு ஆசிரியையாகத் தம் மனைவி பிரசாலியையே அமர்த்தினார்.

பிரசாலி விடுதலைப் போராட்ட வீரர்கள் குடும்பத்திலிருந்து வந்ததால், மகாத்மா காந்தியின் ஆதாரக் கல்வி அடிப்படையிலேயே கல்வித் திட்டத்தை வகுத்தார். மாணவர்களை, அவரவர் தேவையை அவரவரே பூர்த்தி செய்து கொள்ளும் படியாகச் செய்தார். பால்பண்ணை நிர்வாகத்திலும், தோட்டக் கலையிலும் மாணவர்களை வல்லவராக்கினார். இந்த முறையில் பயிற்றுவிக்கப்பட்ட மாணவர்கள் 28,500 பேர் ஆதிவாசிக் குடும்பங்களிலிருந்து இன்று நன்னிலையில் உள்ளனர்.



*கிராமவாசிகளுடன் நிலேஷ் தேசாய்*

நிலேஷ் தேசாய் பனியாடி பாடசாலையை இரவுப் பள்ளியாக்கி மாலைப்பொழுதில் முதியோர்களுக்கு எழுத்தறிவை ஊட்டினார். இதனால் தற்குறித்தன்மை அகன்றது எனலாம். மெழுகுவர்த்தி செய்தல், மூலிகைச் செடிகளிலிருந்து மூலிகைப் பொடிகளைத் தயார் செய்தல், தாவரங்களிலிருந்து ஆயுர்வேத எண்ணெய் தயாரித்தல் முதலிய தொழில்கள் ஆடவர்களுக்குக் கற்பிக்கப்பட்டன.

இரவுப் பள்ளி எதிர்பார்த்ததற்கு மேல் பலனைத் தந்ததால், நிலேஷ் தம்பதியர் மேலும் 10 கிராமங்களில் இரவுப் பள்ளிகளைத் தொடங் கினர். முதியோர் கல்வியில் ஆதிவாசிகளுக்கு ஓரளவு சிந்திக்கும் திறன் வந்தது. குடிப் பழக்கத்தை முற்றாகக் கைவிட்டனர். திருமணக் காலத்தில் பெண்களுக்கு அபரிமிதமான தொகை வழங்கும் பழக்கத்தைக் குறைத்துக் கொண்டனர்.

மேலும், யாராவது இயற்கை எய்தினால்,




அதற்காகப் பெரிய விருந்து வைத்துக் கொண் டாடும் அநாகரிகம் அம்மக்களிடையே இருந்தது. நிலேஷ் தேசாய் பக்குவமாக அம்மக்களுக்கு எடுத்துரைத்து அக்கொடுமைக்கு முற்றுப்புள்ளி வைத்தார். இன்னும் ரக்ஷாபந்தன் கட்டும்போது, சக்திக்கு மீறிய பரிசுகளைத் தரும்படி வற்புறுத்தப்பட்டனர். நிலேஷ் எடுத்துச் சொன்ன விதத்தால், அந்தப் பொல்லாங்கும் அவர்களை விட்டு அகன்றது. நிலேஷ் தம்பதியர் தந்த முதி யோர்க் கல்வியால், ஆண்களைவிடப் பெண் களிடம் அதிகமான விழிப்புணர்ச்சி தென்பட்டது.

பெண்கள் தங்களுடைய கால்களிலேயே நிற்க வேண்டும் என்ற உணர்வைப் பெற்றனர். அதனைப் பயன்படுத்தி, அவரவர்களுடைய வீட்டுக்குப் பின்புறம் ஒரு கோழிப்பண்ணை அமைத்துப் பராமரிக்கும் முறைகளை நிலேஷ் கற்பித்தார். பால்பண்ணை அமைத்துப் பால் வழங்கும் தொழிலையும் அவர்களுக்குப் போதித்தார்.

நிலேஷ் வகுத்துக்கொடுத்த திட்டத்தின்படி ஒவ்வொரு ஆதிவாசி வீட்டுக்குப் பின்னாலும் ஒரு கோழிப்பண்ணை அமைத்து, கோழிகளுக்குப் பெண்களே இஞ்செக்ஷன் போடும் முறை யினையும் கற்பித்தார். கோழிகளுக்கு நோயை உண்டாக்கும் கிருமிகள் அண்டாதவாறு பாது காக்கும் மருத்துவ முறையினையும் அப்பெண் களுக்கு அறிமுகப்படுத்தினார்.

கோழிப்பண்ணை மூலம் அவ்வூர் ஒரு தன்னிறைவு பெற்ற கிராமம் ஆயிற்று. கோழிப் பண்ணை மூலம் ஒரு குடும்பத்திற்கு ஓராண்டிற்கு ஒரு இலட்சம் ரூபாய் வருமானம் கிட்டிற்று. பால் பொருள்கள், கோழி விற்பனை மூலம் ஒரு குடும்பத்திற்கு ஒரு வாரத்திற்கு ரூ.5000 வரு மானம் வந்ததால், அது பெண்களுக்கு ATM கார்டு போலாயிற்று.

நிலேஷ், ஜாபுவா மாவட்டத்து மக்களுக்குக் கற்பித்த வாழ்க்கை முறையினால் 352 கிராமங்களிலுள்ள 35,000 குடும்பங்கள் வாழ்வு பெற்றன. கோழிகளுக்கு வரும் கொள்ளை நோயைத் தடுப்பதற்கு 75 தன்னார்வத் தொண்டர்கள், 300 பகுதி நேரத் தொண்டர்கள் முன்வந்தார் கள். வனாந்தரங்களில் எலுமிச்சை மரம் வளர்க் கும் தொழிலை ஆடவர்களுக்குக் கற்பித்தார் நிலேஷ். இதனால் 70 ஆண்டுகளாகக் குஜராத் திற்கு இடம்பெயர்ந்து, கூலித்தொழில் செய்து வந்த ஆதிவாசிகள், கூலித்தொழிலைக் கை விட்டனர்.

ஜாபுவா வானம் பார்த்த பூமி என்பதால், தண்ணீரைப் பாதுகாக்கும் மேலாண்மைத் திட் டத்தை ஆதிவாசிகளுக்கு அறிமுகப்படுததினார் நிலேஷ். ராஜீவ்காந்தி பிரதமராக இருந்த காலத்தில் நாட்டு மக்களுக்கு நல்ல குடிநீர் கிடைக்க வேண்டும் என்ற எண்ணத்தில் இந்தியா முழுவதிலிருந்தும் 10 இடங்களைச் சோதனை நிமித்தமாகத் தேர்ந்தெடுக்க இருந்தார்.

அப்பொழுது நிலேஷ் தேசாயின் ஆர்வத் தையும் தொண்டினையும் கேள்விப்பட்ட ராஜீவ் காந்தி அவர்கள், ஜாபுவா மாவட்டத்தையும் பத்தில் ஒன்றாகத் தேர்ந்தெடுத்தார். நிலேஷ் தேசாய் 3 ஆண்டுகளுக்கு அத்திட்டத்திற்குள் முழு மூச்சாக நுழைந்து அப்பகுதி மக்களுடைய குடிநீர்ப் பிரச் சனையைத் தீர்த்தார். மத்திய அரசின் பாராட் டையும் பெற்றார்.

விவசாயத்திற்குப் பயன்படுத்தும் விதைகள்



*பள்ளி மாணவர்களுக்கு மத்தியில் நிலேஷ் தேசாய்*

பலஹீனமாக இல்லாமல் வீரிய விதைகளாக இருக்க வேண்டும் என்பதற்காக ஒரு விவசாய சங்கத்தையே உருவாக்கினார் நிலேஷ். இதனால் இப்பொழுது கோதுமைகளில் 18 வகையும், நெல் வகையில் 115 வகையும், காய்கறிகளில் 140 வகையும், பண்ணைகளில் கிடைக்கின்றன.

சமூக சேவையில் வல்லுநரான பங்கர்ராயிடமிருந்து "Letter to a Teacher" (லெட்டர் டு எ டீச்சர்) என்ற புத்தகம் நிலேஷ் தேசாய் கைக்குக் கிட்டியது. அது எட்டு இத்தாலிய மாணவர்களால் எழுதப் பெற்றது. அது பள்ளி நிர்வாகம், ஏழை மாணவர்களுக்கு இழைக்கப்பட்ட தீங்குகளை எடுத்துரைக்கும் நூல். இந்நூலை ஆங்கிலத்தில் படித்து உணர்ச்சிவயப்பட்ட நிலேஷ் தேசாய், அதனை இந்தியில் மொழி பெயர்த்தார். ஆயிரக்கணக்கில் அச்சிட்ட அந்நூலை அனைவருக்கும் இலவசமாக வழங்கினார்.

பன்முகத்தன்மை கொண்ட நிலேஷ் தேசாயின் தொண்டுகளைக் கேள்விப்பட்ட பாரதப் பிரதமர் வி.பி. சிங் 1990–ஆம் ஆண்டு தேசிய இளைஞர்களுக்கான விருதை அவருக்கு வழங்கிக் கௌரவப்படுத்தினார். அதற்கடுத்து நிலேஷ் தேசாய் 6 ஆண்டுகள் ஆற்றிய தன்னார்வத் தொண்டுகளால், மத்தியப் பிரதேசத்திலுள்ள 717 கிராமங்களில் வாழும் 55,000 கிராம மக்கள் பயன் பெற்றனர்.

ஆதிவாசிகள் பயன்படுத்திய சிற்றாறுகளில் வரும் தண்ணீர் விரயமாகாமல், 13 தடுப்பரண்கள் கட்டுவித்தார். ஜாபுவா மாவட்டத்தின் நீர் ஆதாரங்களைச் சேதாரமில்லாமல் பயன்படுத்தும் நிலேஷ் தேசாயின் ஆற்றலைக் கண்டு, பாரதப் பிரதமர் மன்மோகன் சிங் நிலத்தடி நீரைப் பயன்படுத்தும் மேலாண்மைக் குழுவில் அவரை உறுப்பினராக நியமித்தார்.

நிலேஷ்தேசாயினுடைய வாழ்வு, இம்மண் பயனுற அமைந்த வாழ்வு; கடைத்தேற்றம் இல்லாதவர்களுக்கும் கடைத்தேற்றம் தந்த வாழ்வு. இந்த நாட்டின் தங்கமகன்கள் நிலேஷ் தேசாய் வாழ்வைத் திரும்பிப்பார்க்க வேண்டும். சினிமாக் கவர்ச்சியிலும் கனவுக் காட்சிகளிலும், வாழ்க்கையைத் தொலைத்துவிடக் கூடாது! வாய்த்த இப்பிறவியை அர்த்தமுள்ளதாக்க, தங்கமகன்களே! நிலேஷ் தேசாயின் வாழ்வைக் கொஞ்சம் திரும்பிப் *பாருங்கள்!*

●

கட்டுரை

ஜெய்சக்தி

# திருக்குறளும் தன்னம்பிக்கையும்



தமிழின் பெருமைக்கு மகுடமாக விளங்கும் நூல் திருக்குறள். திருக்குறளில் வாழ்வியல் கருத்துக்களும், தன்னம்பிக்கைக் கருத்துக்களும் கொள்ளை கொள்ளையாகக் குவிந்து கிடக்கின்றன.

இல்வாழ்க்கை எப்படி இருக்க வேண்டும்? பொருளாதார வாழ்க்கை எவ்வாறு இருக்க வேண்டும்? காதல் வாழ்க்கை எவ்வாறு இருக்க வேண்டும்? என்பதை அறம், பொருள், இன்பம் எனும் மூன்று பிரிவுகளாகப் பிரித்துக் கொடுத்திருக்கிறார் வள்ளுவர்.

ஒவ்வொரு மனிதனைப் பற்றியும் முழுமையாக ஆராய வேண்டுமென்றால், மூன்று கோணங்களில் ஆராய வேண்டும். அவை : எண்ணம், சொல், செயல் என்ற மூன்று நிலைகள்.

**எண்ணம்** : ஒரு மனிதனை உருவாக்குவது, வடிவமைப்பது அவனது எண்ணமே. உடல் பலமே இல்லாத ஒருவர், மிக மெல்லிய உடல் வாகு கொண்ட மனிதர்! ஆனால் அவரது ஆன்ம பலத்தால் இந்தத் தேசத்தின் சுதந்திரப் போராட்டத்தையே வடிவமைத்தார் என்பதை நாம் அறிவோம்!

அவர்தான் மகாத்மா காந்தியடிகள். ‘இன்ஸ்பையரிங் இளங்கோவன்’ என்று ஓர் இளைஞருடைய பேட்டியைக் காண நேர்ந்தது. வள்ளுவர் இவருக்கே வடிவமைத்த மாதிரி ஒரு குறள்.

“எண்ணிய எண்ணியாங்கு எய்துப; எண்ணியார்
திண்ணியர் ஆகப் பெறின்”

ஆம். வெறும் எண்ணம் மட்டும் போதாது. ‘நான் நினைச்சேன்னா நொடியில முடிச்சுடுவேன், தெரியுமா?’ என்று சொல்லிக் கொண்டே இருப்பதால் என்ன பயன்? அந்த நொடி எப்போது வருவது? எப்போது முடிப்பது?

எண்ணம் மட்டும் உறுதியாக இருந்தால், அது நிறைவேறுவதற்கான வழிமுறைகள் கண்டறியப்படும். சரி, அப்படி எண்ணத்திலே திண்ணியராக இருந்தால் எவ்வளவு தூரம் போகலாம்? எவ்வளவு தூரம் வேண்டுமானாலும் போகலாம்.

ஒரு குளத்தில் தாமரை மலரும் போது அது நீர்மட்டத்துக்கு


இன்ஸ்பையரிங் இளங்கோவன்

மேலேதான் இருக்கும். நீர்மட்டம் உயர உயர தண்டின் மட்டம் உயர்ந்து கொண்டே இருக்கும். அதுபோல உள்ளத்தின் உயர்வைப் பொறுத்து வெற்றியின் உயரமும் அமையும். இதைத்தான் வள்ளுவர்....

"வெள்ளத் தனைய மலர்நீட்டம் மாந்தர்தம்

உள்ளத் தனையது உயர்வு"

எண்ணம் எப்போதும் உயர்வான தாகவே இருக்க வேண்டும். சில வகை யான எண்ணங்கள் பாதைகளை அடைத்துவிடும்.

'இன்ஸ்பையரிங் இளங்கோவன்' என்ற அந்த இளைஞருடைய பேட்டி யைத் தொலைக்காட்சியில் காண நேர்ந்தது. இரண்டு கண்களும் இல்லாத இளைஞர். ஆனால் தமிழிலும் ஆங்கிலத்திலும் புலமையை வளர்த்துக் கொண்டு மோட்டிவேஷனல் டாக்ஸ் அதாவது மனநல மேம்பாட்டுக்கு ஏற்ற வகையில் உரையாற்றுபவராக உருவாகி உள்ளார்.

'ஆகா... நமக்கு இப்படி ஆகி விட்டதே...' என்று எண்ணாமல், வேறு வழியாகத் தன்னுடைய திறமைகளை வளர்த்துக் கொண்டுவிட்டார். இதைத் தான் வள்ளுவர் இப்படிக் கூறுகிறார் : "உள்ளற்க உள்ளம் சிறுகுவ"

'எதிர்மறையான எண்ணங்களுக்கு இடம் கொடுக்கவே கூடாது. நேர்மை யான எண்ணங்களுக்கு மட்டுமே மனதில் இடம் கொடுக்க வேண்டும்' என்கிறார். இன்னொரு இடத்தில், 'உள்ளுவதெல்லாம் உயர்வுள்ளல்' என்கிறார்.

நினைப்பதும் உயர்வானதாக இருக்க வேண்டும் என்றால், எண்ணம் மட்டும் சிறந்தால் போதுமா? எல்லாம் நடந்து விடுமா? தீவிரமான எண்ணம் ஆழ்மனதில் பதிந்து, பிரபஞ்சத்துடன் தொடர்பு கொண்டு வாய்ப்புகளை ஏற் படுத்திக் கொடுக்கிறது என்ற எண் ணத்தை முதலில் சொன்னார் டாக்டர் எம்.எஸ்.உதயமூர்த்தி.

அதை உளவியலாளர்கள் ஒத்துக் கொள்கிறார்கள். எனவே எண்ணமே சொல்லாக உருவாகிறது.

**சொல் :** எண்ணங்கள்தான் சொல் லாக வடிவெடுக்கின்றன. ஒரு செயலை முன்னெடுத்துச் செல்லும் முன்பு, ஒரு திட்டமாக வடிவப்படுத்துதல் வேண்டும்.

உதாரணமாக, ஒரு தொழில் தொடங்க விரும்புகிறோம். அதற்காக ஒரு வங்கியின் உதவியை நாடுகிறோம் என்றால் அங்கே ஆயிரத்தெட்டுக் கேள்விகள் கேட்பார்கள். அப்போது நம் திட்டத்தை விளக்குவது – அதுவும் திறம்பட விளக்குவது மிகவும் அவசியம்.

வங்கி அதிகாரிகள் கேள்வி கேட்கும்போது உளறிக்கொட்டினால்.... 'ஓகோ! இவரிடம் தெளிவு இல்லை. இவருடைய திட்டமும் அதுபோலத் தான் இருக்கும்' என்ற அதிருப்தியான மனநிலையைத்தான் அடைவார்கள். அதனால்தான் வள்ளுவர் சொல்கிறார்.

"சொல்லுக சொல்லைப் பிறிதோர்சொல்

அச்சொல்லை

வெல்லும்சொல் இன்மை அறிந்து"

நாம் சொல்கிற சொல், வெல்லும் தன்மையுடையதாக இருக்க வேண்டும். அவர்களால் மறுக்கவே முடியாததாக இருக்க வேண்டும். இது வங்கிக் கடனுக்கு மட்டுமல்ல; வாழ்க்கையில் பிற சூழ்நிலைகளுக்கும் பொருந்தும். இதற்காக வளவளவென்று விளக்கிக் கொண்டே இருக்கக் கூடாது. சுருங்கச் சொல்லி விளங்க வைக்க வேண்டும். விளக்கமாகச் சொல்ல வேண்டிய இடத் தில் விளக்கமாகச் சொல்ல வேண்டும்.

திட்டங்களை 'காப்ஸ்யூல்' என்பார் களே, அதுபோல மாத்திரை வடிவில்

தருவதற்கும் தெரிய வேண்டும். ப்ராஜக்ட் என்பது போல ஒரு திட்ட வடிவாகவும் கொடுக்கத் தெரிய வேண்டும்.




அப்படிப்பட்டவர்களைத்தான் 'சொலல் வல்லன்' என்கிறார்கள். இதனை வள்ளுவர் 'சொலல் வல்லன் சோர்விலான் அஞ்சான் அவனை; இகல் வெல்லல் யார்க்கும் அரிது' என்கிறார். இது அடுத்த கட்டத்திற்குப் போகிறது.



எம்.எஸ். உதயமூர்த்தி

**செயல்** : சொல்லத் தெரிந்தவர்கள் சிலர் சொல்லிக் கொண்டே இருப்பார்கள். செயலில் இறங்க மாட்டார்கள். 'வாய்ச்சொல்லில் வீரரடி' என்றானே பாரதி. அதுமட்டுமல்ல; செய்கிற மற்றவர்களையும் பார்த்து, 'இவன் என்னத்தைச் செய்தான்? நான் மட்டும் இறங்கி இருந்தேன்னா நடந்திருக்கிறதே வேற. நம்ம லெவலே வேற' என்று வாய்ப்பந்தல் போடுவார்கள்.

ஒரு திட்டத்தை எண்ணம், சொல் என்ற நிலை தாண்டி, செயல் என்ற கட்டத்திற்குக் கொண்டு செல்வதற்கு மனத்திட்பம் வேண்டும். சோர்வற்ற தன்மை வேண்டும். இதைத்தான் முந்தைய குறளிலே வள்ளுவர் சொன்னார். இன்னும் சொல்கிறார்.

"வினைத்திட்பம் என்பது ஒருவன் மனத்திட்பம்

மற்றைய எல்லாம் பிற"

இது ஒரு வட்டம்போல இருக்கிறது அல்லவா? இங்கே வினைத் திட்பம் என்று சொல்லும்போது மனத்திட்பம் வந்து விடுகிறது அல்லவா?

எனவே, செயலில் இறங்குவதற்கு மனத்திட்பம் வேண்டும். எதை எதைத் தள்ளிப் போடலாமோ, அதை அதைத் தள்ளிப் போடலாம். எதைஎதை உடனடியாகச் செய்ய வேண்டுமோ, அதை அதை உடனடியாகச் செய்ய வேண்டும்.

பத்துப் பேருக்கு விருந்தளிக்கும்போது, இன்று வேண்டாம் நாளை என்று முடிவு செய்யலாம். ஆனால் பற்றி எரிகிற வீட்டை வேடிக்கை பார்த்துக் கொண்டு நிற்கக் கூடாது.

இதைத்தான் வள்ளுவர்,

"தூங்குக தூங்கிச் செயற்பால

தூங்கற்க

தூங்காது செய்யும் வினை"

என்றார்.

செயலில் இறங்கும்போதே நன்றாக ஆலோசித்து இறங்க வேண்டும். இதனை இப்படிக் கூறுகிறார் :

"எண்ணித் துணிக கருமம் துணிந்தபின்

எண்ணுவம் என்பது இழுக்கு"

ஆரம்பிச்சுட்டு 'அப்புறம் பாத்துக்கலாம்!' என்று நினைக்கவே கூடாது. வழியில் தடங்கல் ஏற்படும்போது, 'அடடா... இதை நான் எதிர்பார்க்கவில்லையே. நான் என்னமோ நினைச்சுட்டு ஆரம்பிச்சுட்டேன். இது இப்படியாகும்னு நான் என்னத்தைக் கண்டேன்' என்று நொண்டிச் சமாதானங்கள் சொல்லிக் கொள்ளக் கூடாது.

செயலுக்கான பொருள், செய்வதற்குத் தேவையான கருவி, காலம், எந்த விதமான செயல் செய்வதற்கு வேண்டிய இடம்... இவற்றையெல்லாம் தீர்மானித்துக் கொண்டு இறங்க வேண்டும்.

"பொருள்கருவி காலம் வினைஇடனொடு ஐந்தும்

இருள்தீர எண்ணிச் செயல்"

என்றார் வள்ளுவர்.

பொருளியல் முழுக்க இந்த நான்கு வரிகளில் கொண்டு வந்து விடுகிறார் வள்ளுவர்.

எனவே, தன்னம்பிக்கைக் கருத்துக்களையும் வழிகாட்டும் கருத்துக்களையும் திருக்குறளிலே நிறையத் தெளித்திருக்கிறார் வள்ளுவர்.

நமக்குத் தேவையானது எதுவோ அந்தக் கருத்தை, அந்தப் பொக்கிஷப் பெட்டியிலே இருந்து எடுத்துத் திறமையாகக் கையாள்வது நம் கையில்தான் இருக்கிறது!

ஆன்மிகம்

# குடிமல்லம் பரசுராமேஸ்வரர் ஆலயம்


கருவறையில் உள்ள பரசுராமேஸ்வரலிங்கம்

ஆந்திரா மாநிலம், சித்தூர் மாவட்டத்தி லுள்ள திருப்பதிக்குக் கிழக்கே உள்ள ரேணி குண்டா நகருக்கு அருகில் பாப்பாநாயுடு பேட்டை என்ற ஊருக்கு வெகு அருகில் உள்ள ஒரு சிறிய கிராமம் குடிமல்லம். திருப்பதியிலிருந்து 14 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. திருப்பதியிலிருந்து அங்கு சென்றுவரப் பேருந்து வசதியுள்ளது. சிறிய கிராமமாக அது இப்போது இருந்தாலும், ஆன்மீக உலகில் அது ஒரு முக்கியத் தலமாக விளங்கு கிறது!

ஆழ்ந்த பக்தியுடனும், சிற்பக்கலை நுணுக்கத் துடனும் எழுப்பப்பட்ட ஆலயங்கள் காலப்போக்கில் சிதிலமடைந்தன. அவை பின்னர் புதுப்பிக்கப் பட்டன. அப்படிப் புதுப்பிக்கப்பட்டுச் சீரமைக்கப் பட்ட ஆலயங்களில் குடிமல்லம் சிவாலயமும் ஒன்று.

பேருந்து அந்த ஆலயத்தின் மேற்குப் பார்த்த பிரதான வாயிலின் முன் நிற்கிறது. எனவே அதிக தூரம் நடக்க வேண்டிய சிரமம் இல்லை. அந்த ஆலயத்தை 'பரசுராமேஸ்வரர் ஆலயம்' என்று அழைக்கிறார்கள்.

நான்கு புறமும் உள்ள அழகிய சுற்றுச்சுவர் களுக்கு நடுவில் அமைந்துள்ள ஆலயமும் அந்த ஆலயத்தைச் சுற்றி அமைக்கப்பட்டுள்ள புல்வெளிகளும், நடைபாதைகளும் தொல் லியல் துறையால் நன்கு பராமரிக்கப்பட்டு வருகின்றன.

**அகழ்வாராய்ச்சிகள் :** 1956 ஆம் ஆண்டிற்கு முன்புவரை அந்த ஆலயப் பகுதி தமிழ்நாட்டில் தான் இருந்தது. மொழிவாரியாக மாநிலங்கள் பிரிக்கப்பட்டபோது, அப்பகுதி ஆந்திரா விற்குச் சென்றுவிட்டது.

தொல்லியல் ஆய்வாளர்களின் கண்டு பிடிப்பின்படி அங்கு சிவலிங்கத் திருமேனி இந்தியாவிலேயே மிகமிகப் பழமையானது என்று சொல்லப்படுகிறது. மேற்கொண்டும் நடந்த அகழ் வாராய்ச்சியில் அங்குக் கிடைத்த சிவப்பு நிறம் கொண்ட மண் பாண்டங்கள், ஓடுகள் மற்றும் மிகப்பெரிய அளவிலான 42 அங்குல நீளம், 21 அங்குல அகலம், 9 அங்குல உயரம் கொண்ட செங்கற்கள் கி.பி. இரண்டாம் நூற்றாண்டிற்கு முற்பட்டவை எனக் கண்டறியப்பட்டுள்ளன.

அந்த ஆலயச் சுவர்களிலும் மேற்குப்புற வாயி லின் அருகே பார்வைக்கு வைத்துள்ள கல்வெட்டு களிலும் உள்ள எழுத்துகள் மிகவும் தொன்மை யானவை. பல கல்வெட்டுகள் காணப்பட்டாலும் அந்த ஆலயத்தை முதலில் கட்டியது யார் என்ற விவரங்கள் இல்லை. பல்லவர், கங்கா பல்லவர் கள், சோழர்கள் எனப் பல மன்னர்களால் தங்கள் ஆட்சிக் காலங்களில் பல காலகட்டங்களில் கட்டப்பட்டது என்று சொல்லப்படு கிறது.

என்.ஆர். ஜெயசந்திரன்


தெற்குப்புற வாசலில் யானை வடிவில் அமைந்துள்ள கோபுரம்

அந்த ஆலயத்தால் வழங்கப்பட்ட சிறு குறிப்பு களின்படி, அந்த ஆலயம் இந்தியாவிலேயே முதலாவது சிவாலயம் என்றும் 2000 ஆண்டுகள் பழமையானது என்றும் அறியப்படுகிறது.

**ஆலய அமைப்பு :** சுவர்ணமுகி ஆற்றின் கரையில் அமைந்துள்ள அந்த ஆலயக் கருவறை யில் உள்ள சிவலிங்கத் திருவுருவச் சிலை கருமை கலந்த காவி நிறம் கொண்ட கல்லால் வடி வமைக்கப்பட்டுள்ளது. மூல விக்ரகம் ஆறு அடிப் பள்ளத்தில் அமைக்கப்பட்டுள்ளது.

மற்ற ஆலயக் கருவறைகளில் உள்ள மூலவர் சிலைகளை நாம் நேருக்கு நேராகத் தரிசிக்க முடியும். ஆனால், அந்த ஆலயத்தில் உள்ள லிங்கத் திருமேனியைத் தாழ்ந்த நிலையில்தான் தரிசிக்க முடிகிறது. ஆலயக் கருவறை சிவலிங்க வடிவத்திலும், ஆலயக் கோபுரம் யானை வடிவத் திலும் உள்ளன. கருவறையின் பின் புறம் யானையின் பின்புறம் போல வடிவமைக்கப்பட்டுள்ளது.

**லிங்கத்தின் சிறப்பு :** கருமை கலந்த காவி நிறம் கொண்ட கல் லால் ஆன சிவலிங்கத் திருமேனி யின் உயரம் ஐந்து அடி. குறுக்களவு ஒரு அடி. வீரம் கொண்ட வேடன் ஒருவனின் உருவம் நின்ற நிலை யில் உள்ளது போலவும் உருவம் வலுவான அசுரன் ஒருவனின் இரு தோள்களின் மேல் நிற்பது போலவும் காட்சியளிக்கிறது.

அந்த அசுரன் போல வடிவம் கொண்டவர் பிரம்மா என்றும், அதன் மேலுள்ள உருவம் ஆடை எதுவும் அணியாத நிர்வாணக் கோலத்தில் உள்ள உருவம் பரசுராமரின் உருவ மென்றும் இடது கையில் கமண்டலமும், வலது கையில் ஒரு மான் தொங்குவது போலவும், அவரது இடதுப்புறத்தில் ஒரு கூர்மையான பரசு போல ஆயுதமும் காணப்படுகிறது.

அவருடைய தலையில் ஜடாமுடி, இரண்டு காதுகளில் பல வகையான வளைய ஆபரணங்கள் உள்ளன. மேலும் இரண்டு காதுகளிலும் இரண்டு பெரிய வளையங்கள் உள்ளன. சிவலிங்கக் குறியிலிருந்து சிவபெருமான் நின்ற நிலையில் காட்சியளிக்கிறார். அவருடைய தோற்றம் தட்சிணாமூர்த்தியாகவும், பிட்சாடனமூர்த்தியா கவும் உள்ளதாக அகழ்வாராய்ச்சியாளர்கள் கூறு கின்றனர்.


ஆலய வளாகத்திலுள்ள கல்வெட்டு

**அறுபது ஆண்டுகளுக்கு ஒரு முறை நடக்கும் அதிசயம் :** இக் கோயில் சுவர்ணமுகி ஆற்றின் கரை யில் அமைந்துள்ளதால் நீர்வளமும், நிலவளமும் அங்கு செழித்திருக் கிறது. அறுபது ஆண்டுகளுக்கு ஒருமுறை சுவர்ணமுகி ஆற்றின் நீர் அந்த லிங்கம் அமைந்துள்ள கருவறையினுள் வருகிறது. அந்த நீர் வருவதற்கு ஏற்றவாறு கரு வறையின் இடதுபுறத்தில் துவாரம் அமைக்கப்பட்டுள்ளது.

பதினான்கு ஆண்டுகளுக்கு முன்பு 2005 ஆம் ஆண்டு டிசம்பர் 4

ஆம் தேதி ஞாயிறன்று காலை 6 மணி அளவில் சுவர்ணமுகி ஆற்றின் நீர் கருவறைக்குள் வந்து லிங்கத்தின் இடுப்புப் பாகம் வரை நிரம்பிவிட்டது. அப்பொழுது ஆலய அர்ச்சகர்கள் அன்று வெளி வந்த நீரைக் குடங்களில் நிரப்பிப் பக்தர்களுக்குத் தீர்த்தப் பிரசாதமாக வழங்கினர். மதியம் 2 மணி அளவில் நீர் வருவது நின்றுவிட்டது.

அந்த ஆலயத்தின் வெளியே வடக்குப் பகுதியில் சூரிய பகவான் மேற்குத் திசையைப் பார்த்தவாறும், அவருக்கு எதிரே சற்றுத் தள்ளி ஆனந்தவள்ளி சன்னதி கிழக்கு நோக்கியும் உள்ளன. ஆலயத்தின் கிழக்குப் பக்கம் வாசல் இல்லை. கொடிக் கம்பமும் நந்தியும் அமைந் துள்ளன. கிழக்குப் பக்கமிருந்து மூலவரைத் தரிசிக்க ஜன்னல் உள்ளது.

சூரியன் வடக்குத் திசையி லிருந்து தெற்குத் திசையை நோக்கிப் பயணிக்கும் ஆரம்ப நாட்களில் தை மாதம் கருவறையில் உள்ள மூலவரின் மீது சூரியக் கதிர்கள் படுகின்றன.

கருவறையில் அமைந்துள்ள மூலவர் பரசுராமேஸ்வரர் பூமியின் மேற்பரப்பிலிருந்து ஆறு அடிப் பள் ளத்தில் உள்ளதால், அந்த ஊர் ஆரம் பத்தில் ‘குடிபள்ளம்’ என்றே அழைக் கப்பட்டது. பின்னர் இப்பொழுது அப் பெயர் ‘குடிமல்லம்’ என்று அழைக் கப்படுகிறது. ‘குடி’ என்று தெலுங்குச் சொல்லுக்கு ‘ஆலயம்’ என்று பொருள்.

**காமாக்யா ஆலயம் :** குடிமல்லத்தில் சிவலிங்கத்தை மற்ற சிவாலயங்களில் இல்லாத வகையில் வேறு வடிவில் வழிபடுவதுபோல அன்னை பராசக்தியையும் வேறு வடிவத்தில் வழிபடும் வழக்கத்தை அஸ்ஸாம் மாநிலத்தில் உள்ள காமாக்யா ஆலயத்தில் காணலாம்.

அஸ்ஸாம் மாநிலம் பிரம்மபுத்திரா நதியின் தென்திசையில் அமைந்துள்ள கௌஹாத்தி நகரில் நீல்பர்வதம் என்ற மலையின் மீது ‘காமாக்யா’ ஆலயம் அமைந்துள்ளது. அங்கு குடிகொண்டுள்ள அம்பிகையை காமேஸ்வரி, காமரூபினி, காமாக்யா என்று அழைக்கின்றனர்.

**அன்னையின் வடிவம் :** அன்னை பார்வதி யின் யோனி பாகம் விழுந்த இடமாக அத்தலம் கருதப்படுகிறது. சக்தி பீடங்கள் அனைத்திலும் அதுவே முதன்மையானது. இத்தலத்தில் அன்னை பராசக்திக்குச் சிலை ஏதும் இல்லை. தேவியின் யோனியே சக்தியின் வடிவமாக வணங்கப்படு கிறது.

ஆலயத்தின் உள்ளே அழகான திருக்குளம் ‘சௌபாக்ய குண்ட்’ என்ற பெயரில் உள்ளது. ஆலய மைய மண்டபத்தின் ஒருபுறம் தாழ்வான குகை போன்ற அமைப்பு உள்ளது. அதில் நுழைந்து பத்துப் படிகள் கீழே இறங்கினால், புனிதமானக் கருவறையைத் தரிசிக்கலாம். அங்கு முப்பத்திரண்டு அங்குல நீளத்தில் முக்கோண மாக அமைந்துள்ள தொட்டியின் மையத்தில்தான்


ஆலயத்தின் மேற்குப்புற வாசல்

கல்லால் வடிவமைக்கப்பட்ட யோனி அமைப்பு உள்ளது.

நாள்தோறும் 108 செம்பருத்தி மலர்களால் ஆன மாலையை அந்த யோனி போன்ற அமைப் பிற்குச் சூட்டி வணங்குகிறார்கள். அந்தப் பகுதி வெளியே தெரியாமலிருக்க அந்தத் தொட்டியிலே எப்பொழுதும் நீர் நிரம்பியிருக்கும். அத்தொட்டி யின் அருகிலேயே நீர் சுரக்கிறது.

திருப்பதி செல்பவர்கள் தவறாமல் குடிமல்லத் திலுள்ள இந்தியாவிலேயே மிகமிகப் பழமையான பரசுராமேஸ்வரர் ஆலயத்தைத் தரிசித்து, நம் முன்னோர்களின் தொலைநோக்குப் பார்வையை யும் ஆன்மீக உணர்வையும் எண்ணிப் பெருமைப் பட வேண்டும். ●

சிறுகதை

# பாவெச்சோறு

புராதன இடிபாடுகளுக்கிடையே நூற்றாண்டுப் பழமையான வேப்ப மரத்தடியில், தலைக்கு மேல் ஓங்கிய வீச்சரிவாளோடும், எண்ணெய் பூசிய பளபளப்பான கருத்த உடம்போடும், கோபக்கனல் வீசும் விழிகளோடும் எழுந்தருளியிருந்தார் முத்துக் கருப்பணசாமி. மேலே வேப்ப மரக்கிளையில் ஒரு குடையைப் போல் மலைத் தேன்கூடு. ம்ம்... ம்ம்... என்ற ஓயாத ரீங்காரத்துடன் அனைவரையும் அச்சமூட்டிக் கொண்டிருந்தது.



கருப்பணசாமிக்குச் சற்றும் குறையாத ஆகிருதியோடும், மிரட்டும் விழிகளோடும், வெளியே மண்டியிட்டுக் கையேந்தி வீற்றிருந்தது மகாமுனி.

அவரவர் கிடாய்க்கு மஞ்சள் நீர் தெளித்துத் துலுக்குக் கேட்பதும், துலுக்கிய கிடாயை ஒரே வெட்டாய் வெட்டிப் பீறிடும் ரத்தத்தை மகாமுனியின் ஏந்திய கைகளில் விடுவதும், பின் தரதரவென இழுத்துப்போய் மரத்தில் தலைகீழாய்க் கட்டித் தொங்கவிட்டுத் தோலை உரிப்பதுமாய் இருந்தது கூட்டம். இன்று விசேச நாள் ஆனதால் கோயிலில் நிறையக் கிடாய் வெட்டு.

ஓர் ஓரமாய் போதை தலைக்கேறிப் போய்க் கோபாவேசத்தோடு நின்று கொண்டிருந்தான் துரைசாமி.

எத்தனை முறை மஞ்சள் நீர் தெளித்தாலும் ஒரு துலுக்குக்கூடத் துலுக்காமல் மகாமுனியையே முறைத்துப் பார்த்தபடி நின்று கொண்டிருந்தது அவனுடைய கிடாய்...

"என்ன நெனைச்சுக்கிட்டுக் கெடாயப் புடுச்சுக் குடுத்தாளோ... உங்க ஆயா... பழிகாரி வளத்துன கெடா... பழிவாங்கறாப்பல நிக்குது பாருங்க..." பத்துப் பேருக்குக் கேட்கும் குரலில் படீரென்று சொன்னாள் அவன் மனைவி.



**"ஆடுகள் மே... மே... என்று கத்தவும் விசுக்கென்று எழுந்தாள். 'இந்நேரம் கெடா வெட்டிச் சமையலும் ஆகியிருக்கும். கெடா நல்லாத் துலுக்குச்சோ என்னமோ தெரியலியே... சாமீ... என்ன குத்தங்குறை இருந்தாலும் ஏத்துக்கிட்டு நீதா எம்மக்களக் காப்பாத்தோணும்"**



ஊர் ஒரம்பரை எல்லாம் மகளுக்கு முடியிறக்கிக் காது குத்து... கெடாவிருந்துன்னு அழைச்சாச்சு... இந்தக் கெடா ஒரு துலுக்குத் துலுக்க மாட்டீன்னு வீம்பா நிக்குது... துலுக்காத கெடாய எப்படி வெட்டறது... வேற கெடா வாங்கி வெட்டலாம்னு பெருசுக தொணதொணக்குதுக...

வேற கெடா வாங்க நாலாயிரத்துக்கு எங்க போறது...

"ஏண்டா தொரையா, சாமிக்குக் கோரிக் கதீது பாக்கி வச்சிருக்கையா, நல்லா ரோசன பண்ணிப் பாரு..." என்றார் பெரியப்பா...

"கோரிக்க என்ன கோரிக்க!" பெத்த தாய உட்டுப்போட்டு அவ வளத்துன கெடாயப் புடுச்சாந்து வெட்டறேன்; துலுக்குன்னா துலுக்குமா...

செல்லாத்தா சாமிக்குன்னு பாத்துப் பாத்து வளத்துன கெடாய், அவ வந்து ஒரு கை தண்ணி

தெளிச்சா பலபலன்னு துலுக்கிறும்...

"அதெல்லாம் ஆகற கதையா... இப்பவே லேட்டாயிருச்சு... பக்கத்துல பெரிய மூப்பங்கிட்ட ஒரு கிடாய் இருக்குது... அதப் புடுச்சாந்து வெட்டி ரலாம்" என்றான் கணேசன்.

இவனுக்கு 'சுருக்' என்றது... மூப்பனுக்குச் சுளையாகப் பணம் கொடுக்க வேணுமே...

இனிமேலும் பேசாமல் இருந்தால் கதைக் காகாது என்று நினைத்தவன்... "டேய் வெள் ளையா... அந்தக் கெடாய நல்லா இழுத்துப் புடிடா... துலுக்காத கெடாய வெட்டினா சாமி தலையத் தூக்கிருமா... அதையும்தான் பாப்பமே..." என்று பக்கத்தில் கிடந்த அரிவாளை எடுத்து ஒரே வெட்டாய் வெட்டியவன்... "ஒரு சொட்டு ரத்தம் மகாமுனி கைல உடப்படாது... எல்லாத்தையும் புடுச்சுப் பொரியல் வைங்க" என்ற வாறு அரிவாளை வீசி எறிந்தான்.

அங்கே! கடவுப் படலை நீக்கிக் கண்ணுக் கெட்டிய தூரம் வரை பார்ப்பதும் முகம் சோர்ந்து வீட்டுக்குள் போவதுமாய்த் தவித்துக் கொண்டி ருந்தாள் செல்லாத்தா...

கடைசி நேரத்திலாவது மகன் மனம் மாறியோ, நாலு பேர் சொல் பேச்சுக்குக் கட்டுப்

தனக்கும் மகனுக்குமான சின்ன மனஸ் தாபத்தை ஊதி ஊதிப் பெரிதாக்கி நெருப்பாய் எரிய விட்டுக் குளிர் காயும் மனைவி வீட்டு மனிதர்களை நம்பும் மகன் தன்னை உதாசீனப் படுத்துவதை அவளால் தாள முடியவில்லை!

இவன் நல்லாருக்கோணும், நாலு பேரு மதிக்கறாப்பல இருக்கோணும்னுதான நாம் நெனச் சோம்... அதுக்காக நாலு புத்திமதி சொல்லப் படாதா... நினைத்து நினைத்து மாய்ந்து போனாள்.

அச்சு அசலாய்த் தன்னைப் போலவே இருக்கும் பேத்தியை நாலு பேர் பார்க்க அள்ளி யெடுத்து உச்சி முகரவும்... எப்படியும் மகன் வந்து கூப்பிடுவான் என்ற நம்பிக்கையில் தான் வாங்கி வைத்த மோதிரத்தை, பேத்தியின் பிஞ்சு விரலில் அணிவித்து அழகு பார்க்க மனசு ஏங்கியது.

தாயையும் மகனையும் பிரிக்காமல் தன்மை யாய்க் குடும்பம் நடத்தும் பெண்தான் வேண்டும். வசதி வாய்ப்புக்கூட வேண்டாம் என்றுதான் மல்லிகாவைக் கட்டியது...

ஆனால் அவளோ, வந்த நாள் முதலாய் எடுத்தெறிந்து பேசினாள். வார்த்தைகளுக்கு விஷம்



## சுரபி விஜயா செல்வராஜ்

பட்டோ, தன்னை அழைத்துப்போக வருவான் என்று நம்பினாள்.

"உம்பட கையால ஒரு உருண்ட சோறாவது வாங்கித் தின்னாத்தான் வயிறே ரொம்புதுன்னு வாங்கித் திம்பானே இந்த நாயி... இன்னிக்கு ஊரையெல்லாம் அழைச்சு என்னயத் தள்ளி வச்சு மூக்கறுத்துப் போட்டானே" பெற்ற வயிறு உலை யாய்க் கொதித்தது...

பெரிய மச்சாண்டார், "அம்மாவ எதுக்கும் ஒரு வார்த்த போய்க் கூப்பிட்டிரு தொரை"ன் னதுக்கு, 'அம்மாவா வந்தா வரட்டும், நா போயிக் கூப்பிட மாட்டேன்'னுட்டானாம்...

பெத்த பயங்கூட என்ன வீம்புன்னு, கிளம்பிப் போகலாம்தான்... அங்க அவம் பொண்டாட்டி நாலுபேர் எதுக்க காரித் துப்புவாளே...

வாசற்கதவை ஒருக்களித்துச் சார்த்திவிட்டு, தடவி வீசினாள். பேச்சுக்குப் பேச்சு "முண்டச்சி" என்றாள்.

தட்டிக்கேட்ட புருசனை நடுரோட்டில் நின்று கொண்டு மானம் கெடப் பேசினாள். தாலியைக் கழற்றி வீசி எறிந்துவிட்டுப் போனவளை, நடை யாய் நடந்து நாலு பேரை வைத்துப் பேசி அவளை அழைத்து வருவதற்குள் கதிகலங்கிப் போய் விட்டது செல்லம்மாவுக்கு!

"எனக்கு நாலு உருப்படி ஆடு மட்டும் போதும், ஆண்டவன் புண்ணியத்துல கைகால் நல்லா இருக்குது. நாலு காட்ல கூலி செஞ்சா எம்பொழப்பு ஓடிடும்" என்று தனியாய் வந்துவிட்டாள்.

அப்போதெல்லாம் "என்னம்மா பண்றே... இன்னிக்கு என்ன சாப்பாடு" என்று அடிக்கடி வீட்டுக்கு வந்து பேசிவிட்டுப் போவான்.

இந்த ஒரு வருடமாய் அவன் நடவடிக்கை

சுத்தமாய்ச் சரியில்லாமல் போயிருந்தது... வந்த போதெல்லாம், 'நூறைக் குடு, இருநூறைக் குடு... குட்டி வித்தியே, பணத்தைக் குடு' என்று நச்சிப் பிடுங்கிப் போனான்.

பக்கத்து வீட்டுக் காளியம்மா, "சுத்தக் கூறு கெட்டவளா இருக்கியே... ஒத்தச் சீவன் நீயி... உனக்குச் சோறு போட்டுக் கூட வச்சுக்கக் கசக் குது. நீ வெயில்லயும் வேக்காட்லயும் பச்சத் தண் ணியக் குடுச்சுக்கிட்டுச் சம்பாரிச்ச காசு மட்டும் இனிக்குதாமா?"

"இத பாரு செல்லம்மா... வர வர அவம் போக்குச் சரியில்ல... தண்ணியப் போட்டுட்டுத் தாறுமாறாத் திரியறான். தட்டிக் கேக்கற உன்னையத் தள்ளி வச்சுட்டு, புருசன் தண்ணியப் போட்டாலோ, தவுட்டப் போட்டாலோ பொழுதோட வரும்போது புரோட்டாவோட வந்தாப் போதும்னு நெனைக்கறா உம் மருமவ! நாலு காசு இறுக்கிப் புடுச்சு வச்சிருந்தீன்னாதான் நீ கண்ண மூடுனா கருமாதிச் செலவுக்கு ஆகும். இல்லீன்னா உன்னய நடுட்ல போட்டுட்டு, வெளிய நாலுபேர் கிட்டக் கையேந்திக்கிட்டு நிப்பான் உம்மவன். பாத்துப் புத்தியாப் பொழச்சுக்க!"

காளியம்மா எப்பவும் இப்படித்தான் உண் டானதை உடைத்துச் சொல்லிவிடுவாள். கல்யாணமாகி இருவரும் ஒரே சமயத்தில் இந்த ஊருக்கு வந்தவர்கள். இருவரின் சுகதுக்கங் களில் மனப்பூர்வமாய்ப் பங்கெடுத்துக் கொள்ளும் அபூர்வமான பந்தம் அவர்களுடையது.

'காளியம்மா வாய்க்கடுசுக்காரி. எப்படி மருமவ வாய்க்கப் போறாளோன்னு ஊரே பேசும். ஆனா, தங்கமாட்டா மருமவ வாச்சுட்டா. எங்க போறதுனாலும் டி.வி.எஸ்ல உக்காத்தி வச்சுக் கூட்டிக்கிட்டுப் போறா. நல்ல மகனப் பெத்த மகராசி. நல்லா இருக்கட்டும். நம்மளாட்டா நாறப் பையனப் பெத்தவளுக்கு இதேங்கதி' என்று புழுங்கினாள்.

அடுத்த நாளே மகன் வந்து பணம் கேட்ட போது... "உங்க ரெண்டு பேருக்கு அப்படி யென்னடா செலவு? பரம்பர பரம்பரையாப் பாடு பட்டு வயித்தக் கழுவிக்கிட்டு இருக்கற காட்ட வெல சொல்லறியாமா?"

"ஊர்க் கொழந்தைகளுக்கெல்லாம் காசு வாங்காமக் கொழந்தப்பால் ஊத்துனவ நானு. எம் பேத்தி பாலில்லாம வெள்ளாட்டுப் பாலக் குடிக்கறான்னு ஊர்ச்சனம் சொல்றப்ப பெத்த வயிறு பத்தியெரியுது" என்று அழுதவளிடம், "ச்சை... இந்த எழவுக்குத்தான் இங்க வார தில்லை. ஆம்பளைகளுக்கு ஆயிரத்தெட்டுச் செலவிருக்கும்... இன்னமும் உம்பட முந்தானி யவே புடுச்சுக்கிட்டுத் திரியச் சொல்றியா?"

"என்னமோ கெட்ட நேரம் கடன ஒடன வாங்கித் தொலச்சுட்டேன். நீ மட்டும் மனசு வச்சீன்னா, பழையபடி நல்ல நெலமைக்கு வந்துருவேன்" என்றான்.

"எஞ்சாமி... என்னடா செய்யட்டும் நானு..." என்றாள் நெகிழ்ந்து போய்.

"ம்... கழுத்துல போட்டிருக்கியே பத்துப் பவுன் சங்கிலி. அதக் குடுத்தீன்னா இப்பத்த பிரச்சனையச் சமாளிச்சிரலாம்" என்றான்.

"டேய், நீ கேக்கறது உனக்கே நாயமாத் தெரி யுதா? வெய்ய வேக்காட்டுல பாடுபட்டு உள்ளது உரியதெல்லாம் குடுத்தேன். இது எஞ்சாமி பண்ணிப்போட்டது. சாகற வரைக்கும் கழட்ட மாட்டேன்" சங்கிலியை இறுகப் பிடித்துக் கொண்டாள்.

"எம் பொண்டாட்டியே நாஞ்சொன்னதும் பேசாமக் கழட்டிக் குடுத்து மஞ்சக் கயித்தக் கட்டிக்கிட்டு நிக்கறா, முண்டச்சி நீயி... சங்கிலி போட்டுக்கிட்டு மினுக்கோணும்கறே... மானங் கெட்டாப்பல இருக்குது."

அவனுடைய வார்த்தைகள் அவளை நெருப்பாய்ச் சுட்டன. அதன்பிறகு இந்த ஆறு மாத மாய் எதிரே கண்டாலும் பேசாமல் விலகிப்போகும் மகனைப் பார்க்கும்போது பெற்ற வயிறு துடிக்கும். பால் கொடுத்த நெஞ்சு பதறும். பேசாமல் சங்கிலி யைக் குடுத்துத் தொலைச்சிருக்கலாமோ? என்று தோன்றும்.

பேத்திக்கு முடியிறக்கிக் கிடாய் வெட்டு வைத்ததும் இவளுக்கு நம்பிக்கை துளிர்விட்டது. இவள் தனியாய் வந்த சமயம் அவள் வளர்த்த ஆடு இரண்டு குட்டி போட, ஒன்றைப் பேத்திக்கு முடியிறக்கச் சாமிக்கு வளர்த்தித் தருவதாய் மகனிடம் சொல்லியிருந்தாள். அப்போதெல்லாம் அவனும் அடிக்கடி வந்து அவளைப் பார்த்துப் போய்க்கொண்டிருந்தான். எப்படியும் கிடாயைப் பிடித்துப் போக வரும்போது கூப்பிடுவான் என்று எதிர்பார்த்துக் கொண்டிருந்தவளுக்கு, மச்சாண் டார் வீட்டு ஆள்காரன் வந்து, 'சின்னக்கவுண்டரு கெடாயப் புடுச்சாரச் சொன்னாங்க' என்று சொன் னதும் பொசுக்கென்று அழுகை வந்துவிட்டது.

**ப**டுத்தே கிடந்தவள், ஆடுகள் மே... மே... என்று கத்தவும் விசுக்கென்று எழுந்தாள். 'இந் நேரம் கெடா வெட்டிச் சமையலும் ஆகியிருக்கும்.



கெடா நல்லாத் துலுக்குச்சோ என்னமோ தெரிய லியே... சாமீ... என்ன குத்தங்குறை இருந்தாலும் ஏத்துக்கிட்டு நீதா எம்மக்களக் காப்பாத்தோணும்' கோயில் இருக்கும் திசையை நோக்கிக் கண்ணீருடன் நெடுஞ்சாண் கிடையாய் விழுந்து கும்பிட்டாள்.

கோயிலில் பாதிப்பேர் சாப்பிட்டுவிட்டு, நடந்த கூத்தை மர நிழலில் கதை கதையாய்ப் பேசிச் சிரித்துக் கொண்டிருந்தனர்.

தொலைவிலேயே இறங்கி பைக்கை உருட்டிக்கொண்டு வந்த பிச்சானைப் பார்த்து, 'என்ன இருந்தாலும் நம்ம பிச்சான் மரியாதை தெரிஞ்சவன். இதுவே வேற யாராவதா இருந்தா பைக்கக் கொண்டாந்து மேல இடிச்சுத்தான் நிறுத்துவான்' என்று மெச்சிக் கொள்ள... பிச்சான் பைக்கை நிறுத்திவிட்டு, எல்லாச் சாமிகளுக்கும் வணக்கம் வைத்தான்.

"என்ன பிச்சே! காலையிலதான் ஒரு மட்டம்

கும்புட்டாச்சே... சும்மா எதுக்குப் பாக்கற நேரமெல் லாம் கும்புட்டுக்கிட்டு... பசி நேரமாச்சு, போய்ச் சாப்புடு'' என்று செல்லமாய்க் கடிந்து கொள்ள, பிச்சானின் கண்களும் மனசும் 'எங்க பெரிய கவுண்டச்சியக் காணம்' என்று துழாவின.

சின்ன வயதிலேயே சின்னாயி கொடுமையில் சிக்கித் தவித்தவன். பாதி நாள் வட்டிலைத் தூக்கிக் கொண்டு செல்லம்மாவிடம்தான் வரு வான். பத்து வயதிலேயே சவரக் கத்தியை எடுத்துத் தொழில் பழகியவன்.

இன்று டவுனில் நான்கு பெரிய சலூன் வைத்து நடத்தினாலும், வசதி வாய்ப்புகள் வந்து விட்டாலும் பிச்சான் எப்போதும் தன் ஊரை விட்டுக் கொடுத்ததில்லை. முடியிறக்கும் தேதி யையும், நேரத்தையும் குறித்துக் கொடுத்துவிட்டு வந்துவிட்டால் போதும்... குறித்த நேரத்தில் வந்து தாய்மாமன் மடியில் உட்கார்ந்திருக்கும் குழந்தை யின் முடியைப் பூவாய் உதிர்த்து விடுவான். முடிக்காணிக்கை கூட வாங்க மாட்டான்.

செல்லாத்தாவைப் பார்த்துவிட்டால், "எம்பட உடம்பச் செருப்பாத் தெச்சுப் போட்டாக்கூட, எம்பட நன்னிக்கடன் தீராதுங்க பெரிய கவுண்டச்சி'' என்பான்.

சோறு மட்டுமல்ல, வேறு காரணமும் இருக் கிறது. தொழில் நேரம் போக, மிச்ச நேரமெல்லாம் துரைசாமியோடு வேட்டைக்குப் போவதும், மீன் பிடிக்கப் போவதுமாய்த் திரிவான்.

ஏதாவது கூறுகெட்ட தனமாய்ப் பேசிச் சிரித்துக் கொண்டும், சிரிக்க வைத்துக் கொண் டும் இருப்பவன் அன்று, "பெரிய கவுண்டச்சீ... நா இப்படியே ஊர்ச்சோறு வாங்கித் தின்னே சாக வேண்டியதுதான் போல இருக்குது'' என்றான் தலை தலையாய் அடித்துக்கொண்டு அழுதபடி.

"என்னடா பிச்சே... ஏம் பதர்றே? இந்தா மொதல்ல இந்தச் சோத்தக் குடி'' என்று கம்பஞ் சோறும், மோருமாய்க் கரைத்து ஊற்றியவள், "நீதான் உங்க தொழில்ல கெட்டிக்காரனாயிட் டையே, எளவட்டமெல்லாம் உங்கப்பன ஒதுக்கிட்டு உங்கிட்டத்தானே முடிவெட்ட வாராங்க. அப்புற மென்ன?'' என்றாள் சிரித்தபடி.

"அதானுங்க பெரிய கவுண்டச்சி! தனியாக் கடை வச்சுப் பிழைச்சுக்கலாம்னு, மூலனூர்ல கடை வாடகைக்குப் பேசி அட்வான்சு குடுக்கப் பணம் கேட்டா... சின்னாயி செருப்பெடுத்துக் காட்றா...'' குலுங்கினான்.

"அட கிறுக்கு நாயி, இதுக்கா இப்படி மனசுட்டுப் போயிட்டே? பணந்தான வேணும் உனக்கு? எந்திரிச்சு வா''–இழுத்துக்கிட்டுப் போன வள், "இந்தா, இந்த வெள்ளாட்டக் கொண்டு போயி நாளைக்கு வெள்ளிக்கிழம, கன்னிவாடிச் சந்தைல வித்துப்போட்டு அட்வான்ஸ் குடுத்துட்டு வா'' என்று சொல்லியனுப்பிய மகராசி.

இலை நிறையச் சோறு, கெட்டிக் குழம்பு, எலும்புக்கறி, குடல் கறி என்று இலை நிறையப் பரிமாறி, "என்ன பிச்சே, வந்ததுல இருந்து பாக்கறேன், ஏதோ யோசனையாவே இருக்கறே? சாப்பிடு'' என்றான் துரைசாமி.

"ஏனுங்சாமி, காத்தாலயே கேக்கோணும்னு நெனச்சேன். ஒறம்பற சாமியெல்லாம் சுத்தியிருந்த தால கேக்க முடியல. எங்கீங் சாமி நம்ம பெரிய தெய்வத்த... கண்ணுலயே தட்டுப்படுல'' என்றான்.

"அம்மாவுக்குச் சொல்லுல பிச்சே... அன் னிக்கு ஆன ரவுசுக்கப்புறம் பேச்சு வார்த்த இல்ல. போயிக் கூப்பிட மனசில்லாம உட்டுட்டேன்.''

"என்னது... பெரிய தெய்வத்தக் கூப்பிட லியா? என்னுங்சாமி நாயம் இது... அன்னிக்கு என்னமோ தண்ணியப் போட்டுட்டுப் பெத்த தாயக் கேக்கக் கூடாத கேள்வியெல்லாம் கேட்டுப்புட்டீங் களாம்... நீங்க பண்ணுன தப்புக்கு அவுங்க கால்ல விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கூட்டியாந்திருக் கோணும். அவியள உட்டுப்போட்டு இப்படி ஒரு விசேசஞ் செய்ய எப்படி உங்களுக்கு மனசு வந்தது?''

"உங்க கவுண்டிச்சிகூட உங்ககிட்டச் சண்டப் போட்டுத் தாலியக் கழட்டி வீசிட்டுப் போனாங்க. செருப்புத் தேய நடையா நடந்து, நாலுபேர் வச்சு நாயம் பேசி, அவியளக் கூட்டியாந்து குடும்பம் நடத்துலயா?''

"ரத்தத்தப் பாலாக் குடுத்து வளத்துன தாய மட்டும் ஏஞ்சாமி தள்ளி வச்சீங்க?''

'பட்' என்று இலையைச் சுருட்டினான். இந்தச் சோத்த நா வாயில வெப்பேன்னு நெனச்சீங்களா? மாட்டனுங்சாமி. இது பாவச்சோறு. இதக் கையால தொட்டதே பாவம். எந்தொண்டக் குழிக்குள்ள எறங்காதுங்சாமி... பெரிய தெய்வத்துக் கையால சோறு வாங்கித் தின்னு வளந்த நாயி நானு. எனக்கு நன்னி விசுவாசம் இருக்குது. தப்பு நடந்து போச்சுங்சாமீன்னு அவங்க கால்ல போயி உழுந் தாத்தான் எம்மனசு ஆறும்...''

"அய்யோ... இப்படிப் பண்ணிப் போட்டீங்களே சாமி... பெத்த வயிறு குமுறுனா இன்னம் எத்தன கெடாயச் சாமிக்கு வெட்டினாலும் பாவம் தீராதே... இந்தப் பாவத்த நீங்க கையேந்திட்டீங்களே சாமீ...''

புறங்கையால் கண்ணீரைத் துடைத்துக் கொண்டு சுருட்டிய இலையோடு கோயிலைவிட்டு வெளியேறிய பிச்சானை வெறித்துப் பார்த்தபடி நின்றது கூட்டம். ●

கட்டுரை

# ஆங்கிலேயர் ஆட்சியில் சென்னைப் பல்கலைக்கழகம்

*மறைந்த காந்திய அறிஞர் பேரா. டாக்டர் ச. செயப்பிரகாசம் அவர்கள், அகால மரணத்தால் இழந்த தனது மகனின் நினைவாக உருவாக்கிய 'முழுமை அறிவியல் உதயம்' எனும் மாத இதழ் மதுரையி லிருந்து வெளியாகிறது. இதன் விலை ரூ. 30/–. அனைவரும் வாசிக்க வேண்டிய இதழ்.*

*இந்த இதழின் சிறப்பே, முழுக்க முழுக்க இது தமிழில் அறிவியல். தமிழ் மொழியில் அறிவியல் அறிஞர்களின் கட்டுரைகள் மொழியாக்கங்களாக வெளியாகின்றன. அத்தகைய சிறப்பு வாய்ந்த பத்திரிகையிலிருந்து பேரா. டாக்டர் ஜி. இராஜசேகரன் அவர்களின் சென்னைப் பல்கலைக்கழகம் பற்றிய கட்டுரையைத் தேர்ந்தெடுத்து வாசகர்களுக்கு வழங்கியிருக்கிறோம்.*

*– இ.ஆர்.*



சென்னைப் பல்கலைக்கழகம்

தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழகத்தில் ஆங்கிலேயர்கள் ஆட்சியின் காலத்தில் 1792–1947 ஆண்டுகளில் நிறுவப்பட்டவை மெட்ராஸ் வானவெளி ஆய்வு நிலையம், சென்னைப் பல்கலைக்கழகம், அப்பல்கலைக்கழகத்தைச் சேர்ந்த கல்லூரிகள்.

மெட்ராஸ் வானவெளி ஆய்வு நிலையம் கிழக்கிந்தியக் கம்பெனியில் வேலையிலிருந்த ஒருவரால் ஆரம்பிக்கப்பட்டது. சென்னைப் பல்கலைக்கழகமோ அரசின் ஆணையால் பிறந்தது.

சென்னைப் பல்கலைக்கழகத்தின் குறிக்கோள் இந்தியர்களுக்கு உயர்கல்வி கொடுப்பதாக இருந்தது. ஆனால், அந்தக் கல்வி, அரசுக்கு வேண்டிய குமாஸ்தா போன்றவர்களைத் தயார்

பேரா. டாக்டர் ஜி. இராஜசேகரன்

செய்வதற்காகவே கொடுக்கப்பட்டது. கல்வியின் தனி முக்கியத்துவம் கருதியோ, அறிவியல் ஆராய்ச்சியோ அந்தக் குறிக்கோளில் இல்லை.

சென்னைப் பல்கலைக்கழகம்தான் தென்னிந்தியாவில் தோன்றிய முதல் பல்கலைக்கழகம். மற்றவை ஆங்கிலேய ஆட்சியின் 20–ஆம் நூற்றாண்டில் தோற்றுவிக்கப்பட்டன. ஒரு பல்கலைக் கழகத்தைத் தவிர (அண்ணாமலை பல்கலைக் கழகம்) மற்றவை சென்னைப் பல்கலைக் கழகத்தை மாதிரியாகக் கொண்டுதான் சிருஷ்டிக்கப்பட்டன.

உயர்கல்வி விரும்புவோரின் எண்ணிக்கை அதிகரித்ததால், சென்னைப் பல்கலைக் கழகத்தின் பொறுப்பைப் பங்கு போட்டுக் கொள்ளவே, அவற்றைச் சிருஷ்டிக்க வேண்டியதாயிற்று. தொடக்கத்தில் அங்குச் சேர்ந்த ஆசிரியர்களும் மற்ற அலுவலர்களும், சென்னைப் பல்கலைக்கழகத்திலிருந்தே வந்தனர். அதனால் சென்னைப் பல்கலைக்கழகமே மற்றவற்றின் தாய் என்று கூறுவது மிகப் பொருந்தும்.

**சென்னைப் பல்கலைக்கழகம்**

ஆங்கிலேயரது முதல் கல்வி முயற்சிகள் சென்னையில் 17–ஆம் நூற்றாண்டிலேயே ஆரம்பித்தன என்று தெரிகிறது. கிழக்கிந்தியக் கம்பெனியில் ஒரு பள்ளி ஆசிரியர் ரால்ப் ஆர்ட் நியமிக்கப்பட்டிருந்தார். 1717–இல் கம்பெனி கடலூரில் ஒரு பள்ளியை நிறுவியது. 18–ஆம் நூற்றாண்டின் கடைசிப் பகுதியில் கிறித்தவ மத போதகர்களின் செயல்பாடு பல பள்ளிகள் தொடங்குவதற்கு உதவியது.

1813–இல் இங்கிலாந்து பாராளுமன்றம் கிறித்தவமத போதகர்கள் சுதந்தரமாகச் செயல்பட அனுமதிக்கும் சட்டத்தை இயற்றிய பின்பு, கிறித்தவப் பள்ளிகளின் எண்ணிக்கை வேகமாக அதிகரித்தது. அதே ஆண்டில், கம்பெனி கல்வி அபிவிருத்திக்காக 10,000 பவுண்டு ஒதுக்கியது. ஆனால் இந்தப் பள்ளிகளெல்லாம் ஆரம்பக் கல்விக்காகவே; சில சமயம் இடைநிலைக் கல்வி கற்பிக்கப்பட்டது.

18–ஆம் நூற்றாண்டில் உயர் கல்விக்காகவும் அறிவுப் புலமைக் காகவும் சில நிறுவனங்கள் ஆங்கிலேயரால் சிருஷ்டிக்கப்பட்டன.


லார்ட் மெக்காலே

1784–ஆம் ஆண்டில், முதல் கவர்னர் ஜெனரலான வாரன்ஹேஸ்டிங்ஸின் ஆதரவில், வில்லியம் ஜோன்ஸ் நிறுவிய ஆசியக் கழகம் இதன் முக்கிய உதாரணம். ஹேஸ்டிங்ஸ் பாரசீக மொழிக் கல்விக்காகக் கல்கத்தாவில் ஒரு கல்லூரி நிறுவினார். ஜொனாதன் டன்கன் 1791–இல் சமஸ்கிருதக் கல்விக்காகக் காசியில் கல்லூரி நிறுவினார். பாரம்பரிய இந்தியக் கல்விக்காகவே இந்த முயற்சிகள். ஆசியக் கழகம் முதலில் இந்தியாவைப் பற்றி அறிய அவாவுள்ள ஐரோப்பியர்களுக்காகவே வேலை செய்தது.

லார்ட் பெண்டிங்க் 1774–1839, லார்ட் மெக்காலே 1800–1859 காலங்களில் இன்னும் பெரிய மாற்றங்கள் வந்தன. அதுவரை பள்ளிகளும், கல்லூரிகளும் நிறுவப்பட்டாலும், கல்வியைப் பற்றி அரசு கொள்கை எதுவும் வகுக்கப்படவில்லை.

கல்வி இந்தியப் பாரம்பரிய முறைப்படி கற்பிக்கப்பட வேண்டுமா, அல்லது ஆங்கிலத்தைப் போதனை மொழியாகக் கொண்டு, மேற்கத்திய முறைப்படி கற்பிக்கப்பட வேண்டுமா என்ற விவாதம் மெக்காலேயால் முடிவுக்குக் கொண்டு வரப்பட்டது. இரண்டாவது முறையே சிறந்ததாக முடிவெடுக்கப்பட்டது. 1835–இல் எழுதப்பட்ட 'மெக்காலே திட்டம்' இந்தியக் கல்வியின் எல்லா மாற்றங்களுக்கும் அடிகோலியது; 100 ஆண்டுகளுக்கு மேலாக இதுவே இந்தியக் கல்வியின் போக்கை நிர்ணயித்தது.

சென்னை மாகாணத்திலும் ஏறக்குறைய தென்னிந்தியா முழுவதிலும் மேற்கத்தியக் கல்விக்கூடங்கள் கிறித்தவமத போதகர்களாலும், கிழக்கிந்தியக் கம்பெனியாலும் நிறுவப்பட்டன. சென்னை மாகாணத்தின் கவர்னரான லார்டு ஜான் எல்பின்ஸ்டன் கல்வியைப் பற்றிப் பல தீர்மானங்களை இயற்றினார். இந்திய நாட்டுக் கல்விக் கமிட்டி பின்வருமாறு கூறியது :

"சென்னையில் ஒரு மையக் கல்லூரி நிலையம் அதாவது பல்கலைக்கழகம் நிறுவப்பட வேண்டும். சென்னைப் பல்கலைக்கழகம் இரு துறைகளைக் கொண்டிருக்க வேண்டும். ஒன்று இலக்கியம், தத்துவம் அறிவியல் ஆகியவற்றின் மேற்படிப்புக்காகவும், மற்றொன்று ஆங்கில மொழி, இந்திய

மொழிகளுக்கான உயர்கல்விப் பள்ளியும்; அது தத்துவம் அறிவியலுக்கான அடிப்படைத் துறைகளையும் கொண்டிருக்கும்."



லார்ட் பென்டிங்க்

இந்தத் தீர்மானம் "செயின்ட் ஜார்ஜ் கோட்டை அரசின் கீழுள்ள பிரதேசங்களில் வசிப்போர்"களால் வரவேற்கப்பட்டது. இதை 1839–ஆம் ஆண்டில், அவர்கள் சென்னை கவர்னருக்கு ஒரு பகிரங்கக் கூட்டம் மூலம் வெளிப்படுத்தினர். இது 70,000 பேர்களின் கையெழுத்தைக் கொண்டது.

கிழக்கிந்தியக் கம்பெனியின் வரலாற்றில் இதுபோன்று எப்போதும் நடக்கவில்லை. அதில் இந்தத் தீர்மானத்தை உடனடியாக நிறைவேற்றுமாறு கேட்டுக் கொண்டனர். கம்பெனி ஆட்சியின் கீழுள்ள மற்ற பிரதேசங்களில் கல்லூரிகள் ஏற்கனவே நிறுவப்பட்டுவிட்டன என்றும், இந்தியத் துணைக் கண்டத்திலேயே ஆங்கில அரசின் கீழுள்ள மிகப் பழைய பிரதேசத்தில் இன்றும் இது செய்யப்படவில்லை என்றும் குறிப்பிடப்பட்டது.

**அந்த விண்ணப்பம் மேலும் கூறியது :**

"சென்னை மாகாணத்தில் ஏற்கனவே கல்வி அமைப்பு இருந்தது. இது மனித இனத்திற்குச் சென்னை மாகாணத்தால் கொடுக்கப்பட்ட முக்கியமான அமைப்பு, இது சென்னைக் கல்வி முறை (Madras Native Septum of Education) என்று அழைக்கப்பட்டது."

இதிலிருந்து ஆங்கிலேய ஆட்சி தொடங்கும் முன்பே இருந்த நமது கல்வி நிலையங்கள் முழுவதும் மறக்கப்படவில்லை என்று தெரிகிறது. 70 ஆயிரம் பேர் கையெழுத்திட்டனர் என்பதிலிருந்து, உயர்கல்வி மீது மக்களுக்கு இருந்த அக்கறையும், இந்த நற்காரியத்துக்காக அவர்கள் ஒன்றுசேர்ந்து உழைக்கும் திறமையும் இருந்தன என்பது புலனாகிறது.

1840–இல் கல்கத்தாவிலுள்ள ஹூக்ளி கல்லூரியின் ஆசிரியர் கூப்பர்–ஐத் தற்காலிகத் தலைமையாசிரியராகக் கொண்டு, ஓர் உயர்நிலைப் பள்ளி சென்னையில் தொடங்கப்பட்டது. இதுதான் மேற்சொன்ன தீர்மானத்தை நிறைவேற்றுவதன் முதல் கட்டம். அதே கீழ் ஆண்டின் பின் பகுதியில் கேம்பிரிட்ஜ் பல்கலைக்கழகத்தில் கணிதம் பயின்ற (Senior Wrangler) சர் ஐர் பார்ட்டன் பவல் (Sir Eyre Barton Powel) தலைமையாசிரியராக நியமிக்கப்பட்டார்.

1853–இல் இது மேலும் விரிவாக்கப்பட்டது. ஒரு கல்லூரித் துறையும் தொடங்கப்பட்டது. 1855–இல், இத்துறையானது புதிதாகத் தொடங்கப்பட்ட அரசுக் கல்வித்துறையின் கீழ் கொண்டு வரப்பட்டு, மாநிலக் கல்லூரி (Presidency College) என்று பெயரிடப்பட்டது. அரசின் சில தஸ்தாவேஜூகளில் இது "பல்கலைக்கழகம்" என்று கூறப்பட்டது.

ஆனால், சென்னைப் பல்கலைக்கழகம் என்ற அமைப்பு, இந்திய சட்டசபையால் (Legislative Council of India) *1857,* செப்டம்பர் 5–ஆம் நாள் ஒரு சட்டமாக இயற்றப்பட்டது. இது 1853 தீர்மானத்தின் படியும் 1854 கடிதத்தின் சிபாரிசு பேரிலும் நடந்தது. வடஇந்தியாவில் கம்பெனி மிகத் தீவிரமான யுத்தத்தில் ஈடுபட்டிருந்த சமயம் இது நடந்தது என்பது ஆச்சரியமான விஷயம்.

எனினும் மாநிலக் கல்லூரியே (Presidency College) சென்னைப் பல்கலைக்கழகத்தின் முன்னோடியாகக் கருதப்பட வேண்டும். பல்கலைக்கழகம் தொடங்கி 75 ஆண்டுகள் மாநிலக் கல்லூரியும், பல்கலைக்கழகத்தோடு இணைக்கப்பட்ட மற்ற கல்வி நிலையங்களும் தான் பல்கலைக்கழகம் செய்ய வேண்டிய கல்வியைக் கொடுத்து வந்தன. இன்றும் எல்லாப் பட்டங்களின் கீழ்க் கல்வியும் (Undergraduate Education), அநேகப் பட்டங்களின் மேல்கல்வியும்



(Post-graduate Education), பல்கலைக்கழகத் தோடு இணைக்கப்பட்ட கல்லூரிகளில் தான் கொடுக்கப்பட்டது. பல்கலைக்கழகத்தில் பட்ட மேற்கல்வியும் ஆராய்ச்சியும் மட்டுமே.

பல்கலைக்கழகம் நிறுவப்பட்டபோது, அது கல்லூரிகளில் படித்த மாணவர்களுக்கும் தேர்வு நடத்தியது. மேலும் கல்லூரிகளின் தகுதிகளைப் பற்றி அறிந்து, தகுதியுள்ளவற்றிற்கு மட்டும் பல்கலைக்கழக இணைப்புக் (Affiliation) கொடுக் கும் பணியையும் செய்தது. லண்டன் பல்கலைக் கழகத்தை மாதிரியாகக் கொண்டு செயல்பட்டது.

பல்கலைக்கழகத்தின் முதல் தேர்வு 1857 செப்டம்பரில் நடந்த மெட்ரிகுலேஷன் தேர்வாகும். 41 மாணவர்கள் தேர்வு எழுதினார்கள். 36 மாண வர்கள் வெற்றி பெற்றார்கள். முதலில் B.A., பட்டம் ஒன்றையே பல்கலைக்கழகம் வழங்கியது. அதற்கான தேர்வு 1858–இல் முதன் முதலாக நடந்தது. இரு மாணவர்கள் மட்டுமே தேர்வு எழுதி னார்கள். இருவரும் இலங்கை, யாழ்ப்பாணம், அமெரிக்க மிஷனரி செமினாரியிலிருந்து; இரு வரும் வெற்றிபெற்றார்கள். F.A. (First Examination in Arts) என்ற முதல் தேர்வு, மெட்ரிக் குலேஷனுக்கும் B.A.-வுக்கும் இடைப்பட்டது 1863–64 இல் தொடங்கியது. பின்பு இது இன்டர் மீடியேட் தேர்வு என்று பெயரிடப்பட்டது. M.A. பட்டம் பின்னால்தான் வந்தது. அறிவியல் கல்விக் குக் கூட, B.A., M.A., பட்டங்கள்தான் கொடுக் கப்பட்டன.

1911–ஆம் ஆண்டு தொடங்கப்பட்ட B.A. (Hons) படிப்பு கல்வியின் தரத்தைப் பல படிகள் மேலே கொண்டு சென்றது. B.A. இரு ஆண்டு களும் M.A. இரு ஆண்டுகளும் சேர்ந்து B.A. (Hons) மூன்று ஆண்டுகளில் கற்பிக்கப்பட்டது. இந்த ஹானர்ஸ் படிப்பு, பல்கலைக்கழகத்தால் தேர்ந்தெடுக்கப்பட்ட சில கல்லூரிகளில் மட்டும் தான் கற்பிக்கப்பட்டது. அவற்றில் சேர்ந்த மாண வர்களும் நன்கு தேர்ந்தெடுக்கப்பட்ட சிலர்தான்.

இந்த ஹானர்ஸ் திட்டம் B.A., M.A., என்ற சாதாரண வழியைவிட மிகக் கடினமானதாகக் கருதப்பட்டது. வெகு சீக்கிரம் இதன் மதிப்பு அதிக மாகியது. மிகச் சிறந்த (Hons) படிப்பும் தொடங்கப் பட்டன. துரதிருஷ்டவசமாக 1957–க்குப் பின் ஹானர்ஸ் படிப்பு கைவிடப்பட்டது. கடைசி ஹானர்ஸ் தேர்வு நடந்த ஆண்டு 1960.

மாநிலக் கல்லூரிதான் பல்கலைக்கழகத் தோடு இணைக்கப்பட்ட முதல் கல்லூரி. அங்குச் சேர்ந்த மாணவர்கள் பல்கலைக்கழகத்தால் நடத்தப்பட்ட F.A., B.A., தேர்வுகளை எழுதினார் கள். மற்ற கல்லூரிகளும் இதைப் பின்பற்றின. அக்காலக்கட்டத்தில் பல்கலைக்கழகத்தோடு இணைந்த கல்லூரிகளுள் குறிப்பிடத்தக்கவை : சென்னைக் கிறித்தவக் கல்லூரி, பெங்களூரி லுள்ள சென்ட்ரல் கல்லூரி திருவனந்தபுரத்தி லுள்ள மகாராஜா கல்லூரி. நல்ல மதிப்புப் பெற்ற சில கல்லூரிகள் : மதுரையிலுள்ள அமெரிக்கன் கல்லூரி, கும்பகோணத்திலுள்ள அரசுக் கல்லூரி, திருச்சியில் உள்ள செயின்ட் ஜோசப் கல்லூரி, நேஷனல் கல்லூரி, சென்னையிலுள்ள லயோலா கல்லூரி ஆகியன.

பழைய சென்னை மாகாணத்திலும் தென்னிந்தியாவின் மற்ற இராஜாக்கள் ஆண்ட பிரதேசங்களிலும் தொடங்கப்பட்ட பல கல்லூரி களும் சென்னைப் பல்கலைக்கழகத்தின் இணைப் பைக் (Affiliation) கேட்டுப் பெற்றனர். இந்தக் கல்லூரிகள்தான் தென்னிந்தியாவின் உயர்கல்வி நிலையங்களாகத் திகழ்ந்தன.

1857–1947 இல் கல்லூரிகளின் எண் ணிக்கை 10–லிருந்து 130 ஆக உயர்ந்தது. மாண வர்களின் எண்ணிக்கை 1857–இல் 43–லிருந்து இந்திய சுதந்திரத்தின்போது 30,000 ஆக உயர்ந்தது. சில காலம், கல்லூரிகளின் எண்ணிக் கையும் மாணவர்களின் எண்ணிக்கையும் குறைந் தது. இது மற்ற பல்கலைக்கழகங்கள் ஆரம்பிக்கப் பட்டதால்தான். சென்னைப் பல்கலைக்கழகத்தின் “ஆட்சி”க்குட்பட்ட பரப்பளவு குறைந்தது.

மற்ற பல்கலைக்கழகங்கள் மற்ற பிரதேசங் களிலுள்ள கல்லூரிகளை இணைத்துக் கொண்டன.

கல்லூரிகள் தொடங்கப்படுவதற்கு முன்பே பொறியியலும், மருத்துவமும் உயர்தரத்தில் சில நிறுவனங்கள் மூலம் கற்பிக்கப்பட்டு வந்தன. ஆனால், மாநிலக் கல்லூரியும் மற்ற கல்லூரிகளும் தான் அறிவியல் கல்வியை உண்மையாகவே தென்னிந்தியாவுக்கு முதலில் கொண்டு வந்தன.

அக்கால கட்டத்தில் அறிவியலையும் மற்ற பாடங்களையும் கற்பித்தவர்கள் மேற்கிலிருந்து வந்தவர்களே; பெரும்பாலும் ஆங்கிலேயர்கள்; மற்ற சில நாடுகளைச் சேர்ந்தவர்களும் வந்தார் கள்; குறிப்பாகக் கிறித்தவ மத போதகர்களால் நடத்தப்பட்ட கல்விக் கூடங்களில். மாநிலக் கல் லூரியின் முதல் இந்திய பிரின்சிபால் 1943–இல்தான் நியமிக்கப்பட்டார்.

முகவரி : ‘**முழுமை அறிவியல் உதயம்**’, 2/18 ஏ, பி.பி.ரோடு 2–வது தெரு, பங்கஜம் காலனி, மதுரை – 625 009, செல் : 9894249630.

ஏப்ரல் 24, ஜெ.கே. பிறந்த நாள் நினைவாக...

# ஜெயகாந்தன்

## எனது குறிப்புகள்

'ஜெ.கே. நேயர்'
பிஂசஂ குப்புசாமி


எழுத்தாளர் ஜெயகாந்தன்

**த**மிழில், இலக்கியத் துறையில் ஒரு மேன் மக்கள் மரபைத் தொடர்ச்சியறாது நிலை நிறுத்துவதற்கு ஜெயகாந்தன் பிறந்திருக் கிறார். ஒரு நொடித்த குடும்பத்தில் பிறந்தவர் என்றுதான் சொல்ல வேண்டும். ஆனால், பாலியம் முதலே ஒரு மனித காம்பீர்யம் அவரிடம் கொடி கட்டிப் பறக்கிறது.

**அ**வர் சந்தேகமில்லாமல் ஆன்மிகவாதி தான். கிருஷ்ணாவதாரத்தை நம்புபவர் தான். அவன் பாஞ்சசன்யமும், மயிற் பீலி யும் கொண்ட யமுனையின் கரைகளில் மட்டும் அல்லாமல், கார்ல் மார்க்ஸின் கனவு மெய்யான வால்காவின் கரை களிலும்கூட அவருக்குத் தெரிகிறான். விஷ்ணு சக்கரம் ஒரு சப்பாணியின் வண்டிச் சக்கரத்திலும் தெரிகிறது.

**ஒ**ருமுறை பேச்சுவாக்கில், “எதையாவது நினைத்து வருந்துவதைக் காட்டிலும் செய்யத் தகாத காரியம் வேறு இல்லை” என்று சொன் னார். மகிழ்ச்சியை அவர் உள்ளம் அந்த அளவு விரும்புகிறது. ஆனால், நுட்பமான துன்பங் களை எல்லாம் மிக உணர்ந்தது, உணர்ந்து அங்கே தைரியம் தருவது – அவர் இலக்கியம்.

**அ**வர் இந்தியாவின் மரபை நன்கு உணர்ந்த எழுத்தாளர். மன நிலைகளில் பண் டைய மகான்களின் சாயல் உள்ளவர். இந்த லய த்திலேயே இருபதாம் நூற்றாண்டின் பெட்ரோல் நாகரிகம் அவருக்கு நன்கு பரிச்சயம். நவீன சமூகச் சிக்கல்களைத் திறம்பட ஆராயும் சித்தாந்த பலம் உடையவர். எது உலகை வென்றதோ, அதன் உட் பொருளை வெறுமனே படித்து மட்டும் தெரிந்து கொண்டவரல்லர்; தன் உள்ளுணர்ச்சியால் அதைப்

போஷிப்பவர். வாழ்க்கையிலிருந்து ஒரு சக்திமிக்க மொழியைக் கற்றவர்.

**பா**ட்டாளி வர்க்கச் சர்வாதிகாரத்தில் அவருக்கு ஆட்சேபணை இராது. அவர்களைப் பேரக் குழந்தைகளாக்கி மடிமேல் வைத்துக் கொள்ளும் அவ்வளவு பெரியவர் ஆகிவிடுவார் அப்பொழுது.

**உ**டையலங்காரப் பிரியர். புது மோஸ்தராயினும், பழைய பாகையாயினும் அதைக் கவினுற அணிபவர். நீராடும் துறைகள் எல்லாம் அவருக்கு அனுபவச் சுரங்கங்கள். பதிவிரதையின் பார்வை போல அளவான பசி உடையவர். பழைய மண்டபங்களிலும், திறந்த வெளியிலும் தூங்கப் பிடிக்கும். மீசையை முறுக்கிக் கொண்டே இருப்பார். 'எளிமை கண்டிரங்குவாய்' என்றும், 'ஏறு போல் நடையினாய்' என்றும் பாரதி இனம் கண்ட உருவின் சாயல்களை அவரிடத்தே காணலாம். பரமசிவன், விவேகானந்தர், ஏர் இந்திய இளவரசன், பாண்டவருள் ஒருவர், குருவிக்காரன் என்று வேஷங்கள் போடலாம், அப்படி ஆகிருதி.

**எ**ழுத்தாளனுக்கு நேரிடுகிற தடைகளையெல்லாம் உடைத்துக் கொள்பவர் அவர். சமூக அவமானங்களுக்கு அஞ்சாதவர். கூர்த்த மதி படைத்தவர்.

**ப**ரிசுகள் அவருக்கு ஒரு பொருட்டல்ல. ஆனால், தமிழில் சாகித்ய அகாதெமிப் பரிசு அவருக்கு வழங்கப்பட்ட போது, பிறரை விடவும் அவருக்கு அது நன்கு பொருந்திப் பெருமை பெற்றது.

**அ**ப்பரிசு அவருக்கு வழங்கப்பட்டது குறித்துத் தகழி சிவசங்கரன் பிள்ளை போன்றோர் பேசுவதாக ஒரு பாராட்டு விழா, கோயம்புத்தூரில் ஏற்பாடாகியிருந்தது. அதன் தேதி பற்றிக் கூடச் சரியாக ஞாபகமில்லாமல் சென்னையிலிருந்து புறப்பட்டு, விழா நேரத்தில் கோயம்புத்தூருக்கு இன்னும் 200 மைல் தூரத்திலேயே இருந்து கொண்டு, அப்புறம் அந்தப் பாராட்டு விழாவில் கலந்து கொள்ளும் சந்தர்ப்பம் தவறிப் போய்க் கொண்டிருக்கிறது என்பது தெரிய வந்த போது, மின்னுகிற நேரம் அவர் கண்கள் அப்படியா என்று கூர்ந்து பார்த்தன. பிறகு, அற்புதமான வேடிக்கை ஒன்றைக் கண்டவர் போல், வெடித்துச் சிரிக்க ஆரம்பித்துவிட்டார். அந்தச் சந்தர்ப்பம் அவரை நான் அறிந்த கணங்களில் தனிச் சாந்நித்யம் கொண்டது.

**வா**சகர்களிடம் அசடு வழிகிற எழுத்தாளனின் பலவீனம், அந்த வாசகர்கள் எப்படிப்பட்டவர்களாயினும் அவரிடம் எப்போதும் இருப்பதில்லை.

**ப**த்திரிகைகளோடு தனது ரூபத்துக்குக் குந்தகம் வராத வகையில் இணங்க ஒத்துழைப்பவர் அவர். அவற்றைக் கடந்தவர். பதிப்பாளர்களிடம் மிக உயரிய மரியாதை பெறுபவர். சமூகத்தின் எல்லாத் தட்டு மேல் மனிதர்களுக்கும் அவர் பால் ராஜ குருவிடம் அரசன் கொள்கிற அச்சம் சற்று உண்டு. குடி படைகளுக்கு நெருங்கிய தோழர். எழுத்தாளனின் இவ்வித மாபெரும் உரு இந்தத் தமிழ் நாட்டில் எழுந்தது நமது பேறு.

**ச**ட்டென்று கோபம் வந்துவிடும். ஒரு சிறு உறுத்தலையும் தாங்கிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்க மாட்டார். அதேசமயம், பல எளிய மனிதர்களோடும் மிக இணங்கியிருக்கும் பண்பு கொண்டவர். எதிலும், எப்பொழுதும் தன்னை வெளிப்படுத்தும் தனிப் பிரபை உள்ளவர்.

**கி**ராமங்களை மிக ரசிப்பவர். வேலிப் படல்களுக்கு மேலாகத் தாழ்ந்து தாழ்ந்து உயரும் உலக்கைகளின் அழகு அவர் நாவலில் வரும். காடு கரைகளின் மரத்தடி நிழலில் இருந்து கொண்டு, மாடுகளின் கழுத்து மணி ஓசையில் சங்கீதக் கனவுகள் காண்பவர். ஆனால், பட்டண வாசத்தை நீங்க விரும்பாதவர்.

**நா**டோடிகளின் முகாம்களையும் குருவிக்காரர்களையும் கண்டால், காரை நிறுத்தி வெகு நேரம் நின்று

கவனிப்பார். அவர்களில் சிலருக்கும் அவருக்கும் ஒரு மௌனமான சம்பந்தம் நிகழ்வது போல் தோன்றும். சந்தைக்குச் செல்லும் வண்டியின் அழி கம்புகளிடையே சிரித்த முகத்தோடு அவரைப் பார்த்துச் செல்லும் அந்த அழகிய சிறுமிகள் அவருக்கு மிகவும் அன்யோன்யம். கிழவிகளின் குணங்களையும், ஆப்பக்கடைச் சூழலையும், காய்கறிக்காரிகளின் சண்டையையும் அறிந்தவர்.



அவரது பாத்திரங்கள் பெரிய விஷயங்களை அடையாளம் காட்டுபவர்கள். அவரது ஹென்றி யார்? வளர்ச்சிப் போக்கில் ஒரு குறிப்பிட்ட காலம் ஏசுநாதர் எங்கிருந்தார் என்று தெரியவில்லை என்கிறார்களே! எங்கோ போன அந்த ஏசுவின் இடைப்பக்குவம் ஞானமும், குழந்தைமையும் கலந்து வந்த ஹென்றியாகத் தென்னாற்காடு ஜில்லாவின் தமிழ் மண்ணை மிதித்ததாகச் சொல்லலாம் போல் தோன்றுகிறது.

அந்தக் கடற்கரை நகரத்தில் அடுத்த திங்கட்கிழமை வந்து வெகு நேரம் காத்திருந்து ஏமாந்திருப்பாளே, அவள் பைபிளில் வரும் அந்தக் காணாமல் போன ஆடு அல்லவோ?

இன்பங்களின் மீதும், போகங்களின் மீதும் அவருக்குள்ள தாகங்களாலேயே அவர் மகிழ்வதாகச் சொல்லியிருக்கிறார். அவருக்குச் சந்நியாசிகளின் மீதும், துறவிகளின் மீதும் அபரிமிதமான மரியாதை உண்டு. துறவியாகி விடுவோமோ என்கிற ஜாக்கிரதை உணர்ச்சி தனக்கு உள்ளதாகக் குறிப்பிட்டிருக்கிறார். விநோதமும் வெளிப்படையானதுமான இந்த மனம் எழுத்தாளனுக்கு வரப்பிரசாதம் என்று நான் கருதுகிறேன்.



அசல் கவிஞர். சாதாரணப் பேச்சு வார்த்தைகளிலும் கூட அற்புதமான வரிகள் தெறிக்கும். அவரது பொழுது போக்கே, தனியே அமர்ந்து மனத்திலேயே கவி புனைந்து வாய் விட்டுப் பாடிக் கொண்டிருப்பது தான். அவை யாவும் மரபுக் கவிதைகளாகத்தான் வருகின்றன.

பாவம் அவர் கவிதையின் சுபாவம். எனினும், அவற்றிற்கு இலக்கிய அந்தஸ்துத் தர அவர் மனம் மறுக்கிறது என்கிறார். கவிதையை எவ்வளவு பெரிதாக அவர் மதிக்கிறார் என்பதற்குத் தான் இந்தக் கூற்று அடையாளமே தவிர, வேறல்ல. புதுக் கவிதை, புதுக் கவிஞரின் தகுதி, திறமை பற்றி அவருக்கு ஒன்றும் உவப்பாக இல்லை. “அந்த முயற்சி தொடங்கப்படும் பொழுதே என் அனுபவத்தில் அது பழசாகப் போய்விட்டது” என்கிறார். இந்தக் கருத்துக்கள் எல்லாம் கொண்டு, அவர் கவிதையைத் திரஸ்கரிப்பதாகக் கருதலாகாது. அவரால் கவிதையை ரசிக்காமலும், கவிதை இயற்றாமலும் இருக்க முடியாது.

கம்பனைப் பற்றிப் பேசுகிறபோது, அவருக்கு மிகவும் சொந்தமான ஒரு விஷயத்தைப் பேசுவது போல் இருக்கிறது. இதிகாசப் பாத்திரங்கள் அவருக்கு மிக அருகாமையில் இங்கே எங்கேயோதான் இருக்கிறார்கள் போல் இருக் கிறது. அப்படித் திரும்பி அவர்களைப் பார்க் கிறார். இன்னோரிடத் தில், ‘ஏசுநாதரை எனக்கு

ஏற்கெனவே தெரியும்' என்று எழுதியிருக்கிறார். 'அகம் பிரம் மாஸ்மி'யை அவர் சொல்கிற பொழுது அதற்கு அதிக அழுத்தம் உண்டாகிறது. லௌகீகத்தில் தேர்ச்சி பெற்றவர்.

கல்லூரிகள் தோறும் சென்று மாணவர்களை 'மாடு மேய்க்கப் போங் கள்' என்று அவர் சொன்னது பின் னால் பெரிதாக எண்ணப்படும்.

அவரேதான் பாலர்களுக்குப் 'பாரதி பாடம்' எழுதினார். கற்பித்தலில் கையாளப்படக்கூடிய பல மேன்மை யான அம்சங்களைத் தன்னுள் கொண் டது அது. மக்களின் கல்வி பால் தந்தைக்குள்ள அக்கறையின் மிகச் சிறந்த த்வனி அது. இனிமையும் சான் றாண்மையும் பொருந்தி அப்புத்தகத்தில் கேட்கிற குரல் ஒரு சிறந்த போதகனின் குரலாகும்.



புத்தகங்களுக்கு அவர் மாதிரி முன்னுரைகள் எழுதியவர்கள் தமிழில் வேறு யார் என்று தெரியவில்லை. சமூகத்தோடு அவர் செய்த தொடர்ச்சி யான சம்வாதங்களின் பதிவுகள் அந்த முன்னுரைகள்.

பார்த்ததும் ஒரு காட்சியின் நயங் கள் அவருக்குத் தெரிந்துவிடுகின்றன. கேட்டதும் வெகு நாளாகவே உள்ளது போல் விடைகள் வெளிவருகின்றன. எப்போதும் எதிர்ப்பட்ட விதியின் மீது ஏறி அமர்ந்து அதை ஆரோகணித்து விடுகிறார்.

பெற்றோர்களின் வாழ்க்கையை யும் முன்னோர்களின் தன்மையையும், சிறு வயதிலிருந்து தான் வாழ்ந்த இடங் களையும், அவ்விடங்களின் மனிதர் களையும் அடிக்கடி நினைவு கூர்ந்து ரஸமாகப் பேசிக் கொண்டிருப்பார். சாதிகளைப் பற்றிய ஞானம் அவருக்கு நிறைய உண்டு.

சில விரதங்கள் இருந்தால்தான் சினிமா உலகம் அவரை அழைக்க முடி யும். அங்கே என்னவோ நடக்கிறதே, அதற்கு அவரைப் பலி கொள்ள முடியாது.

மனசுக்குப்பட்டு உண்மையாகச் சொன்னால் ஒழிய, யாரும் அவரைப் பொய்யாகப் புகழ முடியாது. அவ் வளவு உஷாரான மனிதர். பழைய மரபையொட்டி அரசாங்கம் அவரைத் தனது ஆஸ்தானத்தில் ஏற்று அலங் கரித்துக் கொள்ளலாம். ஆனால், நாம் தருகிற எந்தப் பதவியும் அவரைக் கட்டுப்படுத்தாது. அவருடைய சிரமங் களில் தலையாயது கட்டுப்படுவது.

நூற்றாண்டுகளுக்கொரு முறை தான் இத்தகைய முழுப் பரிமாணங்கள் நமது மொழிக்கு முகவிலாசம் தந்திருக் கின்றன. பாரதியும், அவரும் அடுத் தடுத்துத் தோன்றியிருப்பது ஒரே நூற் றாண்டில் தரப்பட்ட தனிச் சலுகை.

தமிழில், சம்பந்தப்பட்ட துறை களில், அவை பற்றி அவர் மாதிரிச் சொல்லியிருப்பவர்களும், செய்திருப் பவர்களும் இலர். அவர் காலம் அவருடைய யுகம் என்று சொல்லப்பட வேண்டும்.

●



டாக்டர்
ரோமிலா தாப்பர்

# சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகமா? வேத நாகரிகமா?

**வ**ரலாற்றுப் பேராசிரியர் டாக்டர் ரோமிலா தாப்பர் டெல்லி ஜவஹர் லால் நேரு பல்கலைக் கழகத்தில் பணி யாற்றி ஓய்வு பெற்ற பிறகு, வருகைப் பேராசிரியராக உள்ளார். அவருடைய வரலாற்றுப் புலமைக்காக அவருக்கு மத்திய அரசு 'பத்மபூஷண்' விருது வழங் கியது. அதன்பின்னர் 'பத்ம விபூஷண்' விருதும் வழங்கியது. இரண்டையுமே அவர் ஏற்றுக் கொள்ளாமல் நிராகரித் தார். அரசு விருதுகளைப் பெற்றுக் கொண்டால், அரசுக்குக் கட்டுப்பட்டே பேச நேரும் என்பதாலேயே நிராகரித் தார். அவர் முற்போக்கு நோக்கங்கள் கொண்ட இடதுசாரிச் சிந்தனையாளர்.

"நம்மில் யார் ஆரியர்கள் – நமது பூர்வீகத்தைப் பற்றிய மறு சிந்தனை" (Which Of Us Are Aryans : Rethinking the Concept of Our Origins) என்ற அறிஞர்களின் தொகுப்பு நூலுக்கு ரோமிலா தாப்பர் ஒரு முன்னுரை அளித்துள்ளார்.

இந்நூலின் மதிப்புரை 'தி இந்து' ஆங்கிலப் பத்திரிகையில் 11.2.2019 இல் வெளியாகியுள்ளது. இந்நூலின் மதிப் புரையை எழுதியவர் 'ஆலப்' என்பவர்.

ரோமிலா தாப்பர் அத்தொகுப்பில் எழுதியுள்ள அம்முன்னுரையின் சாராம்சம் தமிழில் கீழ் வருமாறு :

"ஆரியன் என்ற ஆதிப் பதப்பிர யோகம் நமது முதல் வேதத்திலும் ஈரானியப் பாடல்களிலும் உள்ளது என் றும், காலப்போக்கில் மாறுதலுக்கு உட் பட்டுள்ளது."

"ஆரியர் என்பது பற்றி ஆராய் வதற்கு வரலாறு, மரபணு, வேத சுலோ கங்கள், தொல்பொருட்கள், மொழி யியல், தொன்மங்கள் ஆகிய அனைத் தையும் கணக்கில் எடுத்துக்கொள்ளப் பட்டே ஆய்வு செய்ய வேண்டும்."

"ஆரியன் என்பதனை விவாதிக்க இரண்டு அம்சங்கள் முக்கியமானவை. முதலாவது, நிலப்பரப்பு (Space), இரண்

டாவது காலம் (Time). நிலப்பரப்புப் பற்றி விவாதிக்க இந்தியப் புவியிய லையும். பிரிவினைக்கு முன்பிருந்த பிரிட்டிஷ் இந்தியாவின் எல்லைகளை யும் பற்றித் தெரிந்திருக்க வேண்டும்.

அப்படிப் பார்த்தால், அந்த நிலப் பரப்பு வடமேற்கு இந்தியாவாகக் குறுகி விடுகிறது.

ஆனால், தொல்லியல் ஆய்வுகளும், மொழி ஆதாரங்களும் மிக மிக விசால மான பரப்பில் இருந்திருக்கின்றன.

அதன்படி, சிந்துவெளித் தொடர்பு கள் (Links) வடமேற்கு பிரிட்டிஷ் இந்தி யாவின் எல்லைகளைத் தாண்டிச் செல் கின்றன. அதேசமயம் வெகு தொலை வில் உள்ள கலாச்சாரங்களுடனும் ஒத்துப் போகின்றன.

சிந்துச் சமவெளி நாகரிகத்துடன் அத்தொடர்புகள் செல்வதைத் தொல் லியல் மூலமே பார்க்க முடியும்.

ஹரப்பா ஆதாரம், பாமீரில் உள்ள சார்த்துகையிலிருந்து (Shortughai) சிந்து வெளி வரையிலும், அதற்கு மேலுமான அரபிக் கடல் வரையிலும் செல்கிறது. மேற்கே பலுசிஸ்தானம் மற்றும் மக்ரான் என்பதனையும் தாண்டி ஈரானிய எல்லை வரை செல்கிறது. கிழக்குத் திசையில் பஞ்சாப், ஹரியானா வரை செல்கிறது. சமீபத்தில் அரபுத் தீப கற்பத்தின் ஓமன் பகுதிகளில் உள்ள தாமிரச் சுரங்கங்களின் மூலம் அத் தொடர்புகளை அறிய முடிகிறது.

ஹரப்பர்கள் வளைகுடா நாடு களோடும் மெசபடோமிய நாகரிக மக்க ளோடும் வணிகத் தொடர்பில் இருந் துள்ளனர். அவர்கள் ஹரப்பாவிலேயே முடங்கிப் போனவர்கள் அல்ல என் பதையும் புரிந்து கொள்ள முடிகிறது.

அப்பகுதி முழுவதிலும் அவர்கள் குடியேறியுள்ளனர், வணிகம் செய்துள் ளனர், பேசிப் பழகியுள்ளனர். அப்படி யானால், ஒரே கலாச்சார இனத்தவராக இவ்வளவு பெரிய விசாலப் பிர தேசத் தில் அவர்கள் இருந்திருக்க முடியாது.

பன்முகக் கலாச்சார சமூக மக்களாகத்தான் அவர்கள் இருந்திருக்க வேண்டும். அவர்களில் சிலர் அதி லிருந்து துண்டிக்கப்பட்டவர்களாகவும் மற்றவர்கள் நெருங்கிய தொடர்புள்ள வர்களாகவும் இருந்திருக்கலாம். அவர் கள் சமூக அரசியல் ரீதியான ஒரு தலைமையின்கீழ் செயல்பட்டி ருக்கலாம்.

இந்தோ – ஆரியன் மற்றும் இந்தோ – ஈரானியன் மொழிகளைப் பேசியவர் களின் பூகோள வாழ்விடங்கள் துல்லிய மாக இல்லை. அதேசமயம் தொல்லியல் கலாச்சார இடங்கள் துல்லியமாக உள் ளன. அம்மொழிகளைப் பேசியவர்கள் பரந்துபட்ட நிலப்பரப்பில் வசித்து வந் துள்ளனர். அவர்கள் பேசிய மொழி களில் வேற்றுமைகளும் உள்ளன.

இந்தோ – ஐரோப்பிய நிலப் பரப்பின் கலாச்சாரம், ஹரப்பா கலாச் சாரத்திலிருந்து வித்தியாசப்படுகிறது. வடசிரியாவும், வட அனட்டோலி யாவும் இந்தோ – ஆரியத்தோடு தொடர்புள்ளதாகத் தெரிகிறது. வடக்கு ஈரான் அவஸ்தாவுடன் தொடர்புள்ள தாகத் தெரிகிறது.

இந்தோ – ஆரியர்கள் ரிக் வேத காலத்திலிருந்தவர்களாக உள்ளனர். அவர்கள் இந்தோ – ஈரானியன் எல்லை யிலும், பஞ்சாபிலிருந்து டோப் (Doab) வரையிலும் பரவி இருந்துள்ளனர்.

இந்தோ – ஆரிய மொழி இந்தோ – ஐரோப்பிய மொழியோடு தொடர் புள்ளதாகத் தெரிகிறது. இது மத்திய ஆசியாவிலும் பிரவேசித்துள்ளது. கங்கைச் சமவெளியில் தென்படும் இந்தோ – ஆரியர்கள் ரிக்வேத காலத் திற்குப் பிந்தியவர்கள்.

மேற்கு ஆசியாவும், மத்திய ஆசியா வும் வரலாற்று ஆய்வுகளுக்கு உரியவை. இதில், பஞ்சாப் முக்கிய இடமாக உள்ளது. ரிக்வேத இந்தோ – ஆரியர்கள் அவர்களின் மொழியைப் பேசவில்லை என்றாலும், அந்த விசால நிலப்பரப்பில் அதன் தாக்கத்தை உணர முடிகிறது.

இப்பிரதேசத்தின் மொழியியல் வர லாறு, இந்த ஆய்வில் சிக்கலான பகுதி யாக உள்ளது. ஹரப்பா பிரதேசத்திலும் இந்தோ – ஆரியப் பிரதேசத்திலும் உள்ள இடப் பெயர்கள் மிகவும் குறைவு. அதுவும் அவை இந்தோ – ஈரானிய எல்லையோரத்திலும் பஞ்சாபிலும்தான் இருக்கின்றன.

ஹரப்பா நகரக் கலாச்சாரங்கள் நன்கு வளர்ந்தவையாக உள்ளன. கி.மு 2600 ஆண்டுகளுக்கு முந்தியதாக உள்ளது. கி.மு. 1700–களில் அது மங்கத் தொடங்கிவிட்டது.

ரிக் வேதத்தின் தொன்மையைக் காட்டுவதற்கு ஓர் அடையாளத்தைக் கூறுகிறார்கள். நகர நாகரிகம் மங்கத் தொடங்கிய காலத்தில்தான் ரிக்வேதம் இருந்தது என்கிறார்கள். அதை வைத்துப் பார்க்கிறபொழுது, ஏறக்குறைய அது கி.மு. 1500 ஆண்டுகள் பழமை என்று குறிப்பிடப்படுகிறது. அதாவது, இன்றைய தேதியிலிருந்து 2000 + 1500 = 3500 ஆண்டு ரிக் வேதம் பழமையானது.

ரிக் வேதத்திற்குப் பிறகு தோன்றிய யஜுர், சாமம், அதர்வணம் ஆகிய மூன்று வேதங்களும் கங்கைச் சமவெளியில் நடைமுறையில் இருந்தவை. அவற்றின் காலம் கி.மு. 1000 ஆண்டு. அதாவது, இன்றைய தேதியிலிருந்து 2000 + 1000 = 3000 ஆண்டு.

ரிக் வேதத்தை 3 ஆயிரம் ஆண்டு எனக் கணிப்பவர்களும் அதற்கு முந்தியது என்று கணிப்பவர்களும் அதனை ஹரப்பா நகரக் கலாச்சாரத்தோடு இணைத்துப் பார்க்கிறார்கள். அதனால், ஆரியர்கள் என்பவர்கள் ஹரப்பா நகரின் மண்ணின் மக்கள் என்கிறார்கள். அதனால் வாழ்விடங்களை விட்டு அவர்கள் வேறு இடங்களுக்குக் குடிபெயரவில்லை.

ஆனால், 19–ஆம் நூற்றாண்டு ஆய்வாளர்கள் ஹரப்பா நகரம் முன்பு படையெடுப்புகளுக்கு உட்படுத்தப் பட்டதாகச் சொல்கிறார்கள்.

இவற்றை வைத்துப் பார்க்கிற பொழுது, ரிக் வேதம் என்பது ஹரப்பா கலாச்சாரத்திற்கும் முந்தியது எனப்படுகிறது. அதனால், ரிக் வேத ஆரியர்களை ஹரப்பா கலாச்சாரத்தின் கர்த்தாக்கள் என்றே கூறலாம்.

இவையெல்லாம் மிக மிக சர்ச்சைக்குரிய கருத்துக்கள்.

வேதங்களைப் பற்றிய காலக்கணக்குகள் வரலாற்றாசிரியர்களுக்கு மிகப் பெரிய சிக்கல்களை உருவாக்கியிருக்கின்றன. ஹரப்பா நகர நாகரிகத்திற்கும், ரிக் வேதகால விவசாய வளர்ச்சிக்கும் இடையே அநேகமாக முரண்பாடு எதுவும் இல்லை. அந்தத் தேதியிலிருந்து ரிக் வேதத்திற்கும் மற்ற மூன்று வேதங்களுக்கும் உள்ள கால இடைவெளியைக் கணக்கிட்டால் அது 1500 ஆண்டுகளாக உள்ளன.

இவ்வாறு, வேதங்களின் தொன்மையைக் கணக்கிடுகிற பொழுது, அவற்றிற்கு மத்தியிலுள்ள சிறு வேறுபாடு ரிக் வேதத்திற்கும், மற்ற வேதங்களுக்கும் உள்ள கால இடைவெளியை உறுதிப் படுத்துகின்றது.

ஆரியர்களை ஒரு தனிப்பிரிவினர் என்று அழுத்தம் கொடுத்துச் சொல்கிற பொழுது, அவர்களுடைய பிரதேசம் பிரிட்டிஷ் இந்தியாவிலும் தொடர்ந்துள்ளதைக் காணமுடிகிறது என்பதை அந்தத் தொன்மை உறுதிப்படுத்துகிறது."

ரோமிலா தாப்பரின் கட்டுரை சிந்துவெளி நாகரிகமான ஹரப்பா நாகரிகத்தை வேத நாகரிகமாகக் காட்டுவதற்கு ஆதரவாக உள்ளது.

உண்மையில் சிந்துவெளி நாகரிகத்தைத் திராவிட நாகரிகம் என்று 1924–இல் முதன்முதலாக சர் ஜான் மார்ஷல் என்பவர்தான் நிறுவினார் என்று இடப்பெயர்ச்சிகளைப் பற்றி ஆய்வு செய்துள்ள ஒடிசா மாநில அரசின் முன்னாள் தலைமைச் செயலாளர் டாக்டர் ஆர். பாலகிருஷ்ணன் ஐ.ஏ.எஸ். அவர்கள் கூறினார். இரண்டு மாதங்களுக்கு முன்பு கோவை வாணவராயர் அறக்கட்டளையில் அவர் பேசியதையும், அவருடைய நேர்காணலையும் பிப்ரவரி மாத 'ஓம் சக்தி' வெளியிட்டுள்ளது.

அதனையும், ரோமிலா தாப்பரின் ஆங்கிலக் கட்டுரையையும் வாசகர்கள் ஒப்பிட்டுப் பார்த்து மேலதிகமாகச் சிந்திக்கலாம்.

சிந்துவெளி நாகரிகம் திராவிட நாகரிகம் என உறுதிப்படுத்தப்படாமல் போகுமானால், அது வேத நகரிகம் என்பதாகப் புரிந்து கொள்ளப்பட்டுவிடும். ரோமிலா தாப்பரின் கட்டுரைக்கு ஏனோ எந்த எதிர்வினையும் ஆய்வாளர்களிடமிருந்து ஏற்படவில்லை. ●

# வரலாற்று அறிஞர் ரோமிலா தாப்பர் ஏன் தயங்குகிறார்?

வரலாற்று அறிஞர் ரோமிலா தாப்பர் ஆங்கிலத்தில் எழுதியுள்ள ஒரு கட்டுரையின் மூலம், சிந்து சமவெளி நாகரிகம் வேத நாகரிகம் என அவர் நிறுவ முயற்சி செய்வதாக அறிய முடிகிறது.

இந்தியாவின் வடமேற்கு எல்லையில் மொகஞ்சதாரோ, ஹரப்பா என்ற மண் மூடிப் போன இரு நகரங்கள், தொல்லியல் துறையால் வெளிக் கொணரப்பட்டுள்ளன. அந்நகரங்களிலிருந்து தோண்டப்பட்ட புதைபொருள்கள் அங்கு வாழ்ந்த மக்களின் நாகரிகத்தைப் பற்றிய ஆராய்ச்சிகளுக்குக் கிடைத்துள்ளன.

அதனைப் பற்றி அண்மையில் நடந்த ஒரு கருத்தரங்கில் வரலாற்று அறிஞர்கள் பலரின் கட்டுரைகளைக் கொண்ட தொகுப்பு நூல் ஒன்று வெளியிடப்பட்டுள்ளது. அத்தொகுப்பு நூலின் பெயர் 'நம்மில் யார் ஆரியர்கள் – நமது பூர்வீகத்தைப் பற்றிய மறுசிந்தனை' என்பதாகும்.

இந்நூலுக்கான ஒரு முன்னுரையை ரோமிலா தாப்பர்தான் வழங்கியுள்ளார். ஆங்கிலத்தில் அவர் வழங்கியுள்ள அம் முன்னுரையில் சிந்து சமவெளிப் பகுதியிலுள்ள ஹரப்பா நகரத்தைப் பற்றியும், அதன் நாகரிகத்தைப் பற்றியும் தமது அபிப்பிராயங்களை அவர் எழுதியுள்ளார்.

அவ்வாறு எழுதுகையில், ஆரியரைப் பற்றியும், சம்ஸ்கிருதத்தைப் பற்றியும், வேதங்களைப் பற்றியும் குறிப்பிட்டு, ஹரப்பா நகரத்திலிருந்த நாகரிகம், வேத நாகரிகமாக இருக்கலாம் என்று நம்மை எண்ணுமாறு செய்துள்ளார்.

ஹரப்பா நகரத்தின் நாகரிகம் கி.மு. 2600 ஆண்டுகள் பழமையானது (இன்றைக்கு 2600 + 2000 = 4600 ஆண்டுகள்) என்று கூறியுள்ளார். ஹரப்பா நகர நாகரிகம் வீழ்ச்சியடைந்த போது ரிக் வேதம் தோன்றியதாகவும், அதனால் ரிக் வேதம் கி.மு. 1500 ஆண்டுப் பழமையானது (இன்றைக்கு 3500 அண்டுகள்) என்றும் குறிப்பிட்டுள்ளார். சில அறிஞர்கள் ஆரியர்களின் ரிக்வேதம் ஹரப்பா நாகரிகத்திற்கு முந்தையது என்றும் கூறுவதாகக் குறிப்பிட்டுள்ளார்.

அவருடைய இம்முயற்சி வரலாற்று ஆய்வாளர்கள் மத்தியில் நிச்சயமாக சர்ச்சையை ஏற்படுத்தக் கூடியதாகும்.

டில்லியில் நவீன ரொட்டி உணவு


ஐராவதம் மகாதேவன்


இரா. மதிவாணன்


பக்தவத்சல பாரதி

இயக்குநராக திரு.ஐராவதம் மகாதேவன், ஐ.ஏ.எஸ்., அவர்கள் பணியாற்றிய போது, பின்லாந்து ஹெல்சிங்கி (Helsinki) பல்கலைக் கழகத்தின் பேராசிரியர் அஸ்கோ பர்போலா அவர்கள், சிந்து சமவெளி எழுத்துக்களின் வாசிப்புப் பற்றி எழுதிய ஒரு சிறு நூலை ரோமிலா தாப்பருக்கு அனுப்பி வைத்துள்ளார். அதனைப் படிப்பதற்காக ரோமிலா தாப்பருடன் தொடர்பு கொண்ட வரலாற்று அறிஞர்களில் ஒருவர் தான் திரு. ஐராவதம் மகாதேவன் அவர்களும்.









ஆர். பாலகிருஷ்ணன்

இவர் தொடர்பு கொண்ட விதமே சுவாரஸ்யமானது. ரோமிலா தாப்பரைத் தொலைபேசியில் அழைத்து, தன்னை ஓர் ஐ.ஏ.எஸ். அதிகாரி என்று அறிமுகப்படுத்திக் கொண்டு, அவரிடம் உள்ள அஸ்கோ பர்போலா நூலைப் பற்றி விசாரித்துள்ளார். பிறகு அந்த நூலைத் தமக்கு இரவலாகத் தர வேண்டாம் என்று கூறி விட்டு, தானே அவர் வீட்டுக்கு வந்து ஒரு மூலையில் உட்கார்ந்து (Sit in a cornor and read the book) அதனை வாசித்துவிட்டுத் திரும்பி விடுவதாக ரோமிலா தாப்பரிடம் பணிவோடு கூறியுள்ளார்.

அவரை அதற்கு அனுமதித்த ரோமிலா தாப்பர் அவரோடு பேசிய போது, இந்தியக் கல்வெட்டு மற்றும் திராவிட மொழியியல் பற்றிய அவருடைய ஞானத்தைக் கண்டு வியந்துள்ளார். அதேபோல இந்திய – ஆரிய நாகரிகம் பற்றியும் ஐராவதம் மகாதேவனிடம் அதிக ஞானம் இருந்ததையும் அவர் அறிந்துள்ளார். இப்படித்தான் ஐராவதம் மகாதேவனுக்கும் ரோமிலா தாப்பருக்கும் தொடர்பு ஏற்பட்டுள்ளது.

ஐராவதம் மகாதேவன்தான் சிந்து சமவெளியில் கிடைத்த குறியீடுகளான ஆரம்ப கால பிராமி எழுத்துக்களைத் தமிழுக்கு மாற்றி அதை வாசித்துக் காட்டியவர் என்றும் அதன்மூலமாக ஹரப்பர்கள் திராவிட மொழி பேசுகிறவர்கள் என்றும் அவர்களுடைய கலாச்சாரமும், மதமும் தனித்துவமானவை எனக் கண்டறிந்தவர் என்றும் ரோமிலா தாப்பர் ஐராவதம் பற்றிக் கூறியுள்ளார்.

அவர் மறைந்தபோது ரோமிலா தாப்பர் எழுதிய இரங்கல் செய்தி 27.11.2018 'தி ஹிந்து' ஆங்கிலப் பத்திரிகையில் வெளியாகியுள்ளது.

இதன்மூலம் ஐராவதம் மகாதேவன் சிந்து சமவெளி நாகரிகத்தைத் திராவிட நாகரிகம் என்று கண்டறிந்ததை ரோமிலா தாப்பர் அச்செய்தியில் குறிப்பிட்டுள்ளார்.

அதேசமயம், சிந்து சமவெளி நாகரிகத்திற்குப் பிந்திய காலத்தில் இந்திய – ஆரிய மொழிகளைப் பேசியவர்களுக்கும், திராவிட மொழிகளைப் பேசியவர்களுக்கும் கலப்பு ஏற்பட்டுவிட்டதாகவும் ஐராவதம் மகாதேவன் கண்டுபிடித்ததையும் ரோமிலா தாப்பர் தனது அந்த இரங்கல் செய்தியில் குறிப்பிட்டுள்ளார்.

ஆனால், 'நம்மில் யார் ஆரியர்கள் – நமது பூர்வீகத்தைப் பற்றிய மறுசிந்தனை' என்ற தொகுப்பு நூலுக்கான இவருடைய முன்னுரையில், சிந்து சமவெளி நாகரிகம் வேத நாகரிகம் என்பதாக ரோமிலா தாப்பர் நிறுவ முயற்சி செய்துள்ளதாகவே அறிய முடிகிறது.

காரணம் அவருடைய அம்முன்னுரையில் எந்த இடத்திலும் ரோமிலா தாப்பர் திராவிட நாகரிகத்தைப் பற்றி எழுதவில்லை.

ஆனால், 2017 டிசம்பர் 30–இல் திருவனந்தபுரத்தில் நடந்த இந்திய வரலாற்றுப் பேரவை மாநாட்டில் அவர் பேசியபோது "கீழடியில் கிடைத்த

கண்டுபிடிப்புகளின்படி ஆராய்ச்சி செய்தால், தமிழக வரலாற்றையே மாற்றியமைக்க வேண்டியதாக உள்ளது” என்று பேசியிருக்கிறார்.

அப்போதும் மிக எச்சரிக்கையாக கீழடியில் கிடைத்துள்ள பொருள்களை வைத்து, அவை திராவிட நாகரிகத்தின் அடையாளங்கள்தான் என்று ரோமிலா தாப்பர் குறிப்பிடவில்லை.


ரோமிலா தாப்பர்

ஆனால் இவர் எழுதி பெங்குவின் பதிப்பகம் வெளியிட்ட ‘புராதன இந்திய வரலாறு’ (Early India) நூலில், சிந்து சமவெளி நாகரிகம் தொடங்கி, மௌரியர்கள், குப்தர்கள், சோழர்கள் வரை பதிவு செய்துள்ளார். பௌத்த சமயத்தின் தோற்றம், இதிகாசங்கள் பற்றியும் அந்நூலில் விரிவாக விளக்கியுள்ளார்.

அப்படிப்பட்ட அந்நூலிலும் சிந்து சமவெளி நாகரிகம் திராவிட நாகரிகம் என்று அவர் கூறவில்லை.

ஆனால் தொகுப்பு நூலுக்காக இவர் எழுதியுள்ள முன்னுரையில் இவருடைய தகவல்களும், தரவுகளும், வாதங்களும் ரிக் வேதத்தைச் சுட்டிக்காட்டி, அதன் அடிப்படையில் சிந்து சமவெளி நாகரிகம் வேத நாகரிகம் என நிறுவ முயற்சி செய்துள்ளதை அறிய முடிகிறது.

அவருடைய ஆய்வை எப்படி ஒப்புக் கொள்வது?

ரோமிலா தாப்பர் போன்ற வரலாற்றுப் பேரறிஞர்கள் கல்வெட்டு ஆராய்ச்சியாளர் ஐராவதம் மகாதேவன் போன்று ஒரு தெளிவான முடிவுக்கு ஏன் வரமுடியவில்லை?

குஜராத் மாநிலத்தில் கட்ச் பகுதியில் செய்யப்பட்ட புதைபொருள் ஆராய்ச்சியில் சுடுகாடுகள் கண்டுபிடிக்கப்பட்டுள்ளன.

கட்ச் பல்கலைக்கழகத் தொல்லியல் ஆய்வுத்துறைத் தலைவர் சுரேஷ் பண்டாரி அவர்கள், அங்குக் கண்டறியப்பட்ட ஈமக்குழிகளில் உள்ள எலும்புக்கூடுகள் 4000 – 5000 ஆண்டுகளுக்கு முந்தையதாக இருக்கும் என்றும், அந்த எலும்புக்கூடுகளோடு சங்கு வளையல்கள், கல்மணிகள், மண் பாண்டங்கள், அம்மிக்கற்கள் போன்றவையும் கிடைத்துள்ளதைக் குறிப்பிட்டு, இவையெல்லாம் பாகிஸ்தானின் சில பகுதிகளில் கிடைத்துள்ள பொருள்களோடு ஒத்துப் போகின்றன என்றும் குறிப்பிட்டுள்ளார்.

இந்த அகழாய்வுகள் குறித்து மானுடவியல் பேராசிரியர் பக்தவத்சல பாரதி கூறிய போது, இந்த ஈமக்குழிகள் (கல்லறைகள்) கொடுமணல் முதலிய இடங்களிலும் கிடைத்துள்ளன என்றும் இவர்கள் வேளாண் சமூகத்தினராக வாழ்ந்த திராவிடர்கள் என்பதாகவும் குறிப்பிடுகிறார்.

**பி**ப்ரவரி மாத ‘ஓம் சக்தி’ இதழில் ஒரிசா மாநில முன்னாள் தலைமைச் செயலாளர் டாக்டர் ஆர். பாலகிருஷ்ணன், ஐ.ஏ.எஸ்., அவர்களின் பேட்டியையும், ஐராவதம் மகாதேவன் பற்றி கவியன்பன் பாபுவின் மார்ச் ‘ஓம் சக்தி’ இதழில் ‘தமிழ்த் தொண்டர் ஐராவதம் மகாதேவன்’ என்ற கட்டுரையையும் வாசகர்கள் படித்து திராவிட நாகரிகம் பற்றி மேலதிகமாகச் சிந்திக்கலாம்.

காரணம், திராவிடர்கள்தான் விதைத்து விளைவித்து வேளாண்மை செய்தவர்கள். இதேபோல இறந்தவர்களை இவர்கள் எரித்துவிடாமல் புதைத்து அதன்மூலமாகத் தங்கள் குடும்பத்தில் அவர்கள் மீண்டும் பிறப்பதாக நம்பியிருக்கிறார்கள். இதனால் ஹரப்பாவின் சிந்து சமவெளி நாகரிகம் வேளாண்மை செய்த திராவிட நாகரிகம்தான் என்று பேராசிரியர் பக்தவத்சல பாரதி குறிப்பிடுகிறார்.

சிந்து சமவெளி நாகரிகம் திராவிட நாகரிகம்தான் என்று பேராசிரியர் இரா. மதிவாணன் அவர்கள் மிக ஆழமாக நிறுவியுள்ளார். சிந்து சமவெளி எழுத்துக்களை வாசிப்பதைப் பற்றி வகுப்புகளும் நடத்தி வருகிறார்.

சிந்து சமவெளி நாகரிகம் திராவிட நாகரிகம்தான் எனச் சொல்வது மானுடவியல் வரலாற்று ஆய்வில் ஒரு மைல்கல் மட்டும்தானா? அல்லது ஒரு சிகர சாதனையா? என்பதை அறிஞர்கள்தான் உறுதி செய்ய வேண்டும்.

குறிப்பாக ரோமிலா தாப்பர் போன்ற மூத்த அறிஞர்கள் தமது முடிவை தெளிவாகத் தெரிவிப்பார்களானால், அது வரவேற்கத்தக்க வரலாற்றுப் பதிவாக அமையும். ரோமிலா தாப்பரின் அம்முன்னுரைக் கட்டுரையைப் பற்றித் தமிழறிஞர்களோ, வரலாற்று அறிஞர்களோ எதிர்த்தோ, ஆதரித்தோ ஏன் எழுதவில்லை என்று தெரியவில்லை.

– ந.நி.

# வாசகர் கடிதம்

அருட்செல்வரின் 96–வது பிறந்த நாளை வெளிப்படுத்தும் வகையில் 'ஓம் சக்தி' மார்ச் 2019 இதழில் அவரது வண்ணப் புகைப்படம் அமைந்தது சிறப்பு. வளர்க அருட்செல்வரின் அரும் பணிகள்!

– **ப.மூர்த்தி,** பெங்களூரு.

**'ஓ**ம் சக்தி' மார்ச் 2019 இதழில் 'சுரங்கம்' பகுதியில் வெளியாகியிருந்த "தேசியக் கட்சிகளும் மாநிலக் கட்சி களும்" எனும் அருட்செல்வரின் கட்டுரை மிகச் சிறப்பு. அருட்செல்வர் கூறும் கருத்துக்களை அரசியல் கட்சி கள் பின்பற்றினால் நம் நாடு சிறந்த குடி யரசாகத் திகழும் என்பதில் ஐயமில்லை.

– **தி.குமாரராஜா,**
உடுமலைப்பேட்டை.

**'சு**யமரியாதை வேண்டும்' எனும் கட்டுரையில், நமக்கு நாமே சுய மரியாதை கொடுக்க வேண்டும்; பிறருக் கும் மரியாதை கொடுக்க வேண்டும் என்பதை நயம்பட எடுத்துரைத்துள் ளார் சுவாமி கமலாத்மானந்தர்.

– **த.நாகராஜன்,** சிவகாசி.

**ம**தநல்லிணக்கத்தை உணர்த்தும் அற்புதமான விளக்கத்தைத் தந்தது ஆர்னிகா நாசரின் 'ஆறாவது விரல்' சிறுகதை.

– **என்.ஜே.கந்தமாறன்,** சென்னை.

**க**விஞர் மரபின்மைந்தன் முத்தையா வின் "தமிழ்க்கடல் முரு.பழ.இரத்தினம் செட்டியார்" குறித்த கட்டுரை அன்னா ரின் பேரறிவையும், நுண்ணறிவையும் திறம்பட விளக்கும்வண்ணம் அமைந்திருந்தது.

– **மு.இராமு,** திருமங்கலம்.

**"ம**ற்றும் ஓர் உயிர்" சிறுகதையின் முடிவு தெளிவற்றதாக உள்ளது. "அதோ, ஆட்டோவில் வெட்னரி டாக்டர் வந்து கொண்டிருக்கிறார்" என்று தெளிவான முடிவைத் தந்திருக்கலாம்.

– **இரா.கல்யாணசுந்தரம்,** மதுரை.

**'ஓ**ம் சக்தி' மார்ச் 2019 இதழில் வெளியாகியிருந்த "யோகாசனத்தில் நூற்றாண்டு கண்ட பத்மஸ்ரீ நானம் மாள்" அவர்களின் பேட்டி அருமை. இந்த முதிய வயதிலும் அவர் யோகா சனப் பயிற்சி செய்வது ஆச்சரியம்!

– **அ.முரளிதரன்,** மதுரை.

**'ஓ**ம் சக்தி' மார்ச் 2019 இதழ் பற்பல சுவைகள் கொண்டது. வாழும் வள்ளு வம், திருவண்ணாமலை மூக்குப்பொடிச் சித்தர், சுயமரியாதை வேண்டும், முழுக் காஷ்மீரையும் மீட்டெடுப்போம், அகத் தியப் பெருமானும் ஆளுடைய பிள்ளை யும் போன்ற கட்டுரைகளும், தமிழ் அழகு – கவிதை மற்றும் அரிய செய்தி கள் சுவை மிக்கன.

– **தி.ஈ.தி.ஈசுவர்மூர்த்தி,**
ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**'ஓ**ம் சக்தி' மார்ச் மாத இதழில் வெளிவந்த "நிழலின் பெருமை, தமிழ் அழகு, வெற்றி வாழ்க்கை" ஆகிய மூன்று கவிதைகளும் முக்கனிகளைத் தேனில் தோய்த்து உண்டதுபோல் இனிப்பாகவும் சுவையாகவும் இருந்தன.

– **உஷா முத்துராமன்,** திருநகர்.

**'ஓ**ம் சக்தி' மார்ச் 2019 இதழ் முகப் பில் அருட்செல்வரின் 96–வது பிறந்த தினம் சமயம் பார்த்து அந்த மாமனித ரின் அழகிய புகைப்படத்தை வெளியிட் டுச் சிறப்பு சேர்த்திருக்கிறீர்கள். வளர்க, அருட்செல்வரின் அழியாப் புகழ்!

– **இரா.வளையாபதி,** தோட்டக்குறிச்சி.

**ந**வீன நீர்வழிச் சாலையால் இந்தியாவிற்கு நன்மை இல்லை என்று ஒரு பொறியாளர் சொன்ன கருத்து ஏற்புடையதல்ல. அப்துல்கலாம் மற்றும் நூறு பொறியாளர்களைக் கலந்து, பொறியாளர் ஏ.சி. காமராஜ் உருவாக் கிய திட்டம் அது. நவீன நீர்வழிச் சாலைத் திட்டம் அவசியம் வேண்டும்.

– **லிங்கம் சின்னசாமி,** தாராபுரம்.



# விவாதம்

## அயோத்திக்கு சமரசத் தீர்வு
# வெற்றி பெறுமா?

**1992** டிசம்பர் மாதம் 6–ஆம் தேதியன்று அயோத்தியில் பாபர் மசூதி ஹிந்து பக்தர்களால் இடித்துத் தள்ளப்பட்டது. நாடு முழுவதும் அது கொந்தளிப்பை ஏற்படுத்தியது. காரணம் பாபர் மசூதி முஸ்லீம்களின் வழிபாட்டுத் தலமாகக் கருதப்பட்டது.

அதேசமயம் 1528–க்குப் பிறகுதான் பாபரின் படைத் தளபதி மீர்சாகிப்பினால் அயோத்தியில் அந்த மசூதி கட்டப்பட்டது. அதற்கு முன்பு, அது ஒரு ஹிந்துக் கோயிலாக இருந்தது. அதனை ராமருடைய ஜென்ம பூமி என ஹிந்துக்கள் கருதினார்கள். இதற்கான ஆதாரம் ஆவணங்களாக இல்லை. மரபுவழி நம்பிக்கைதான்.

தசரதன் ஆட்சிசெய்த அயோத்தி என்ற தலைநகரத்தின் பெயரும், இன்றைக்கும் அதற்குப் பக்கத்தில் ஓடுகிற சரயு நதியின் பெயரும் அப்படியே உள்ளன. இப்பெயர்களை வைத்துப் பார்த்தால், ராமர் பிறந்த அரண்மனை நிச்சயமாக தலைநகர் அயோத்திதான் என்பது ஹிந்துக்களின் நம்பிக்கை.

எதுபோல் என்றால், மெக்காவில் நபிகள் நாயகம் பிறந்ததையும், ஜெருசலத்தில் இயேசு நாதர் பிறந்ததையும் இஸ்லாமியர்களும் கிறிஸ்தவர்களும் நம்புவதைப் போல ஹிந்துக்கள் தங்களின் கடவுளான திருமால் அவதாரமான ராமர் பிறந்த இடமாக அயோத்தியை நம்புகிறார்கள். அதனால் அயோத்தியை வழிபாட்டுத் தலமாகத் தொடர ஆசைப்படுகிறார்கள்.

இந்த நம்பிக்கையை யாரும் கேள்வி கேட்க முடியாது. ஏனென்றால் இந்த நம்பிக்கை ஆதாரம், ஆவணம் ஆகியவற்றையெல்லாம் தாண்டி உணர்வுப்பூர்வமானது. இதனை Sentiment என்பார்கள். அதனால்தான் இது வீரியமிக்கதாக இருக்கிறது.

அயோத்தி ராமர் கோவிலை ராமரின் பிறந்த இடமாக ஹிந்துக்கள் கருதுவதால் இந்த விவகாரம் தலையெடுத்தது. ராமர் கோயில் இருந்த இடத்தில் மசூதி ஒன்று வல்லடியாகக் கட்டப்பட்டது.

1947–இல் சுதந்திரமடைந்தபோது

வழிபாட்டுத் தலங்களைப் பொறுத்தளவுக்குப் பிரிட்டிஷ் ஆட்சியில் எப்படி அது இருந்து வந்ததோ, அப்படியே தொடர வேண்டும் என்பதாக ஒப்புக்கொள்ளப்பட்டது. அப்படித்தான் நேருஜி, இந்திராஜி, ராஜீவ்காந்தி, நரசிம்மராவ் ஆட்சி வரை ஏறக்குறைய 1947 முதல் 1996 வரை இருந்து வந்தது.

நரசிம்மராவ் ஆட்சி நடந்து கொண்டிருந்த போது உத்திரப்பிரதேசத்தில் பா.ஜ.க. முதல மைச்சர் கல்யாண்சிங் ஆட்சி நடந்து கொண்டி ருந்தது. அப்போது பா.ஜ.க. தலைவர் எல்.கே. அத்வானி குஜராத்திலுள்ள சோமநாதர் ஆலயத்திலிருந்து அயோத்தி வரை ரத ஊர்வலம் நடத்தி ராமர் கோயில் கட்டுவதற்கான பின் னணியை உருவாக்கினார். ரத ஊர்வலம் நடந்த பகுதி முழுவதுமே கொந்தளிப்பாக இருந்தது.

முதல்வர் கல்யாண்சிங் பாபர் மசூதியைப் பாதுகாப்பதாக வாக்குறுதியும் அளித்திருந்தார். ஆனாலும் ஹிந்து கரசேவகர்கள் உணர்ச்சிவசப் பட்டுப் பாதுகாப்பு வளையத்தைத் தாண்டிச் சென்று பாபர் மசூதியின் மேல்தளத்தை இடித்துத் தகர்த்தார்கள். அவ்வாறு இடித்த ஒவ்வொரு அடியும் இந்தியாவில் அன்றைக்கு இருந்த 15 கோடி முஸ்லீம்களின் நெஞ்சில் அடித்ததைப்போல அவர்கள் உணர்ந்தார்கள்.

சுருக்கமாகச் சொன்னால் இஸ்லாமியர்களை அவமானப்படுத்தி இந்த வெற்றியை பா.ஜ.க. அன்றைக்குப் பெற்றதாகவே நடுநிலையாளர்கள் கூறினர்.

அமெரிக்காவின் பொம்மை ஆட்சியை எதிர்த்து வியட்நாமில் ஹோசிமின் தலைமையில் நடந்த போராட்டத்தில், அமெரிக்க ராணுவத்தை எதிர்க்க முடியாத வியட்நாம் பௌத்தத் துறவிகள் தீக்குளித்தார்கள். ஒருவர் பின் ஒருவராகப் பல மாதங்களாகத் தீக்குளித்து வந்தார்கள். உலகம் முழுவதும் அனுதாப அலை உச்சம் தொட்டது. அமெரிக்க ராணுவத்தை உலகம் வெறுத்தது.

ஒரு விடுதலை இயக்கம் கொரில்லாப் போரில் ஈடுபட்டிருந்தாலும், தீக்குளிப்புத் தியாகத் தையும் ஒரு போர் முறையாகவே கையாண்டது.

இதேபோல சுதந்திர இந்தியாவில் பாபர் மசூதியை முஸ்லீம்களிடமிருந்து ஹிந்துக்கள் திரும்பப் பெற, கும்பமேளா சாதுக்களாவது தீக் குளித்திருக்கலாம். அப்படி யாரும் தீக்குளிக்க வில்லை. மாறாக, திரண்டு சென்று பாபர் மசூதியை இடித்துத் தள்ளினார்கள். அது இஸ்லாமியர்களின் மனதைப் புண்படுத்தியதாக உலக நாடுகள் பேசின.

அதுமுதல் டிசம்பர் 6–ஆம் தேதி என்றால் இந்தியா முழுவதும் ஒருவிதப் பரபரப்பு ஏற்படத்தான் செய்கிறது.


வழக்குரைஞர் ஸ்ரீராம் பஞ்சு


ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர்


மாண்பமை இப்ராகிம் கலிபுல்லா

பிறகு வழக்குகள் தொடர்ந்து நடந்தன. ஒரு தீர்வும் எட்டப்படவில்லை. கடைசியாக சர்ச்சைக் குரிய பாபர் மசூதி இருந்த இடம் 2.77 ஏக்கர் மட்டும்தான். இந்த இடத்தை சன்னி வக்பு வாரியம், நிர்மோகி அகாரா, ராம் லல்லா ஆகிய மூன்று அமைப்புகளும் சமமாகப் பிரித்துக் கொள் ளலாம் என்று 1994–இல் தீர்ப்பு வெளியானது.

ஆனால், இந்தத் தீர்ப்பை எதிர்த்து டெல்லி உச்சநீதிமன்றத்தில் 14 மனுக்கள் தாக்கல் செய்யப் பட்டன. இந்த மனுக்களையும், இந்த வழக்கையும் இணைத்து உச்சநீதிமன்றம் சென்ற மார்ச் 8–ஆம் தேதியன்று சமரசத் தீர்வுக்கான ஒரு தீர்ப்பை வழங்கியது.

அந்தச் சமரசக் குழுவில் மூன்று உறுப்பினர்கள் நியமிக்கப்பட்டனர். சுப்ரீம் கோர்ட் முன்னாள் நீதிபதி இப்ராகிம் கலிபுல்லா, வாழும் கலை அமைப்பின் நிறுவனர் ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர், சமரச வழக்கில் புகழ்பெற்ற மூத்த வழக்குரைஞர் ஸ்ரீராம் பஞ்சு ஆகிய மூவரும் நியமிக்கப்பட்டனர். இம்மூவரும் தமிழ்நாட்டைச் சார்ந்தவர்கள் என்பது ஒரு தற்செயலான நிகழ்வு.

இந்தச் சமரசக் குழு எட்டு வாரங்களில் ஒரு சமரசத் தீர்வை உச்சநீதிமன்றத்தில் வழங்க வேண்டும் என்று கேட்டுக் கொள்ளப்பட்டது. இந்த சமரசக் குழுவை 2.77 ஏக்கர் நிலத்தைப் பங்கு போட உரிமைபெற்ற மூன்று தரப்பினரில் சன்னி வக்பு வாரியமும், நிர்மோகி அகாரா அமைப்பும் வரவேற்பதாக அறிவித்தன. எந்தக் கருத்தையும் சொல்லாத மற்றொரு குழு ராம் லல்லா என்ற ஹிந்துக் குழு.



ஆனாலும் மெஜாரிட்டித் தரப்பினரின் கருத்தைக் கவனத்தில் கொண்டு சமரசக் குழு அமைக்கப்பட்டது. எட்டு வாரங்களுக்குப் பிறகு சமரசத் தீர்வு எட்டப்படும் என்று நம்பலாம்.

இந்த வழக்கில் இஸ்லாமியர் மனதில் உள்ள சந்தேகம் என்னவென்றால், ராமர் பிறந்த இடம் என்று கேட்கப்படுகிற அயோத்திக்குப் பிறகு, இதேபோல கிருஷ்ணரின் ஜென்ம ஸ்தானம் என்று மதுராவையும் ஹிந்துக்கள் கேட்கலாம். காசி விஸ்வநாதர் ஆலயத்தையும் கேட்கலாம். இந்த இரண்டிலும் மதுரா கிருஷ்ணர் ஆலயத்தை ஒட்டி ஒரு மசூதி உள்ளது. ராணுவப் பாதுகாப்பில் அது பராமரிக்கப்படுகிறது. அதேபோல காசி விஸ்வநாதர் ஆலயத்தின் மறுபக்கம் ஒரு மசூதி உள்ளது. அங்குள்ள விஸ்வநாதர் ஆலயத்திற்கு இடைஞ்சலாக அது இருப்பதாக ஹிந்துக்கள் கருதுகிறார்கள்.

அயோத்தியைத் தொடர்ந்து மேலும் இந்த இரண்டு இடங்களையும் ஹிந்துக்கள் கேட்டால், அது இஸ்லாமியர்களுக்குத் திருப்தி தராது. இந்த சந்தேகத்தினால்தான் அயோத்தி வழக்கை மிகவும் வலுவாக சன்னி வக்பு வாரியம் நடத்தி வருகிறது.

இதனை அறிந்துகொண்ட காஞ்சி சங்கராச்சாரியார் ஸ்ரீ ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் இஸ்லாமியர்களோடு சமரசத்தில் ஈடுபட்டிருந்த போது, ஹிந்துக்களுக்கு முக்கியமான மூன்று கோயில்களை இஸ்லாமியர்கள் விட்டுக் கொடுத்துவிடுவார்களானால், நான்காவதாக எந்த ஒரு கோரிக்கையையும் ஹிந்துக்கள் முன் வைக்கமாட்டார்கள் என்று நேரடியாகவே உறுதி மொழி தந்தார். ஆனால், இஸ்லாமியர்கள் அதை ஒப்புக்கொள்ளவில்லை.

அதேபோல ஸ்ரீஸ்ரீ ரவிசங்கர் அவர்களும் இந்த முயற்சியில் ஈடுபட்டு ஏறக்குறைய சமரசத்தை நெருங்கியபோது, அவருடைய அணுகுமுறையையே இஸ்லாமியர்கள் சந்தேகத்திற்கு உட்படுத்திவிட்டார்கள்.

இப்போது காணப்படவுள்ள சமரசத் தீர்வு, அயோத்தியின் 2.77 ஏக்கர் நிலம் சம்பந்தப்பட்ட தாவாவுக்கானத் தீர்வாகக் காணப்படுமானால், அது நல்ல தீர்வாக இருக்காது.

ஏனெனில் இது சிவில் வழக்கு அல்ல. இது முழுக்க முழுக்க நம்பிக்கை சார்ந்த உணர்வுப் பூர்வமான வழக்கு. இஸ்லாமியர்களுக்கு அவமானம் ஏற்பட்டது போன்ற உணர்வு அவர்களைக் காயப்படுத்தியுள்ளது. அது தவிர்க்கப்பட்டிருக்குமானால் மிகுந்த வரவேற்புப் பெற்றிருக்கும்.

ஏனெனில் ஜாகீர்உசேன், அப்துல்கலாம் போன்ற இஸ்லாமியர்களை இந்தியாவின் ஜனாதிபதிகளாகவே ஏற்றுக்கொண்ட ஹிந்துக்கள் அகிம்சை வழியில் பாபர் மசூதியை மீட்டெடுத்திருப்பார்களேயானால், அது ஒரு மகத்தான வெற்றியாகக் கொண்டாடப்பட்டிருக்கும்.

ஏனெனில் கிறிஸ்தவரான திரைப்படப் பாடகர் கே.ஜே. ஜேசுதாஸ் கிருஷ்ணர் மீது பாடிய பாடல்களை ஹிந்துக்கள் கேட்டு உருகிப் போகிறார்கள். குருவாயூரப்பன் கோயிலில் அவர்



திரு.நரசிம்மராவ்



திரு.கல்யாண்சிங்

பாடுவதற்குத் தடையில்லை. இதேபோல ஷேக் சின்ன மௌலானா என்ற நாதஸ்வரக் கலைஞர் நாதஸ்வரம் வாசிக்காத ஹிந்துக் கோயில்களே இல்லை. அவரை யாரும் இஸ்லாமியராகக் கருதிய தில்லை. நாதஸ்சுரம் ஹிந்துசமய வாத்தியம்.

இவ்வாறு ஒரு நல்லிணக்கம் நடைமுறையில் இருந்தும்கூட, ஏனோ அவசரப்பட்டுவிட்ட கார ணத்தாலோ அல்லது ஒருசிலர் ஆத்திரப்பட்டு விட்ட காரணத்தாலோ இந்த அசம்பாவிதம் நிகழ்ந்துவிட்டது. முதலில் இந்த அசம்பாவிதத்தை உணர்ந்து வருந்தி, இதனைச் சமன் செய்யுமாறு ஓர் அணுகுமுறை சிந்திக்கப்பட வேண்டும்.

ராமர் பிறந்த இடத்தைப் புனிதத் தலமாக வழிபடுவது ஹிந்துக்களுக்குரிய வழிபாடும் கட மையுமாகும். அதனை இஸ்லாமியர்கள் தடுக் கவோ, மறுக்கவோ கூடாது என்பதை அவர்களும் உணர வேண்டும்.

அப்படியானால், ராமர் பிறந்த இடம் ஹிந்துக் களுக்குக் கிடைத்துத்தான் ஆக வேண்டும். அதேசமயம் காசி, மதுரா ஆகிய மேலும் இரண்டு கோவில்களையும் ஹிந்துக்களுக்கு இஸ்லாமியர் கள் இப்போதே தந்துவிடலாம்.

கௌரவம் பார்க்காமல் காசி மசூதியை மாற்றிக் கட்டிக் கொள்வதற்கோ, மதுரா மசூதியை வேறு இடத்தில் கட்டிக் கொள்வதற்கோ இஸ்லாமி யர்கள் முன்வருவது தோல்வியல்ல.

இந்த மூன்று இடங்களையும் ஹிந்துக் களுக்கு இஸ்லாமியர்கள் வழங்கி விடுவார்களே யானால், மகாத்மா காந்திகூட தோற்றுப்போன ஹிந்து – முஸ்லீம் ஒற்றுமை மிகச் சிறப்பாக மலரும் என்பதில் சந்தேகமில்லை. ஏனெனில், ஹிந்துக்கள் எப்படி முதலில் இந்தியர்களோ, அதே போலத்தான் இஸ்லாமியர்களும் முதலில் இந்தியர் கள். இரண்டாவதாகத்தான் இஸ்லாமியர்கள்.

ஆகவே, சமரசத் தீர்வு என்பது எப்படி எட்டப் படும் என்பதைப் பற்றி எவருக்கும் தெரியாது. ஆனால் எட்டப்படுகிற தீர்வு, இஸ்லாமியர்களுக் கும் ஆறுதல் தர வேண்டும். ஹிந்துக்களுக்கும் நிம்மதி தர வேண்டும்.

இந்த ஆறுதலும் நிம்மதியும்தான் இந்தச் சமரசத் தீர்வில் இடம்பெற வேண்டும். அவ்வாறு இல்லையென்றால் இந்தக் காயம் புரையோடி ரணமாக மாறிவிடலாம். பழிக்குப் பழி என்கிற மனப்போக்கு இந்தியாவில் இரு சமயத்தார் மத்தி யிலும் வளரவிடக் கூடாது.

அடிப்படையில் இந்தியா என்பது அதிக எண்ணிக்கையில் ஹிந்துக்களைக் கொண்ட தேசம். ஆனால் இங்கு சிறுபான்மையினர் என்று கூறப்படுகிற முஸ்லீம்களின் ஜனத்தொகை 20 கோடியாகும். பங்களாதேஷில் மொத்த ஜனத் தொகையே 8 கோடிதான். பாகிஸ்தான் ஜனத் தொகை 20 கோடிதான்.

இந்தியாவிற்குள் இருக்கிற சிறுபான்மை யினர் என்ற பெயரில் உள்ள இஸ்லாமியர்கள் எந்த ஓர் இஸ்லாமிய நாட்டின் மொத்த ஜனத்தொகை யையும் விட அதிகமானவர்கள் என்பதை இங் குள்ள ஹிந்துக்களும் உணர வேண்டும்.

ஒரு சமரசத் தீர்வு இவ்வாறு எட்டு வாரங் களுக்குள் கட்டமைக்கப்படலாம் என்பதே ஒரு மிகப்பெரிய வளர்ச்சியாகும். இந்த சமரசத் தீர்வை உச்சநீதிமன்றம் சார்பற்றத் தீர்வாக வடிவமைத்து வழங்கும் என்ற நம்பிக்கையில், வாசகர்களாகிய நீங்கள் இதைப் பற்றி என்ன எண்ணுகிறீர்களோ, அதை எழுதுங்கள் ஏப்ரல் 12–க்குள்.

**– பி.சி.**

# முழுக் காஷ்மீரையும் மீட்டெடுப்போம்

## விவாதக் கடிதங்களில் சில... சில... சில...

**கா**ஷ்மீர்ப் பிரச்சனை இன்று, நேற்று உருவானதல்ல. இந்தியா சுதந்திரம் பெற்ற நாளிலிருந்து தொடர்வது. புல்வாமா தாக்கு தலுக்குப் பின் பாகிஸ்தானால் சிறைப்பிடிக்கப்பட்ட இந்திய விமானப்படை அதிகாரி அபிநந்தன் வர்த்தமான் விடுவிக்கப்பட்ட நிகழ்வும், அவரது வீரமும், தீரமும் உலகையே திரும்பிப் பார்க்க வைத்திருக்கின்றன. இவ்விவகாரத்தை இந்தியா ராஜதந்திரத்துடன் அணுக வேண்டியது அவசியம். உலக அரங்கில் பாகிஸ்தானை எப்படியெல்லாம் தனிமைப்படுத்த வேண்டும் என்பது குறித்து ஆட்சியாளர்கள் சிந்திப்பதுடன், நமது இராணுவத் தையும், உளவுத்துறையையும் நன்கு கட்டமைப்பது காலத்தின் கட்டாயம்.

– **நவீன்குமார்**, நடுவிக்கோட்டை

**மு**ழுக் காஷ்மீரையும் மீட்டெடுப்போம். பாகிஸ்தானில் பின்லேடன் இல்லை என்று பொய் கூறிய பாகிஸ்தானில் பின்லேடனை எப்படி அமெரிக்க ராணுவம் வீழ்த்தியதோ, அதுபோல் பயங்கரவாதத் தலைவன் மவுலானா மஜீத்தையும், அவன் கூட்டாளிகளையும் அழிக்க வேண்டும். காங்கிரஸ் ஆட்சியில் அன்றே சர்தார் வல்லபபாய் படேலின் சொல் கேட்டு நடந்திருந்தால், காஷ்மீர் முழுவதும் நம் பக்கம் இருந்திருக்கும். பிரதமர் மோடி நல்லது செய்யட்டும்.

– **தி.ஈ.தி. ஈசுவர்மூர்த்தி**, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**நா**ய் வாலை நிமிர்த்த முடியாது என்ற பழ மொழி போன்று, பாகிஸ்தானின் கோணல் புத்தியை மாற்ற முடியாது. ஆகவே, காஷ்மீர்ப் பிரச்சனைக்குக் காரணமான தீவிரவாதிகளை ஒடுக்குவதற்கும், ஒழிப்பதற்கும் ராணுவத்தைப் பயன்படுத்த வேண்டும். பாகிஸ்தானிடம் சாம, பேத, தானம் எடுபடவில்லை. கடைசி ஆயுதம் தண்டம்தான். தற்போதைய நிலையில் வேறு உபாயம் இல்லை.

– **மு. கணபதி**, பெருந்துறை.

**ஜ**ம்மு காஷ்மீர் மாநிலத்தில் சுமார் 20 % நிலப்பரப்பைப் பாகிஸ்தான் கைப்பற்றியதன் விளைவாக எழுந்த எல்லை தாவா இன்றளவும் தீர்க்கப்படவில்லை. பாகிஸ்தானின் கட்டுப்பாட்டில் உள்ள இந்திய எல்லைப் பகுதி வாழ் மக்களின் விருப்பத்தைக் கேட்டு, கண்டு, உணர்ந்து, இந்தியாவிலோ, பாகிஸ்தானிலோ அப்பகுதியை இணையச் செய்யலாம். முழுக் காஷ்மீரையும் மீட்டெடுப்பது இலகுவான காரியமல்ல.

– **த. நாகராஜன்**, சிவகாசி.

**இ**ரும்பு மனிதர் வல்லபபாய் படேலின் வலு வான எதிர்ப்பையும் மீறிக் காஷ்மீர்ப் பிரச்சனையை ஐ.நா.வுக்கு நேரு எடுத்துச் சென்றது பெரும் தவறு. 1948, 1965, 1971 களில் பாகிஸ்தானுடன் நடந்த போர்களில் வென்ற இடங்களை மீண்டும் பாகிஸ்தானிடமே திருப்பித் தந்தது மற்றொரு மாபெரும் தவறு. உதட்டளவில் தீவிரவாத எதிர்ப்பும், உள்ளத்தளவில் காஷ்மீர் விடுதலைப் போர் என்றும் கபட நாடகமாடும் பாகிஸ்தானின் பசப்பலை உலக நாடுகள் மற்றும் இந்தியாவி லுள்ள 16 கோடி இஸ்லாமியர்களும் உணர்ந்தே இருக்கிறார்கள். இந்தியாவுடன் இணைந்து சுதந்திர மாநிலமாக அதிகபட்ச அதிகாரங் களுடன் மாநில சுயாட்சியைப் பெற வேண்டு மென்ற நப்பாசை, காஷ்மீர் இஸ்லாமியர்களிடம் உள்ளது. முழுக் காஷ்மீரும் இந்தியாவுடன் இணைவதே காஷ்மீர்ப் பிரச்சனைக்குச் சரியான தீர்வாகும்.

– **இரா. கல்யாணசுந்தரம்**, மதுரை.

**கா**ஷ்மீர் குறித்துக் கமல்ஹாசன் கூறும் தீர்வு புதிய ஒன்றல்ல! அந்நாளிலிருந்தே இதனை பாக்.

மற்றும் எதிர்த்தரப்பினர் கூறியும், கோரியும் வரு கின்றனர். நாம்தான் இன்றுவரையிலும் அதனைப் புறந்தள்ளி வருகிறோம். இருப்பினும், மிதவாதி யாக – அமைதியை விரும்பும் புதிய பிரதமராக இம்ரான்கான் இருந்திடும் சமயம், பரஸ்பர நல்லுறவு ஏற்படுத்திக்கொள்ளும் வாய்ப்பை நாம் தவறவிடலாகாது. நேருவும், வாஜ்பாயும் போரை அறவே வெறுத்தவர்கள், சமாதானப் பிரியர்கள் என்பதையும் நினைவு கூர்ந்திட வேண்டும்.

– **எஸ்.ஜி. இசட்கான்**, திருப்பூர்.

**மு**ழுக் காஷ்மீரையும் மீட்டெடுப்பது ஒரு பக்கம் இருக்கட்டும்! இருக்கின்ற காஷ்மீரை யாவது பாதுகாத்திடவும், பாகிஸ்தானிலிருந்து தீவிரவாதிகள் இந்திய மண்ணில் இனியாவது துவேசச் செயல்களில் ஈடுபடாமல் தடுத்திடவும் அவ்வப்போது நமது ராணுவப் பலத்தினை அம் மாபாதகர்களுக்கு உணர்த்திட வேண்டும். அரசியல் வேறுபாடின்றி நடவடிக்கைகளுக்கு முழு ஆதரவு தர வேண்டும்.

– **இரா. வளையாபதி**, தோட்டக்குறிச்சி.

**கா**ஷ்மீர் பாரத நாட்டினருக்கானது என்பதை உறுதிப்படுத்தும் வகையில் சமீபத்திய பாகிஸ் தானின் அடிமுட்டாள்தனச் செயலால் மேலும் உறுதிப்படுத்தப்படுகிறது. 130 கோடி பாரத மக் களின் மனங்களில் உள்ள 'காஷ்மீர் நமதே' என்ற எண்ணத்திற்கு வெற்றி என்றென்றும் தொடர வேண்டும்.

– **ப. மூர்த்தி**, பெங்களூரு.

**இ**ந்தியா இழந்த காஷ்மீர்ப் பகுதியை ராணுவத்தின் உதவியோடு மீட்டுவிடலாமா? அணு ஆயுத நாடுகள் தங்களது பிரச்சனையைத் தீர்மானித்துக் கொள்ளப் போரை முன்னெடுக்க லாமா? உலக நாடுகள் சம்மதிக்குமா? பல முறையும் பாகிஸ்தான் இந்தியாவுக்குப் பணிந்தது போல் இனியொரு போரில் பாகிஸ்தான் பணியுமா? விளைவுகளைப் புறந்தள்ள முடியுமா? முழுக் காஷ்மீரையும் மீட்டெடுக்க அனைத்து வழிகளையும் ஆராய வேண்டும். பொருத்தமான வழிமுறையை மேற்கொண்டு இந்தியா முழுக் காஷ்மீரையும் பெறவேண்டும் என்பதே அனை வரின் விருப்பம்.

– **ரவிச்சந்திரன்**, ஆவுடையாள்புரம்.

**இ**ந்திய இராணுவ வீரர்கள் 40 பேர்கள் மீதான தாக்குதலில் நமக்கு மாபெரும் இழப்பு. அரசியல்வாதிகள் திட்டம்தான் போடுகிறார்களே தவிர, செயல்படுத்துவது அதிகாரிகள்தான். ஒரு நாட்டின்மீது தாக்குதல் நடத்த எதிரி நாட்டினர் எப்பொழுது ஏமாந்து இருப்பார்களோ அப்பொழுது தாக்குதல் நடத்திவிடுவார்கள். நாம்தான் நம்மைப் பாதுகாத்துக்கொள்ள வேண்டும். உளவுத்துறை சொல்லியபின் ஏன் எச்சரிக்கையாக இல்லை என்பது என் கேள்வி.

– **தங்கவேல் பழனிச்சாமி**, பெரியகள்ளிவலசு.

**ந**மது பாரத நாட்டிற்கு அண்டை நாட்டின் ஓர் அங்குல இடம் கூடத் தேவையில்லை. அதேசமயம் நம் நாட்டின் ஒரு துளி இடத்தைக்கூட மாற் றானுக்கு விட்டுக்கொடுக்க மாட்டோம். நமது நாட்டை ஆளும் பிரதமர் எந்தக் கட்சியானாலும், மதமானாலும், இனமானாலும் அத்தனையும் மறந்து காஷ்மீர் ஆக்கிரமிப்பிற்கு எதிரான நட வடிக்கைக்குப் பக்கபலமாக இருப்போம். இராணுவத்தைக் கைப்பாவையாக வைக்காமல், சுதந்திரமாக இயங்க உத்தரவிட்ட பிரதமருக்குப் பாராட்டுக்கள்.

– **ப. அடைக்கலம்**, ஸ்ரீவில்லிப்புத்தூர்.

**பா**கிஸ்தானில் பெயருக்குத் தேர்தல் நடத்தப் பட்டாலும், அங்கு ராணுவத்தின் ஆட்சிதான் நடக்கிறது. 1948, 1965, 1971, 1999, 2019 மற்றும் பல சமயங்களில் நாம் அவர்களுக்குப் பாடம் புகட்டியும் திருந்தவில்லை. நாட்டுப்பற்றில் நூற் றுக்கு நூறு நம்பிக்கை உள்ள என் போன்றோர், காஷ்மீர்ப் பிரச்சனைக்கு நிரந்தரத் தீர்வு வேண்டும் என்று விரும்புகிறோம். காந்தியடிகள் சொன்ன 'செய் அல்லது செத்துமடி' அறிவுரை ஒவ்வோர் இந்தியனும் ஏற்க வேண்டும். ஒவ்வோர் இந்தியனும் அபிநந்தன் ஆக வேண்டும். பின் லேடனை எப்படி அமெரிக்கா பழி தீர்த்ததோ, அது போல பாகிஸ்தானில் உள்ள ஒவ்வொரு தீவிர வாதியையும் அழிக்க நாம் உடனே தயாராக வேண்டும்.

– **ராமன் தர்மலிங்கம்**, லவ்டேல்.

**இ**ன்றைய நம் கடமை முழுக் காஷ்மீரையும் மீட்டு எடுப்பதுதான். பாகிஸ்தானின் தாக்குதல் களைச் சமாளித்து, நம் காஷ்மீரில் வாழும் இந்திய மக்களை மீட்டு எடுப்பதுதான் நாம் நமக்காக, நம்

நாட்டிற்காகச் சுதந்திரம் வாங்கிக் கொடுத்த அனைத்து சுதந்திரத் தியாகிகளுக்கும் செய்யும் நன்றிக்கடன். இந்த எண்ணம் நம் மனதில் வருமென்றால், நாம் நிச்சயம் எப்படியேனும் நம் காஷ்மீர் மாநிலத்தை மீட்டெடுத்து விடுவோம். இப்படி மீட்டெடுப்பதுதான் நம் நாட்டிற்குக் கிடைத்த முழு வெற்றி. இதற்காகத்தான் பிரதமர் மோடி அவர்கள் பாடுபடுகிறார். நாம் நிச்சயம் நம் காஷ்மீரை முழுமையாக மீட்டெடுப்போம் என்று நம்பிக்கை கொள்வோம்.

– **உஷா முத்துராமன்**, மதுரை.

**நூ**று ஆண்டுகள் முன்பு இந்தியா பிளவு படாமல் இருந்தபோது மக்கள் தொகை 30 கோடி. இப்போது பாகிஸ்தான், பங்களாதேசம் இல் லாமலேயே 130 கோடி ஆகிவிட்டது. ஆகவே இந்தக் காஷ்மீர்ப் பிரச்சனையை வைத்துத்தான் உலகின் பூபாரத்தைக் குறைக்க வேண்டும் போலிருக்கிறது. இந்தியா, சீனா, பாகிஸ்தான் ஆகிய மூன்று அணு ஆயுத நாடுகள் மோதிக் கொண்டால் என்ன ஆகும்? பாகிஸ்தானை ராணுவ பலத்தால் முறியடிக்க முடிந்தால் மட்டுமே முழுக் காஷ்மீரையும் இந்தியா மீட்க முடியும். இதில் சீனா தலையிட்டால் என்ன ஆகும்? அணு ஆயுதங்கள் தீவிரவாதிகள் கையில் சிக்கி விட்டால் என்ன ஆகும்?

– **ம.பெ. சுதந்திரகுமார்**, சென்னை.

**பு**ல்வாமா தாக்குதலை நமது ராணுவ நுண்ணறிவுப் பிரிவினரால்கூட யூகிக்க முடியவில்லை என்பது பெரும் வியப்பாகவும், வேதனை அளிப்பதாகவும் உள்ளது. துணை இராணுவத்தைச் சார்ந்த 40 வீரர்கள் பலியானதை நினைக்கும்போது நெஞ்சம் பதறுகிறது. இனி மேலும் இதுபோன்ற கொடூரத் தாக்குதல்கள் நடக்கக்கூடாது. தீவிரவாதத்தை அழிக்க நட வடிக்கை எடுக்காமல் இருப்பதும் தீவிரவாதத்தை ஆதரிப்பது போன்றதுதான் என்ற ஒரு சாராரின் கூற்று முற்றிலும் நியாயமானதே. மத பயங்கரவாதிகள் பாகிஸ்தான் சென்று பதுங்கி வாழ அந்நாடு உதவுகிறது என்பதுவும், பாகிஸ் தானுக்கு இந்தியா மீது ஒரு வக்கிரம் இருந்து கொண்டே வருகிறது என்பதுவும் மிகவும் கண்டிக்கத்தக்கதும், தண்டிக்கத்தக்கதும் ஆகும்.

– உ.மு.ந. ராசன் கலாமணி,
கோபிசெட்டிபாளையம்.

# விதி




**மு**க்காடுபோட்டு மூடுகிறார்கள்
முகம் தெரியாமல் மூடுகிறார்கள்
கைகளை மறைத்து மூடுகிறார்கள்
அடையாளம் தெரியாமல் மூடுகிறார்கள்

சிலைகளுக்குப் போய்
இத்தனை பயமா?
சிந்திக்கத்தான் வேண்டியுள்ளது

தொண்டர்கள் கூடித் திறந்த சிலைகளை
யாருக்கும் தெரியாமல் இரவில்
யாரோ மூடுகிறார்கள்

யாரை மூடுகிறார்கள்?
ஏன் மூடுகிறார்கள்?

எல்லாமே விதிதானாம்

தலைவிதியல்லவாம்
தேர்தல் விதியாம்!

– நாநி.

அட்டைப்பட விளக்கம்



## அருள்மிகு மீனாட்சி உடனுறை சொக்கநாதர்

**ம**துரை மீனாட்சி அம்மன், சொக்கநாதர் திருக்கல்யாண நிகழ்ச்சி ஆண்டுதோறும் மதுரை மாநகரத்தில் சித்திரைத் திங்களில் நடைபெறும் புகழ்பெற்ற திருவிழா. மதுரையை ஆட்சிசெய்த மீனாட்சி, பல நாடுகள்மீதும் படையெடுத்து வென்று, கயிலையை அடைந்து, சிவபெருமானைக் கண்டபோது அதுவரை மீனாட்சியம்மனுக்கு இருந்த மூன்றாவது மார்பகம் மறைந்ததால், அவரே தனது மணாளன் என உணர்ந்து, பின் அவரை மணம்புரிந்ததாகப் புராண வரலாறு கூறுகிறது. இந்த ஏப்ரல் 18 அன்று மதுரையில் மீனாட்சி திருக்கல்யாண நிகழ்ச்சி நடைபெறுவதை முன்னிட்டு, ஓவியர் ஸ்யாம் அவர்கள் கைவண்ணத்தில் அருள்மிகு மீனாட்சி உடனுறை சொக்கநாதர் வண்ண ஓவியம் 'ஓம் சக்தி' அட்டைப்படமாக அலங்கரிக்கிறது.

– ஆர்.வி.

**ஜ**னநாயக முறையில் பாகித்தான் அணுகி யிருந்தால் நாமும் அமைதி முறையில் பேச்சு வார்த்தை நடத்தலாம். ஆனால், பாகித்தான் ஒவ் வொரு முறையும் காஷ்மீர் பிரச்சனையை இராணு வத்தைக் கொண்டே அணுகுகிறது. நேருக்கு நேராக இராணுவத்துடன் மோதிய ஒவ்வொரு முறையும் அது தோல்வியையே சந்தித்தது. அது மட்டுமல்லாமல், தன்னுடைய ஒரு பகுதியான கிழக்குப் பாகித்தானையே இழந்தது. பாகித்தான் திருந்தாமல் மேலும் மேலும் வன்முறைகளைக் கட்டவிழ்த்து உயிர்களைப் பலிவாங்கிக் கொண் டுள்ளது. உயிருக்கே ஆபத்தாகும் புரையோடிப் போன காலை வெட்டி எடுப்பதுபோல, தீவிர வாதத்தை ஊக்குவித்து வன்முறையைத் தூண்டி விடும் பாகித்தானுக்கு இராணுவத்தின் மூலம் பதிலடி கொடுத்துக் காஷ்மீரை ஆக்கிரமித்துள்ள பாகித்தானை அங்கிருந்து விரட்டி முழுக் காஷ் மீரை இந்தியாவின் பகுதிதான் என அறிவிக்க வேண்டும்.

– **புலவர் கருமலைத் தமிழாழன்**, ஒசூர்.

**பா**கிஸ்தான் ஆக்கிரமிப்புக் காஷ்மீரில் ஜன நாயகம் இல்லை. ராணுவ ஆதிக்கத்தில் அமுங் கிய அரசு. பயங்கரவாதிகளின் உறைவிடமாக பாக். காஷ்மீர் உள்ளது. இந்தியாவின் மேல் உள்ள வன்மத்தால் தொடர்ந்து எல்லை தாண்டிய போர்ப் படையெடுப்பு நடந்து கொண்டே இருக்கிறது. அன்றாடம் நமது போர் வீரர்களும் – ஏன் சாதாரண மக்களும் மடிகின்றனர். போதும். தாமத மில்லாமல் இனி ராணுவப் போர் மூலமாகத் தக்க நடவடிக்கை எடுக்க வேண்டும். பயங்கரவாதிகள் அடியோடு அழிக்கப்பட வேண்டும். முழு வெற்றி யாகக் காஷ்மீர் முழுவதையும் நமதாக்க வேண் டும். தொடர்ந்து பாகிஸ்தான் வாலாட்டினால், பாகிஸ்தானையே படையெடுத்து நிர்மூலமாக்க வேண்டும்.

– **முனைவர் டாக்டர் ஜே.ஜி. சண்முகநாதன்**, கோவை.

**பா**கிஸ்தானியர்கள் மதவெறி பிடித்த கூட்டத் தினர். தீவிரவாதிகளை உருவாக்கிக் கொண்டு, இந்திய நாட்டின்மீது பழி தீர்க்க வேண்டும் என்ற உணர்வுகள் கொண்டவர்கள். தற்சமயம் பிரதமர் மோடி, ராணுவத்திற்கு முழுச் சுதந்திரம் வழங்கியுள்ளது பாராட்டுக்குரியது. இந்தியா உலக நாடுகளின் ஒப்புதல்களைக் கேட்டு இறுதி முடிவு எடுக்கப் பாடுபட வேண்டும். ஒன்று காஷ்மீர்ப் பகுதியை இந்திய ராணுவம் மூலம் மீட்க வேண் டும் அல்லது பொது வாக்கெடுப்பு நடத்திச் சமா தானத்தைப் பறக்கவிட வேண்டும். மோடி ஆட்சி யில் காஷ்மீர் விடுதலை பெற்று இந்தியாவுடன் இணைக்கப்பட வேண்டும்.

– **லிங்கம் சின்னசாமி**, தாராபுரம்.

**கா**ஷ்மீர்ப் பிரச்சனை என்று வரும்போது, நம்முடைய பசும்பொன் முத்துராமலிங்க பிரம்மச் சாரி, இந்திய நாடாளுமன்றத்தில் முழங்கிய முழக் கமே நினைவுக்கு வருகிறது. "ஏன் வருடந்தோறும் கோடிக்கணக்கில் மக்கள் வரிப்பணத்தை வீணாக் குகிறீர்கள்? காஷ்மீர் எங்களுடையேதே என அறிவித்துப் படை பலத்தால் காஷ்மீரத்தை பாரத நாட்டோடு இணைத்துக் கொள்ளுங்கள் அல்லது காஷ்மீர் முழுவதையும் கொடுத்துவிட்டு நிம்மதி யாக இருங்கள். பாகிஸ்தான் நமது சகோதர நாடுதானே" என்றார். சிந்திக்க வேண்டிய கருத்துத்தான்.

– **மு. பழனி இராகுலதாசன்**, தேவகோட்டை.

கட்டுரை

இன்று நாள்தோறும் பாலியல் வன்கொடுமைகள் பற்றிய செய்திகள் ஊடகங்களில் வெளியாகிக் கொண்டே இருப்பதைக் காணுகின்றோம். இந்தப் பாலியல் வன்கொடுமைக்குக் குழந்தைகள் முதல் முதியவர்கள் வரை எல்லாப் பருவத்துப் பெண்களும் பெரும் பாதிப்புக்கு உள்ளாகி வருகின்றனர்.



அத்தகைய குற்றங்கள் தொடர்ந்து சமுதாயத்தில் நடந்து கொண்டுதான் இருக்கின்றன.

சாதி, மத, இன வேறுபாடுகள் நீங்கி எல்லாரும் ஒருவரே என்னும் மனிதநேயப் பார்வை மலர வேண்டுமானால், காதல் மணம் – கலப்பு மணம் ஏற்கப்பட வேண்டும் என நெறி வகுத்தவர் திருவள்ளுவர்.

திருக்குறள் காமத்துப் பாலில், தகை யணங்கு உறுத்தல், குறிப் பறிதல், நாணுத் துறவுரைத்தல், அலர் அறிவுறுத்தல் என்னும் நான்கு அதிகாரங்கள் களவிற்கு உரியவை. இந்த நான்கு அதிகாரங்களில் எங்குமே காதலர்கள் உடல் உறவு கொண்டார்கள் என்ற குறிப்பே இல்லை.

# இன்றைய வாழ்வில் பாலியல் சிக்கல்களும் திருவள்ளுவர் தரும் தீர்வுகளும்

திருவள்ளுவர் காலத்தில் இன்றைய அளவிற்குப் பாலியல் வன்கொடுமைகள் இருந்திருக்க வாய்ப்புகள் இருந்திருக்காது என்றாலும், ஓரளவிற்காவது இருந்துள்ளன என்பதைத் திருக்குறள்வழி அறிய முடிகின்றது.

அந்தப் பாலியல் வன்கொடுமைகளைப் பதிவு செய்யும் திருவள்ளுவர், அவற்றிற்கான தீர்வுகளையும் நேரடியாகவும் மறைமுகமாகவும் வெளிப்படுத்தியுள்ளார்; அவற்றை இனங்காண்பதே இந்தக் கட்டுரையின் நோக்கம்.



முனைவர் கு. மோகனராசு

**காதலும் உடல் உறவும் :** காதலர்கள் காதலித்து உடல்உறவு கொண்டு விட்டுப் பின்னர் ஏதோ காரணங்கள் சொல்லிப் பிரிகின்றார்கள் என்றால், அது பாலியல் வன்முறையதாகி விடுகின்றது; சட்டப்படி குற்றமானதாகி விடுகின்றது.

தமிழ் அகப்பொருள் நெறியில் இடம்பெறும், இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம், தோழியிற் கூட்டம் ஆகியன தலைமக்களின் உடல் உறவிற்கு வழிவகுக்கும் என்பதால், அவற்றை முற்றிலுமாகத் தவிர்த்துள்ளார் திருவள்ளுவர்.

காதலனும் காதலியும் சந்திப்பதால் ஏற்படும் அலர், தூற்றும் நோக்கினதாக அமையாமல், ஏற்கும் நோக்கினதாக அமைய வேண்டும்; அதே வேளையில், காதலர் சந்திப்பின்போது, தவறுகள் ஏற்படாதவாறு சமுதாயம் உன்னிப்பாகக் கண்காணிக்க வேண்டும் என்பது

திருவள்ளுவரின் புதிய அகப்பொருள் நெறி.

ஆகவேதான் காதல் மணத்தை – கலப்பு மணத்தை வரவேற்கும் திருவள்ளுவர், களவுக் கால வாழ்க்கையில் உடல் உறவு எனப் புதிய அகப்பொருள் நெறி வகுப்பதை உயத்துணர முடிகின்றது.

**மனைவியிடம் வரம்பு கடந்து நடத்தல் :** ஆண் – பெண் பாலியல் உறவு என்பது, இருவரிடத்தும் காம உணர்வு சமஅளவில் இருக்கும்போதுதான் அமைவு பெறும். அப்படி இல்லையென்றால், கணவன் மனைவியேயானாலும் அந்த உறவில் சில நேரங்களில் மன முறிவுகள் ஏற்பட்டு, அவை மண முறிவுகள் வரை செல்வதை உலகம் முழுவதும் காண முடிகின்றது; வழக்கு மன்றங்களில் குடும்ப வழக்குகள் இவ்வகையில் பெருகி வருவதைக் காண முடிகின்றது. சட்டப்படி இது குற்றம் ஆகும்.

இத்தகைய பாலியல் அவலங்கள் எக்காலத்திலும் இருக்கக் கூடியன என்பதால், திருவள்ளுவரும் இத்தகைய பாலியல் வன்கொடுமை பற்றிச் சிந்தித்துள்ளார்.

"எளிதுஎன இல்இறப்பான் எய்தும் எஞ்ஞான்றும்

விளியாது நிற்கும் பழி" (குறள். 145)

"பகைபாவம் அச்சம் பழிஎன நான்கும்

இகவாவாம் இல்இறப்பான் கண்" (குறள். 146)

என வரும் இரண்டு குறள்களும், கணவன் தன் மனைவியிடம் வரம்பு கடந்து நடந்து கொள்வதைச் சுட்டுகின்றன. வரம்பு கடந்து நடத்தல் என்பதுள், பாலியல் வன்கொடுமையும் அடங்கும்.

இத்தகைய பாலியல் வன்கொடுமையாளர்கள், 1. என்றைக்கும் நீங்காத பழியை அடைகிறார்கள்; 2. பகை, பாவம், அச்சம், பழி என்னும் நான்கும் வந்து அடையும் அவல நிலைக்கு அவர்கள் தள்ளப்படுகிறார்கள்.

அப்படியானால், இத்தகைய பாலியல் வன்கொடுமைச் செயல் நிகழாதிருக்க என்னதான் வழி? திருவள்ளுவர் அதற்குப் பின்வரும் குறள்களில் தீர்வு தருகின்றார்:

"ஒருதலையான் இன்னாது காமம் காப்போல

இருதலை யானும் இனிது" (குறள் 1196 )

"மலரினும் மெல்லிது காமம் சிலர்அதன்

செவ்வி தலைப்படு வார்" (குறள் 1289 )

காமம் உணர்வு என்பது மலரைவிட மென்மையான ஒன்று; அதனைப் பக்குவமாகத்தான் நுகர வேண்டும்; கணவன் மனைவி ஆகிய இருவரிடமும் காமம் சமநிலைப்படும்போதுதான் உடல் உறவு கொள்ள வேண்டும். இவைதான் திருவள்ளுவர் தரும் தீர்வு.

மற்றொன்று, மனைவியைக் காமப் பொருளாகப் பார்க்காமல், வாழ்க்கைக்கு அமைந்த துணையாக – நண்பனாகக் கருதுதலும் வேண்டும் என்பதை,

"உடம்பொடு உயிரிடை என்னமற்று அன்ன

மடந்தையொடு எம்மிடை நட்பு" (குறள் 1122)

என்னும் குறளில் வரும் 'நட்பு' என்னும் சொல் உய்த்துணர வைக்கின்றது

**பிறன் மனைவியை விரும்புதல் :** இன்னொருவன் மனைவியை விரும்புதல் – பாலியல் உறவு கொள்ளுதல் – பாலியல் வன்முறைகளில் ஈடுபடுதல் என்பது இன்று எல்லா மக்கள் தொடர்பு ஊடகங்களிலும் பரவலாகப் பேசப்படுவதையும், அதனால் கொலை, கற்பழிப்பு முதலிய பாவச் செயல்கள் தொடர்ந்து நிகழ்ந்து வருவதையும் அறிய முடிகின்றது.

'பிறன்இல் விழையாமை' என்னும் அதிகாரம் பெரிதும் அடுத்தவன் மனைவியை விரும்பி, பாலியல் வன்கொடுமைகளில் ஈடுபடும் ஆடவர்களின் இழிநிலைகளை எடுத்துரைப்பதாக அமைகின்றது.

''தெளிந்தார் இல் தீமை புரிந்து ஒழுகுவார்'' (குறள். 143) என்னும் தொடர், தன்னை நம்பிய நண்பனின் மனைவியோடு பாலியல் உறவு கொள்ளும் வன்முறையாளர்களைச் சுட்டுவதாகவும் அமைகின்றது.

இவர்களின் இத்தகைய இழிசெயல்களை – பாவச்செயல்களை – பேதைமைக்குரியது எனப் பொதுவாகச் சுட்டும் திருவள்ளுவர், இவர்களை

''அறங்கடை நின்றார்'' 'பேதையருள் எல்லாம் கொடிய பேதையர்' 'விளிந்தாரின் வேறு அல்லர்' (செத்த பிணத்திற்குச் சமமானவர்கள்) என்றெல்லாம் பழித்துரைக்கின்றார்; இவ்வாறு,

இப்பாவிகளைக் கருத வேண்டும் – புறக் கணிக்க வேண்டும் – என்றும் சமுதாயத் திற்கு அறிவுறுத்துகின்றார்.

இவ்வாறு சமுதாய விழிப்புணர்வுக்கு வழிகாட்டும் திருவள்ளுவர், அதற்குரிய தீர்வு களையும் நுட்பமாக உணர்த்துகின்றார். சமுதாயத்தில் வாழும் ஆடவர்கள், 1. அறம், பொருள் இன்னது என அறிய வேண்டும் (குறள். 141), 2. அறன் இயலான் இல் வாழ்க்கை வாழ நினைக்க வேண்டும் (குறள். 147), 3. பிறன் மனை நோக்காமையைச் சான்றாண்மை – பேராண்மை – சமுதாய ஒழுகலாறு என அறிதல் வேண்டும் (குறள். 148) என்று அறிவுறுத்துகின்றார்.



**பெண்ணுக்கு ஆண் அடிமையாதல் :** குடும்ப வாழ்க்கையில் கணவனும் மனைவி யும் ஒன்றி வாழ்தல் இன்றி – யாருக்கும் யாரும் அடிமையில்லை என்னும் பெருமிதத் தோடு வாழ்தல் இன்றி – பெண்களுக்கு அடிமையாகி வாழும் அவலநிலை பல குடும்பங்களில் இன்றும் காணப்படுகின்றது; அதற்கு இரண்டு காரணங்களை முதன்மை யாகக் கூறலாம். 1. பணம், 2. மிகு காமம்.

மிகு காமத்தால், பெண்களுக்கு அடிமை களாகும் ஆடவர்களைப் பற்றிப் ‘பெண்வழிச் சேறல்’ என்ற அதிகாரத்தில் திருவள்ளுவர் விரிவாகப் பேசுகிறார். இது ஒருவகைப் பாலியல் பிறழ்வே.

மிகு காமத்தால், பெண்களுக்கு ஆண்கள் அடிமையாகும் அவலத்தை ஐந்து படிநிலை களாகத் திருவள்ளுவர் வரையறுத்துக் கூறு கின்றார். 1. மிகு காமத்தால் மனைவியை விழைதல் (குறள்கள் 901, 902), 2. தாழ்தல் (குறள் 903), 3. அஞ்சுதல் (குறள்கள் 904, 905, 906), 4. ஏவியவாறு செய்தல் (குறள்கள் 907, 909), 5. ஏவாமலேயே எவக்கூடும் என எண்ணித் தானே செய்தல் (குறள். 908).

இதனால் ஆண்கள், இழிநிலையை அடை கிறார்கள்; மதிப்பை இழக்கிறார்கள்; செயல் ஆற்றல்களை வீணாக்கிக் கொள்கிறார்கள்; நல்லன செய்ய முடியாத நிலைக்கு ஆளாகிறார் கள்; அறம், பொருள், இன்ப மேம்பாட்டை இழக் கிறார்கள்; இல்லறக் கடமைகளை மறக்கிறார்கள்; மறுமையை இழக்கிறார்கள் – இவற்றை இந்த அதி காரத்தில் தெளிவு செய்துள்ளார் திருவள்ளுவர்.

பெண் ஏவல் செய்து ஒழுகும் ஆண்களைச் சமுதாயம் தாழ்வாகப் பார்க்கும். அதனால் ஆண் கள் இந்த அவலநிலையை அடையாதிருக்கப் பின்வரும் தீர்வுகளைத் தருகின்றார் திரு வள்ளுவர்.

1. மிகு காமம் பேரழிவு என்றும் ஆண்மை பெண்மைக்கு அடிமையாகக் கூடாது என்றும் உணர்தல் வேண்டும் (குறள். 907), 2. தெளிந்த அறிவோடும் மனக் கட்டுப்பாட்டோடும் வாழ வேண்டும் (குறள். 910), 3. சமுதாயக் கட்ட மைப்பைப் பேண வேண்டும் (குறள். 902), 4. அறம், பொருள், இன்ப நெறிகளில் நாட்டம்

கொள்ள வேண்டும் (குறள். 909), 5. குறிக்கோள் வாழ்வு நோக்கிய செயற்பாடுகளில் ஈடுபாடு கொள்ள வேண்டும் (குறள். 901).

**வரைவில் மகளிர் நாட்டம் :** வரைவில் மகளிர் என்றால், பரத்தையர்கள் மட்டும் அல்லர்; பணத் திற்காக – பதவிக்காக – மிகு காம உணர்வைத் தீர்த்துக் கொள்வதற்காக நெறி பிறழ்ந்து பிற ஆடவர்களோடு தொடர்பு கொள்ளும் குடும்பப் பெண்கள் உள்ளிட்ட எல்லா வகையான பெண் களும் 'வரைவில் மகளிர்' என்பதற்குள் அடங்குவர்.

இவர்களுடன் உறவு கொள்ளும் ஆடவர்கள் நலம் இழந்து, வளம் இழந்து, உறவுகளை இழந்து, தடுமாறித் தடம்மாறிப் போகிறார்கள். சமுதாய மதிப்பை இழக்கிறார்கள்; குடும்பம் சீர்குலைந்து போகிறது. இவற்றையெல்லாம் தெளிவாக 'வரை வில் மகளிர்' அதிகாரத்தில் பதிவு செய்துள்ளார் திருவள்ளுவர்.

அறிவுடையவர்கள், மனக்கட்டுப்பாடு உடை யவர்கள் வரைவின் மகளிரோடு உறவு கொள்ள மாட்டார்கள் என்னும் கருத்துகளையும் சமுதாயத் தில் பரப்புரைகள் செய்தல் வேண்டும்.

இதற்கு ஆடவர்களை மையமிட்டுப் பின் வரும் தீர்வுகளைத் திருவள்ளுவர் முன்வைப்பதை உய்த்துணர முடிகின்றது :

1. வரைவின் மகளிரின் இயல்புகளையும், செயற்பாடுகளையும் அவற்றால் விளையும் தீமை களையும் அறிந்து தெளிந்து, ஆடவர்கள் வரை வின் மகளிர் தொடர்பு கொள்ளுதலைத் தவிர்த் தல் வேண்டும். 2. ஆடவர்கள் மனக்கட்டுப்பாடு (நிறை நெஞ்சம்) உடையவர்களாக – ஒருவனுக்கும் ஒருத்தி என்னும் ஒழுகலாறு வாய்க்கப் பெற்றவர் களாக – வாழ வேண்டும். 3. ஆயும் அறிவினராக வாழ்பவர்கள், வரைவின் மகளிர் தொடர்பை என்ணிக்கூடப் பார்க்கக் கூடாது.

**துறவு வாழ்க்கையும் பாலியல் வன்முறை களும் :** இல்லறத்தில் வாழ்வாங்கு வாழ்ந்து பின்னரே துறவு மேற்கொள்ள வேண்டும் என்பது வள்ளுவம். அப்படித் துறவு மேற்கொள்பவர்கள், எல்லா வகையான ஆசைகளையும் விட்டவர் களாக வாழ வேண்டும் என்பது பொது எதிர் பார்ப்பு.

இதனைத் தெளிவாக அறிந்த திருவள்ளுவப் பெருந்தகை, இளமையில் துறவு மேற்கொள்வதை ஏற்கவில்லை. துறவு வாழ்க்கையில், போலித் துறவிகள் எப்படிப்பட்டவர்கள் என்பதைக் கூடா ஒழுக்கம் அதிகாரத்தில் படம்பிடித்துக் காட்டு கின்றார் திருவள்ளுவப் பெருந்தகை: இவர்களின் ஒழுக்கத்தைப் 'படிற்று ஒழுக்கம்' என்கிறார்; இதில் பாலியல் வன்கொடுமைகளும் அடங்கும். இவர்களைக் கொடியவர்கள் (வன்கணார்) என்றே சாடுகின்றார்.

துறவு வேடத்தில் இருக்கின்றார்கள், ஆகவே நல்லவர்களாக இருப்பார்கள் என்று சமுதாயம் நம்பி ஏமாந்துவிடக் கூடாது என்பதை,

"கணைகொடிது யாழ்கோடு செவ்விது ஆங்கன்ன

வினைபடு பாலால் கொளல்" (குறள் 279)

என்னும் குறள்வழி எச்சரிக்கின்றார் திரு வள்ளுவர். துறவிகள் வெளிப்படையாகவும் மறை முகமாகவும் மேற்கொள்ளும் செயற்பாடுகளை விழிப்போடு கண்காணிக்க வேண்டும் என்று அறிவுறுத்துகின்றார்.

இதற்குத் தீர்வுகள் தரும் நோக்கில் துறவு வாழ்க்கை மேற்கொள்பவர்களைப் பின்வருமாறு ஆற்றுப்படுத்துகின்றார் திருவள்ளுவர் என உய்த்தறிய முடிகின்றது:

1. மழித்தலையும் நீட்டலையும் வேடத்திற்கு உரியதாக்கிக் கொள்ளக் கூடாது (குறள் 280), 2. சான்றோர்கள் பழிப்பனவற்றை விட்டுவிட வேண்டும் (குறள் 280), 3. சிற்றின்பம் வெஃகி அறன் அல்ல செய்தல் கூடாது (குறள் 173), 4. மனச்சாட்சிக்கு அஞ்சுதல் வேண்டும் (குறள் 271), 5. மனமறியக் குற்றம் செய்தல் கூடாது (குறள் 272), 6. மன வலிமை வேண்டும் (குறள் 273), மன மாசு கூடாது (குறள் 278), 7. மனத்தளவில் எல்லாவற்றையும் துறத்தல் வேண்டும் (குறள் 276), 8. சமுதாயத்தை வஞ்சித்து வாழ நினைத்தல் கூடாது (குறள் 276).

பாலியல் சார்ந்த கொடுமைகள் இன்றையக் கால அளவிற்கு இல்லை என்றாலும், அன்றும் இருந்திருக்கின்றன; அவற்றைத் திருவள்ளுவர் பதிவு செய்து, அவற்றின் கொடுமைகளை எடுத் துரைத்து, அவற்றைப் போக்குவதற்கான வழி முறைகளையும் தந்துள்ளார் என்பது தெளிவு செய்யப்பட்டுள்ளது. ●

# சுப்ரபாரதிமணியன்



கட்டுரை

# எல்லோருக்குமான சூழலியல்

"இயற்கை, பூமி இவை மனிதனின் சாதாரணமான ஆசைகளைச் சாதாரணமாகவே நிறைவேற்றும். ஆனால் மனிதனின் பேராசையை நிறைவேற்றாது'' என்ற காந்தியின் வாசகம் சூழலுடன் ஒவ்வொரு கணத்திலும் இணைக்கப்படுகிறது

மனிதனின் பேராசையும் இயற்கையைச் சுரண்டிச் சூழல்களைத் தொடர்ந்து நாசம் செய்து கொண்டிருக்கிறது. இயற்கை வளங்களை மனிதர்கள் அதிக உரிமை எடுத்துக் கொண்டு சுரண்டி வருவதையும் மனிதனின் பயன்பாட்டிற்காகவே இருப்பதாக எண்ணிக்கொண்டு செயல்படுவதையும் மறுக்கும் 'சூழலியல்' என்ற கோட்பாட்டை நார்வே நாட்டைச் சேர்ந்த அர்னே நேஸ் என்ற இயற்கையாளர் முன்வைக்கிறார்.

மனிதர்களை மையம் கொண்டிருக்கிற இந்த வகை அணுகுமுறையை இந்தச் சூழலியல் கொள்கைகள் விமர்சிக்கின்றன.

பூமி மனிதர்கள் பயன்படுத்திக் கொள்ள இருக்கிறது. தங்களுக்காக இயற்கையை மாற்றிக் கொள்ளலாம். அது ஒருவகையில் எப்போதாவது பெரிய அளவில் கேட்டை உருவாக்கும். அப்படிக் கேடுகளைக் கட்டிக்கொண்டு மனிதனைப் பாதுகாத்துக்கொள்ளப் புது வரையறைகளை உருவாக்கிக் கொள்ளலாம் என்று சொல்லப்படுவதை 'சூழலியல் கொள்கைகள்' விமர்சிக்கின்றன.

இதன்மூலம் கானுயிர் பல்லுயிர்ப் பாதுகாப்பு கவனத்தில் கொள்ளப்பட வேண்டும். இயற்கையைப் பின்பற்றி எளிய வாழ்க்கை நெறிகளைக் கடைப்பிடிக்க வேண்டும். இயற்கையைப் பெருமளவில் சேதப்படுத்தாமல் இருக்க, மக்கள் தொகையைக் கட்டுப்படுத்த வேண்டும் என்பதன் அடிப்படையே சாரமாக இருக்க வேண்டியிருக்கிறது.

பூமியில் உள்ள ஒவ்வோர் உயிருக்கும் சமமான உரிமை உண்டு. ஓர் உயிரினம் மீது மற்றோர் உயிரினம் அதிகாரம் செலுத்த எந்தவித உரிமையும் இல்லை. மனித உயிர்கள் மற்றும் மனிதர் அல்லாத பிற உயிரினங்களின் வாழ்வு மனிதர்களின் பயன்பாட்டிற்கான அளவுகோலைச் சார்ந்ததல்ல. மனிதன் தன் அடிப்படைத் தேவைகளைப் பூமியைக் கொண்டு நிறைவேற்றிக் கொள்ளலாம். அதை மீறிப் பூமியின் செழுமையைச் சுரண்ட மனிதர்களுக்கு உரிமையில்லை.



பெரியது, சிறப்புடையது என்ற கருதுகோள்களில் உடன்பாடு இல்லாமல், எல்லா உயிர்களும் மதிக்கப்பட வேண்டும் என்பதை அர்னே நேஸ் வலியுறுத்தி இருக்கிறார். இயற்கை மனிதனால் சுரண்டப்படுகிறது. பூமியில் வாழும் பிற உயிரினங்களும் சுரண்டப் படுகின்றன. அதேபோல் சமூகச் சூழல்களில் பெண்களும்



சுரண்டப்பட்டு வருகிறார்கள் என்பதை ‘ஆண் சூழலியல் அடிப் படைவாதம்’ என்று சொல்லப் படுவதுண்டு. இதற்கு எதிராகப் பெண் சூழலியல் முன்வைக்கப் படுகிறது.

உயிர்களை ஒருவரின் விருப்ப மும் தேவையும் சார்ந்து பயன் படுத்திக் கொள்வதற்கு யாருக்கும் உரிமை இல்லை என்று அர்னே நேஸ் சூழலியல் கோட்பாடு சொல்கிறது. மனிதர் களை முதன்மைப்படுத்தும் சூழலியல் அணுகு முறைக்கு எதிரானதாக இருக்கும் வேளையில் மனிதனுக்கு எவ்விதத்திலும் எதிரானதல்ல என்று தீர்க்கமாகச் சொல்லப்படுகிறது.

இயற்கைச் சூழலியல் என்று வலியுறுத்திய அர்னே நேஸ் காந்தியத்தில் நம்பிக்கையுடையவர்.

அர்னேவிற்குப் பிடித்த வர்ணம் பச்சை. பிடித்த விலங்கு எலி, பன்றி. அவருக்குப் பிடித்த படம் ஆட்டன் பரோவின் ‘காந்தி’ திரைப்படம். கொல்ல வருவது பசுவென்றாலும் கொன்று விடு என்றார் காந்தி. காயப்பட்டுத் துடிக்கும் விலங்குகளைக் காப்பாற்றுவதைவிட கொல்வது சிறந்தது என்பார் அர்னே.

காந்தியைப் போலவே அர்னேவைப் பாதித்தவர் ராக்சல் கார்சன். அவர் தமது ‘மௌன வசந்தம்‘ நூல் மூலமாகவும், நல்ல மலையேற்றப் பயிற்சியாளராகவும் சிறந்து விளங்கியவர். பெரிய அணைகளைக் கட்டுவதற்கு எதிராகப் போராட் டங்களை நடத்தியவர். இளம்வயதில் பேராசிரியராகவும் பணியாற்றியவர். 30–க்கும் மேற்பட்ட நூல்களை எழுதியவர்.



புரட்சி என்பது மனதின் ஆழத்தில் இருந்து தொடங்கப்பட வேண்டும். அது கொண்டு செல் லப்படும் நோக்கம், செயல்முறைகள் குறித்துத் தெளிவான சிந்தனை வேண்டும். புரட்சியோ போராட்டங்களோ மனிதர்களின் நுகர்வு வாழ்க் கைக்கு உகந்தவை அல்ல. இயற்கைக்காகவும் பிற உயிரினங்களின் வாழ்வுரிமைக்காகவும் அவை என்பதை வலியுறுத்தியவர்.

அவர், மக்கள் தொகையைக் கட்டுப்படுத் துவதில் அக்கறை கொண்டு கருத்துக்களை முன் வைக்கிறார். ஒரு நாளைக்கு 100 உயிரினங்கள் வீதம் ஒரு வருடத்திற்கு ஒன்றரை லட்சம் உயிரி னங்கள் மனிதர்களால் அழிகின்றன. இது இயற்கை ஏற்படுத்தும் உயிரின அழிவைவிடப் பத்தாயிரம் மடங்கு அதிகம்.

சூழல் சமன்பாட்டை உருவாக்க உலக மக்கள் தொகை 100 மில்லியன் அளவிற்கு இருக்க வேண்டும் என்றார். மனிதர்களுக்குப் பூமி மீது எவ்வளவு உரிமையோ, அதே அளவு உரிமை மற்ற உயிரினங்களுக்கும் உண்டு என்பதை நம்பியவர் அர்னே.

அவர் சொன்னதை நம்பாமல் நம் நுகர்வு வாழ்க்கை இயற்கையிலிருந்து விலகி வெகுதூரம் போய்க் கொண்டிருக்கிறது. வியாதிகளும், மருத்துவமனைகளும் நெருங்கி வந்துவிட்டன.

சூழலியல் கோட்பாட்டாளர் அர்னே நேஸ் 96 வயதில் 2009–இல் மரணமடைந்தார்.

# சித்திரையே வருக!

நா. சியாமளா

**சி**த்திரையே வருக!
தமிழ்ச் சித்திரந்தனை வரைக!
வித்தகர் நாவினில்
விளைந்த தமிழ்வித்தே வருக!
சித்தத்தில் இனித்திடும்
முக்கனிச் சுவையே வருக!
பங்குனிக்கு இளையவளே
பாங்கான தமிழ் மகளே!
எங்கும்நிறை தமிழுக்கு எல்லாமும் ஆனவளே!

உம் வரவால்
இன்பநதி ஓடட்டும்
இன்சொற்கள் மலரட்டும்
மன்பதை உயிர்கள்
யாவும் செழிக்கட்டும்
மண்மீது வன்முறை வீழட்டும்!

அவலங்கள் அழியட்டும்
அன்பொளி பரவட்டும்
தோஷங்கள் நீங்கட்டும்
தேசங்கள் இணையட்டும்
சேதங்கள் குறையட்டும்
பேதங்கள் விலகட்டும்
பாரென்னும் வயலில்
பூரிப்புப் பயிர்கள் விளையட்டும்!

எல்லோரும் இன்புற்றிருக்கட்டும்
எல்லையில் இனியேனும்
அமைதி நிலைக்கட்டும்!
சித்திரையே வருக!
சீர்மிகு வாழ்வைத் தருக!

# ஓம் சக்தி

ஆருயிர்களுக்கு எல்லாம் – நான்
அன்புசெயல் வேண்டும்.
– வள்ளலார்

மலர் : 37 ஏப்ரல் 2019 இதழ் : 3

நிறுவனர் : **நா. மகாலிங்கம்**

ஆசிரியர் & வெளியிடுபவர்: **ம. மாணிக்கம்**

*Editor & Publisher* : **M. MANICKAM**

அச்சிடுபவர் : **து. ராஜ்குமார்**

*Printer* : **T. RAJKUMAR,**

**Rukmani Offset Press**

ருக்மணி ஆப்செட் பிரஸ்,
E-32, சிட்கோ இண்டஸ்ட்ரியல் எஸ்டேட்,
கோவை – 641 021.

இணையாசிரியர் : **பெ. சிதம்பரநாதன்**





**தனிப் பிரதி ரூ.15/–**
**ஆண்டு சந்தா ரூ. 265/–**
**(தீபாவளி மலர் உட்பட)**
**ஆயுள் சந்தா ரூ. 2000/–**
(10 ஆண்டுகள்)

சந்தா தொகையை "SAKTHI SUGARS LTD. A/c OMSAKTHI" என்ற பெயரில் D.D.–யாகவோ அல்லது மணியார்டர் மூலமாகவோ அனுப்ப வேண்டிய முகவரி :

**ஆசிரியர், ஓம் சக்தி**
**69–ஏ, ஆரோக்கியசாமி சாலை (மேற்கு),**
**ஆர்.எஸ்.புரம், கோவை – 641 002**
**போன் : 0422–4322471, 0422–4322423**
வெளியிட்டோர் : **சக்தி சுகர்ஸ் லிமிடெட்.**

E-mail : omsakthieditorial@gmail.com


**சமையல்**

# சோயா குருமா

**தேவையானவை :** சோயாப் பயறு 150 கிராம், தேங்காய்த் துருவல் 1/2 டம்ளர், வெள்ளைப்பூண்டு – 1, இஞ்சி – சிறிய துண்டு, பெருஞ்சீரகம், பட்டை – சிறிய துண்டு, தக்காளி, பெரிய வெங்காயம் – 1, கேரட் 100 கிராம், மஞ்சள்தூள் – 2 சிட்டிகை, மிள காய்த் தூள் 1 தேக்கரண்டி, கறிவேப்பிலை, கொத்து மல்லிக் கீரை – சிறிது, எண்ணெய் – தேவைக்கேற்ப, தனியாத் தூள் – 1 தேக்கரண்டி, உப்பு – தேவைக்கேற்ப.

**செய்முறை :**

1. சோயாப் பயறை நான்கு மணி நேரம் ஊறவைத்து எடுத்து, குக்கரிலிட்டு நன்கு வேகவைத்து எடுத்துக் கொள்ளவும்.
2. தக்காளி, கேரட், வெங்காயம் இவற்றைப் பொடியாக நறுக்கி வைக்கவும்.
3. தேங்காய்த் துருவல், பூண்டு, இஞ்சி, பெருஞ் சீரகம், பட்டை இவற்றை விழுதாக அரைத்துக் கொள்ளவும்.
4. வாணலியில் போதுமான அளவு நீர்விட்டு நறுக்கிய கேரட், தக்காளி, வெங்காயம், சேர்த்து வேக வைக்கவும்.
5. கலவை பாதிப்பதம் வெந்ததும், வேக வைத்த சோயாப் பயறு, மசாலா விழுது, மஞ்சள்தூள், மிளகாய்த்தூள், தனியாத் தூள், உப்பு சேர்த்துத் தொடர்ந்து கொதிக்கவிடவும்.
6. குருமாக் கலவை 'கமகம' வாசனையுடன் சுண்டி வரும்போது, கறிவேப்பிலை, அரிந்த கொத்து மல்லிக் கீரை சேர்த்து, கடுகு தாளித்திட்டு இறக்கவும்.

'சோயா குருமா' தயார். சாதத்துடன் சேர்த்துச் சாப்பிட, சுவையாக இருக்கும். சப்பாத்தி, ஆப்பம் இவற்றுடன் சேர்த்தும் சாப்பிடலாம். புரதச்சத்து நிறைந்தது சோயாப் பயறு.

– **ராதிகா அழகப்பன்**, விக்கிரமசிங்கபுரம்

கட்டுரை

# கொடிய வரலாறுகள் தொடர வேண்டா

பழம்பெரும் பாரத நாட்டை வென்று, எதிர்த்த நம் முன்னோர்களைக் கொன்று நம்மை அடிமைப்படுத்திய அந்நியர்கள் பலர் உண்டு. நம் நாட்டுச் செல்வங்களைச் சூறையாடி, தொல்சமய மான இந்து சமயத்தை அழிக்கப் பல வழிகளில் முயன்றனர். இது கடந்தகால வரலாறு. ஆனால் நம் சுதந்திர இந்தியாவில் இன்னமும்கூட முன்னை நாள் போல் கோயில் தெய்வத் திருவுருவச் சிலைகளை உடைப்பதும் சிதைப்பதும் சகிக்க இயலாததொன்றாகும்.

அண்மையில் ஒரு கொடிய சம்பவம் நிகழ்ந்து இருக்கிறது. புராண, இதிகாச வரலாற்றுச் சிறப்பு மிக்க பட்சிதீர்த்தம் என்று பெயர்பெற்ற பழம் பெரும் தலமான திருக்கழுக்குன்றம் அருகே உள்ள கருங்குழியில் 1000 ஆண்டுகள் பழமை யான அருள்மிகு காலகண்டேசுவரர் திருக் கோயில் இருக்கிறது. ஆண்டுகள் பலவாகப் பழுது பட்டு இருந்த இந்தத் திருக்கோயிலின் திருப் பணியை 2007–இல் இவ்வூர் மக்கள் தொடங்கி னார்கள்.

திருப்பணிக் காலத்தில் மூலவரைச் சிறு கொட்டகை அமைத்துப் பாலாலயம் செய்து வழி பட்டு வந்தனர். தற்போது திருப்பணி முடிவுற்றுக் குடமுழுக்குக்குக் கோயிலும், மக்களும் தயார் நிலையில் இருந்த வேளையில் யாரோ சிவலிங்கத் தையும், நந்தியையும் உடைத்துச் சேதப்படுத்தி உள்ளனர். இதைக் கண்ட மக்கள் கண்ணீர் மல்கச் செய்வதறியாது அதிர்ச்சியில் உறைந்து போய் உள்ளனர்.

இது குறித்து நிழற்படத்துடன் செய்தியை 21.12.18 "தி இந்து" தமிழ் நாளிதழ் வெளியிட்டு உள்ளது. இதுபோன்ற சம்பவங்கள் நம் நாட்டின் வரலாற்று ஏடுகளில் ரத்தக்கறை படிந்து இருப் பதைக் காணலாம். மறையாத் தழும்புகளாக இருக் கும் அச்சம்பவங்கள் இன்றும் தொடர்வது அறத் தின் மீது தொடுக்கப்பட்ட அதர்மச்செயல். சகிப் புத்தன்மைக்கு விடப்பட்ட கொடிய சவால்.

நம் நாட்டில் உள்ள பன்னிரு ஜோதிர்லிங்கத் திருத்தலங்களில் முதன்மையானது மேலைக் கடற் கரையில் உள்ள சோமநாதபுரம்.

இக்கோயிலை முதன் முதலில் கி.பி 722–இல் சிந்து மாகாணத்தைச் சார்ந்த சுல்தான் சூனாமேட் சுபேதார் சூறையாடினான். கோயிலைச் சேதப் படுத்திக் கோயிலின் செல்வங்களை எடுத்துச் சென்றான்.

பின்னர் அப்போதைய துருக்கி நாட்டின் தலைநகரான "கஜினி"யை அப்டிஜின் (APTIGIN) என்ற அடிமை ஆண்டு வந்தான். இவனது மரணத்திற்குப் பிறகு இவனது மருமகன் சுபேக்டி ஜின் (SUBAKTIGIN) பட்டத்திற்கு வந்தான். இவன் கி.பி. 963–இல் மரணம் அடையவே கி.பி. 997–இல் இவனது மகன் முகமது தனது இருபத் தேழாவது வயதில் ஆட்சிக்கு வந்தான்.

இவன் கஜினிக்கு அருகில் இருந்த பல இடங்களைக் கைப்பற்றினான். போர்களில் இவனது துணிச்சலைக் கண்டு எல்லோரும் அச்சம் கொண்டனர். இவனது கவனம் பாரதம் மீது திரும்பியது. இதற்கு வரலாற்று ஆய்வாளர் கள் நான்கு காரணங்களைப் பட்டியல் இடு கிறார்கள்.

1) பாரதத்தில் செழித்து வளர்ந்து இருந்த இந்துசமய உருவ வழிப்பாட்டை அழிப்பது. 2) பாரத நாட்டின் அளவற்ற செல்வங்களைக் கொள்ளை அடிப்பது. 3) கொள்ளை அடிக்கும் செல்வங்களைக் கொண்டு தனது ராணுவப் பலத்தை உயர்த்துவது. தன் ஆட்சியை விரிவு படுத்துவது. 4) உலகின் மிகப்பெரிய வெற்றி வீர னாக இருப்பதை நிரூபணம் செய்வது.

முதலில் கி.பி. 1000–வது ஆண்டில் கைபரில் உள்ள சில கோட்டைகளைக் கைப்பற்றினான். தனது ஆளுநர்களை நியமித்தான். 1001–இல் சாஹியின் இந்து அரசன் ஜெயபாலைப் போரில் வென்று அவனிடமிருந்து 2,50,000 தினார்களை யும், 50 யானைகளையும் கைப்பற்றினான். இத னால் மனம் உடைந்த மன்னன் தீக்குளித்து இறந் தான். தன்னைக் கடுமையாக எதிர்த்து நின்ற "பேரா" நாட்டு மன்னன் பிஜய் ராய் என்ற அரசனை 1005–இல் போரில் தோற்கடித்தான்.

இந்த அரசனும் தற்கொலை செய்து கொண்டான். பின் கி.பி. 1006–இல் "முல்தான்" நாட்டு அரபு அரசனை 7 நாள் போர் நடத்தி வென்றான். மன்னன் ஜெய பாலின் பெயரன் ஆனந்த பாலை இஸ்லாம் மதத்தைத் தழுவச் செய்து அவனை ஆளுநராக நியமித்தான். சில தினங்களில் ஆனந்த பால் மீண்டும் தாய்மதம் திரும்பித் தன்னை ஒரு சுதந்திர மன்னனாக அறிவித்துக் கொண்டான். கஜினிமுகமது இவனைப் போரில் வென்று ஆட்சியைக் கைப்பற்றினான்.

ஆட்சியை இழந்த ஆனந்த பால் உஜ்ஜை யின், குவாலியர், காலின்ஞர், ஆஜ்மீர் முதலிய நாடுகளின் அரசர்களை ஒன்றிணைத்து முகமது உடன் போரிட ஆயத்தமானான். அப்போது நாட் டின் பல பாகங்களில் இருந்து இந்துசமயப் பெண் கள் தங்களது விலை உயர்ந்த ஆபரணங்களை விற்றுப் போர் நிதி வழங்கினர்.

போர்க்களத்தில் ஆனந்த பால் அமர்ந்து இருந்த பட்டத்து யானைக்கு அருகே தீப்பந்தங் களைத் திடீர் என்று எதிரிகள் காட்டவே யானை மிரண்டு பின் வாங்கியது. இத்தருணத்தைச் சரி யாகப் பயன்படுத்திக் கொண்டு, "ராஜா" போர்க் களத்தில் இருந்து ஓடிவிட்டார் என்ற பொய்

## டி.எஸ். தியாகராசன்



வதந்தியை வேகமாகப் பரப்பச் செய்தான் முகமது.

மன்னரின் படை யினர் கலக்கமுற்றுச் செய்வதறியாது நிலை குலைந்தனர். இந்தக் குழப்பம் இரண்டு தினங்கள் வரை நீடித்தது. இதனைப் பயன்படுத்திப் போர்க் களத்தைத் தன்வசம் கொண்டு வந்தான் முகமது. இந்தத் தந்திரத்தால் வெற்றியும் பெற்றான். போரின் போக்கு வெற்றித் திசைக்குத் திரும்பியது கண்டு அவனது வீரர்களின் மனதில் நீங்காஇடம் பெற்றான். கி.பி. 1009–இல் பஞ்சாப் மலைகள், நாகர்கோட் முதலிய இடங்களைக் கைப்பற்றி னான். கங்காரா அரசனை வென்று அளவற்ற செல்வங்களோடு கஜினி திரும்பினான். முகமது வின் பாரதப் படையெடுப்புகளைப் பின்வருமாறு ஆய்வாளர்கள் வரிசைப்படுத்துகின்றனர்.

கி.பி. 1000–இல் இன்றைய ஆப்கானிஸ்தான், பாகிஸ்தான். கி.பி. 1005–இல் பாட்டியா, 1006–இல் மூல்தான், 1007–இல் பாட்டியதண்டா, 1012–இல் பஞ்சாப், நாகர்கோட. 1013–இல் பெஷவார், 1014 –இல் தாணேஸ்வர், 1015–இல் காஷ்மீர், 1018–இல் மதுரா, 1021–இல் கனோஜ், அதே ஆண்டில் லாகூர், ரகிப், 1023–இல் குவாலியர், 1025–இல் சோமநாதபுரம், ஓரிரு இடங்களில் மீண்டும், மீண்டும் இவனது 17 படையெடுப்புகளில் சுமார் 50 ஆயிரம் மக்களையும், வீரர்களையும்,

சோமநாதர் ஆலயம்

மன்னர்களையும் கொன்று குவித்தான். இஸ்லாம் மதத்தைத் தழுவியவர்களை உயிரோடு விட்டான்.

இவன் மழைக் காலங்களில் இந்தியாவில் படையெடுக்காது, கோடைக் காலங்களை மட்டும் தேர்வு செய்தான். பஞ்சாபில் பல ஆறுகளை வெள்ளக் காலங்களில் சுலபமாகத் தாண்ட இயலாது என்பது அவனது கணிப்பு. வடஇந்திய அரசர்களின் ஒற்றுமையின்மை இவனுக்குப் பலமாக அமைந்தது. வலிமையான குதிரைகள் மின்னல் வேகமாகச் செல்லும் வல்லமை, இவனது படையின் முக்கிய அம்சமாகும். போரில் சமயத்துக்கு ஏற்பப் பல தந்திரங்களைக் கையாண்டான்.

இந்தியப் படைகளில் யானைகள் அதிக அளவில் இடம்பெற்றிருந்தன. துருக்கிநாட்டுப் போர் வீரர்களின் உணவுப் பழக்கம் எதனையும் ஏற்கும் முறையில் இருந்தது. இதனால், பல வழிகளில் பாரதப் போர்களில் வெற்றி பெற்றுச் செல்வச் செழிப்புமிக்கதொரு நாட்டின் அதிபதி ஆனான். அவனது மதுரா படையெடுப்புக்கு முன்னர் மதுராவில் 1000 கோயில்கட்கு மேல் இருந்தன. ஓர் அழகிய புனித நகராகக் காட்சி அளித்தது. இதனைக் கண்ணுற்ற கஜனிமுகமது எழுதுகிறான் : "1000 தினார்கள் அடங்கிய ஒரு லட்சம் பணப்பைகள் கொண்டு, இந்திய நாட்டுக் கட்டட வல்லுநர்களின் துணையோடு 200 ஆண்டுகள் ஆனாலும் யார் ஒருவராலும் கட்ட முடியாது." இப்படிப்பட்ட அழகிய நகரைச் சின்னாப் பின்னமாக்கிக் கோயில்களை இடித்துத் தீக்கிரையாக்கித் தெய்வத் திருமேனிகளை உடைத்து நொறுக்கினான்.

இதன் பிறகு இஸ்லாம் சமய உலகம் இவனை முஸ்லிம் சமயக் கதாநாயகனாகச் சித்தரித்து சுமார் 200 ஆண்டுக் காலம் இவனது புகழைப் பேசியது. இறுதியாக இவன் சோமநாதபுரம் கோயிலின் அருமை, பெருமைகளையும், செல்வச் செழிப்புகளைக் கேள்வியுற்றான். இதனால் சோமநாதபுரம் நோக்கித் தன் படையை நகர்த்தினான். சோமநாதர் கோயிலுக்கு வருவாய் தரவல்ல பத்தாயிரம் கிராமங்கள் அதன்வசம் இருந்தன. இதனால் கோயில் முழுவதும் விலை உயர்ந்த ஆபரணங்கள், பொன், வெள்ளி, நவரத்தினக் கற்கள் எனக் குவிந்து இருந்தன.

மிக எளிதாகக் கோயிலைக் கைப்பற்றி 20 மில்லியன் தினார் மதிப்புக்குப் பொருட்களைக் கொள்ளையடித்தான். ஒட்டகம், குதிரை, மற்றும் யானைகளில் எடுத்துச் சென்றான். திறமை வாய்ந்த கைவினைஞர்களையும் ஆயிரக் கணக்கில் அடிமைகளாகத் தன்னோடு கொண்டு சென்றான். அப்போது சிவலிங்கத்தை அவன் உடைக்க முற்பட்டபோது பொதுமக்கள் தடுத்தனர். சற்று ஏறக்குறைய 5000 பேர்களைக் கொன்று, சிவலிங்கத்தை அனேக பாகங்களாக உடைத்து எடுத்துக்கொண்டு போய், தான் கஜினியில் கட்டிய மசூதியின் வாயில் முன்பாகப் படிக்கற்களாக அமைத்தான்.

இவனது இந்தக் கொடூரச் செயல் பற்றி இந்தியாவில் எழுத்து வடிவில் காட்ட நூலாசிரியர்களோ, வரலாற்று ஆய்வாளர்களோ இல்லை போலும். இதனால் பெர்ஷிய இலக்கியங்கள் மற்றும் பெர்ஷியக் கவிஞரும், வரலாற்று ஆசிரியருமான ஹாசன் நிஷாமி "தாஜ்–உல்–மா' சர் என்ற நூலில் விரிவாகக் குறித்து உள்ளதைத்தான் பின்னர் வந்த வரலாற்று ஆசிரியர்கள் மேற்கோள் காட்டுகிறார்கள். குஜராத் முஸ்லீம்கள் ஹஜ் யாத்திரைக்குப் புறப்படும் முன் சோமநாதபுரம் கோயிலில் வழிபாடு நிகழ்த்திவிட்டுப் போவதை அமீர் குஸ்சுரு என்ற அறிஞர், தான் எழுதிய Khazain ul-Futuh என்ற நூலில் எழுதியுள்ளார். ஜிலாவுடின் பரணியின் Tarkh-kalpa என்ற நூலும் இதனைக் குறிப்பிட்டு உள்ளது.

நவீன இந்தியாவின் வரலாற்று ஆய்வாளர் டாக்டர் மீனாட்சி ஜெயின், “பெர்ஷிய இலக்கியங்கள் கஜனி முகமதுவின் படையெடுப்பு இந்தியாவில் மின்சாரம் பாய்ந்தது போன்றதொரு உணர்ச்சியை ஏற்படுத்துகின்ற வகையில் குறிப்பிடுகின்றன” என்கிறார். பிறகு குமார பாலா என்ற அரசன் கி.பி. 1143–72 இல் விலையுயர்ந்த கற்களால், நவரத்தினங்களால் கோயிலைப் புதுப்பித்துக் கட்டுவித்தான். இதனை 1169 ஆம் ஆண்டுக் கல்வெட்டுச் செய்தி உறுதிப்படுத்தியுள்ளது.

1299–இல் அலாவுதீன் கில்ஜியின் ராணுவத் தளபதி உல்லாகான் வகலோ அரசன் கர்ணாவைத் தோற்கடித்து சோமநாதபுரம் கோயிலைக் கொள்ளையடித்தான். எதிர்த்த பலரையும் வெட்டிக் கொன்றான். 15–ஆம் நூற்றாண்டின் நூலான "கண்கடே–பிரபந்தகாவும்", 17–ஆம் நூற்றாண்டு, "கயட்" என்ற நூலும் இதனை விவரிக்கிறது. பின்னர் ஜலோர் அரசன் கண்க தேவ் டெல்லிக்குக் கொண்டுபோன விக்கிரகங்கள் மற்றும் இந்துக் கைதிகள் பலரையும் விடுவித்தும் வந்தான். பின்னர் சௌராஷ்ட்ரா–சூடசாமா அரசன் மகி பாலா 1308–இல் கோயிலை மீண்டும் கட்டினான். கெங்காராவின் மகன் 1331–இல் சிவலிங்கத்தைப் பிரதிஷ்டை செய்தான்.

1395–இல் மூன்றாம் தடவையாக டெல்லி சுல்தானின் குஜராத் ஆளுநராக இருந்த ஜாபர் கான் கோயிலை இடித்தான். 1546–இல்

கோவாவில் இருந்த போர்த்துக் கீசியப் படைகளால் சோமநாத புரம் கோயிலும், அருகில் இருந்த மசூதிகளும் இடிக்கப் பட்டன. 1665–இல் முகலாய மன்னன் கொடுங்கோலன் அவுரங்கசீப் கோயிலை இடித் தான். இதன் பிறகும் இந்துக்கள் வழிபாடு செய்யத் தொடங்கிய தால் 1702–இல் கோயிலை முற்றிலுமாக இடித்துத் தள்ளி னான்.







மேலும் அவனது ஆட்சி எல்லைக்குள் இருந்த எல்லா இந்துக் கோயில்களையும் இடித்து விட உத்தரவு பிறப்பித்தான். 1782–83–இல் மராட்டிய மன்னன் மகாடே ஜி ஷிண்டே லாகூரில் இருந்த முகமது–ஷா–க–பேட்டி என்பவனைப் போரில் வென்று சோமநாதபுரத்துக் கோயிலின் மூன்று வெள்ளிக் கதவுகளைக் கொண்டு வந்தான். ஆனால் குஜராத் மன்னன் கெயிக் வாட் மற்றும் கோயில் அர்ச்சகர்கள் அந்தக் கதவுகளை ஏற்க மறுத்தனர். இதனால் இக்கதவுகளில் ஒன்று மகாபலேசுவரர், ஜோதிர்லிங்கத் திருக்கோயி லிலும், மற்றொன்று உஜ்ஜையின் கோபால் மந்தர் கோயிலிலும் இருப்பதை இன்றும் காணலாம்.

பிறகு இந்தியா விடுதலை அடையும் நேரத் தில் ஜுனாகத் சமஸ்தானம் பாகிஸ்தானோடு சேர விரும்பியது. அங்குள்ள மக்கள் இந்தியாவோடு இணைய விரும்பினர். இதனால் சர்தார் வல்லப பாய் பட்டேல் ராணுவ நடவடிக்கை மூலம் இந்தியா வோடு இணைத்தார். பின்னர் சர்தார் பட்டேலும் அப்போதைய மத்திய அமைச்சர் கே.எம். முன்ஷி யும் சோமநாதபுரம் கோயிலைப் பொதுமக்களின் வேண்டுக்கோளுக்கிணங்கப் புதிதாகக் கட்ட முடிவு செய்தனர். இதற்காக அண்ணல் காந்தியடி களின் கருத்தைக் கேட்டறிந்தனர். காந்தி மிகவும் மகிழ்ச்சியுடன் இசைவு நல்கினார்.

அப்போது அவர், அரசு நிதியில் இருந்து கட்ட வேண்டும் என்றார். புதிய கோயில் கட்டி முடிப் பதற்குள் காந்தியடிகளும் பட்டேலும் காலமானார் கள். இதனால் பண்டித நேருவை அழைத்தார்கள். நேரு வர இசையவில்லை. இதனால் முதல் குடியரசுத் தலைவர் பாபு ராஜேந்திர பிரசாத்தை அழைத்துக் கோயிலைத் திறக்க வேண்டினார்கள். அவரும் மகிழ்ச்சியுடன் இசைந்தார்.

கோயிலைத் திறந்து வைத்துப் பேசும்போது "இந்தியா என்ற மாளிகையின் வெற்றிப் பொலிவு மிக்க வளமையின் சின்னம், இந்தக் கோயில். புராதனமான சோமநாதபுரம் கோயில் மீண்டும் கட்டப்பட்டிருப்பது அழிவின் சக்தியைவிட, ஆக்கசக்தி எப்போதும் மேலானது என்பதைக் காட்டுகிறது" என்றார்.

சோமநாதபுரம் கோயிலைப் புதுப்பித்துக் கட்டியதுபோல் காஷ்மீரத்தில் இருக்கும் மார்த் தாண்ட சூரியன் கோயிலைச் சில தலைவர்கள் கட்ட விரும்பிய போதும், பல அரசியல் காரணங் களால் புதுப்பிக்க இயலாமல் இன்றுவரை சிதில மடைந்த கோயிலாக இந்திய தொல்லியல் துறை வசம் உள்ளது. இக்கோயில் கார்கோடப் பேரரசின் மூன்றாம் மன்னர் வலிதாத்தியனால் கி.பி. 8–ஆம் நூற்றாணடில் கட்டியதாகச் சொல்லப்பட்டாலும், கோயிலின் அடித்தளம் கி.பி.370–500 இல் அமைக்கப்பட்டிருக்க வேண்டும் என்று ஆய்வாளர் கள் கருதுகிறார்கள்.

220 அடி நீளம். 142 அடி அகலம் கொண்ட இக்கோயில் வளாகத்தில் 84 சிறிய சந்நிதிகள் உள்ளன. வேதகாலத் தெய்வங்களான சூரியன், விஷ்ணு, கங்கை, யமுனையின் அழகிய சிற்பங்கள் உள்ளன. இந்த அழகிய உயரமான கோயிலை கி.பி. 15–ஆம் நூற்றாண்டின் தொடக் கத்தில் சிக்கந்தர் பட்சிகான் என்ற இஸ்லாம் படையெடுப்பாளன் இடித்துச் சிதைத்தான்.

பொதுவாக இந்து சமயத்தில்தான் இறை வனை உருவம் கொண்டவனாகவும் அருவ நிலை யிலும் வழிபட இயலும். இறைவனை ஏகனாகவும், அனேகனாகவும் வணங்குதல் சிறப்பு. கடவுள் இருக்கிறார் என்பவர்கட்கும், இல்லை என்பவர் கட்கும் அருள்புரியவல்ல மகாதேவன் இந்து சமயத்தில் மட்டுமே உண்டு.

இந்த விரிந்த பொருள் அமைந்த தர்ம சமயமாக இருப்பதால்தான் அன்பு வழியில் சகிப்புத் தன்மையும், அறவழியில் அமைதியும் காக்கப்படுகிறது. எனவே, இந்த அமைதியைக் கெடுக்க அரசு அனுமதிக்கக் கூடாது. பழங்கால வரலாறுகள் கனவாகவே கலைய வேண்டும். நனவில் நலமே விளைய அனைவரும் உறுதி கொள்ளுவோம்.

●

# இம்மாதராசி பலன்

**"என்ன நடக்கலாம் என்பதை அனுமானிப்பவன் சோதிடன்**
**என்ன நடக்கும் என்பதைத் தீர்மானிப்பவன் இறைவன்!"**

**1.4.2019 அன்று கோள்கள் நிலை**

| | | | |
|---|---|---|---|
| சூரியன் | | செவ்வாய் | ராகு |
| புதன் சுக்கிரன் | 11.4.2019 புதன்–மீனம்<br>14.4.2019 சூரியன்–மேஷம்<br>15.4.2019 சுக்கிரன்–மீனம்<br>22.4.2019 குரு–விருச்சிகம் | | |
| | | | |
| கேது சனி குரு | | | சந்திரன் |

'ஜோதிடத் திலகம்'
**க. தில்லையம்பலம்**

## மேஷம்



**மே**ஷ ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் முற்பாதியில் வீண் செலவு, அலைச்சல், சுப காரிய ஈடுபாடு, அரசாங்கப்பீடை முதலிய பலன்களை ஏற்படுத்தக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் உஷ்ணம் தொடர்பான பிணி, பீடைகளையும், குழந்தைகளைப் பற்றிய கவலைகளையும் ஏற்படுத்தக்கூடும். குரு 22 –ஆம் தேதி வரை சாதகமாக 9–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், குழந்தைகள் வழியில் சிலர் சாதகமான பலன்களை அடைவர். வாக்கு ஸ்தானத்தில் செவ்வாய் சஞ்சரிப்பதால், கடின வார்த்தை பேசுவீர்கள். தண்டச் செலவும் ஏற்படக்கூடும். வாழ்க்கைத் துணைவர் உங்களோடு யுத்தம் புரியக்கூடும்.

ராகு 3–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பயணங்களுக்கு ஏற்ற காலமாகும். சிலர் வெளிநாடு செல்லும் யோகத்தையும் விரைவில் அடையக் கூடும். 9–இல் சனி – கேது சஞ்சரிப்பதால், ஆன்மிகப் பற்றுதல் அதிகரிக்கும். புண்ணியத் தலங்களுக்குச் சுற்றுலாச் சென்று வரலாம். புதன் 11–ஆம் தேதி முதல் 12–ஆம் வீட்டில் நீசம் பெறுவதால், உறவினர்கள் பாதிப்படையலாம். உங்களிடம் பணி செய்பவர்கள் உங்களை ஏமாற்றலாம். தொழில் சம்பந்தமாகச் சிலர் அடிக்கடி குடும்பத்தைப் பிரிய நேரலாம். புது முயற்சிகள் வேண்டாம்.

## ரிஷபம்



**ரி**ஷப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் சகல காரிய அனுகூலத்தை ஏற்படுத்தக் கூடும். பிறர் உதவிகள் கிடைக்கலாம். மாதத்தின் பிற்பாதியில் வீண் செலவு, மனஸ்தாபங்கள், பயணங்கள் மூலம் விரயம் ஏற்படக்கூடும். குரு 22–ஆம் தேதி வரை அனுகூலமற்றுக் காணப்படுவதால், உங்கள் சுபகாரிய முயற்சிகளில் தடை ஏற்படலாம். ஒரு சிலர் தொழில், உத்தியோகத் துறைகளில் திடீர்ப் பிரச்சனைகளை அடைவர். செவ்வாய் ராசி மீது சஞ்சரிப்பதால், வீண் கோபதாபங்களுக்குப் பஞ்சமிராது. குடும்பத்தில் சச்சரவும் சிலருக்கு ஏற்படும்.

வாக்குஸ்தானத்தில் ராகு சஞ்சரிப்பதால், பண வரவு உண்டாகும். செலவினமும், அதற்கு இணையாக ஏற்படும். சுபகிரக திசாபுத்தி நடைபெறுபவர்களுக்கு உயில் சாசனம், காப்பீட்டுத் திட்டங்கள் மூலம் பண வருவாய் ஏற்படுவதற்கு வாய்ப்புண்டு. சனி – கேது – குரு சேர்க்கை இந்தப் பலனை உங்களுக்கு ஏற்படுத்தலாம். 11–ஆம் தேதி முதல் புதன் நீசம் பெறுவதால், உறவினர்களால் நன்மை, தீமை இரண்டும் ஏற்படும். 15–ஆம் தேதி முதல் சுக்கிரன் லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் பெண்களால் லாபம்

ஏற்படும். சுப காரியங்களில் இறங்கினால் வெற்றி யுண்டு.




**மி**துன ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் 10, 11–ஆமிடங்களில் சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் நன்மையுண்டு. பொருள் லாபம், தன லாபம் ஏற்படும். நெடுநாள் எண்ணம் ஈடேறும். விவகார ஜெயம் உண்டாகும். செவ்வாய் 12–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், ஞாபக மறதி ஏற்படும். காரியங்களில் கவனம் வேண்டும். ராசி மீது ராகு சஞ்சரிப்பதாலும், ராசி அதிபதி நீசம் பெறுவதாலும் சிலருக்கு உடல் உபத்திரவங்கள் ஏற்படலாம். குரு 22–ஆம் தேதி வரை 7–இல் சஞ்சரிப்பதால், திடீரெனச் சுப காரியங்கள் சிலருக்கு ஏற்படக்கூடும். சூழ்நிலை மாற்றம் சிலருக்கு ஏற்படும்.

சனி – கேது 7–இல் சஞ்சரிப்பதால் கூட்டுத் தொழில்கள், கூட்டாளிகள் விஷயங்களில் போதிய கவனம் செலுத்தி வர வேண்டும். புதிய கூட்டுத் தொழில்களில் இறங்க வேண்டாம். 22–ஆம் தேதிக்குப் பின்னர் கடன் தேவைப்படுபவர்கள் அதற்கான முயற்சிகளில் இறங்கலாம். 15–ஆம் தேதி முதல் சுக்கிரன் 10–ஆம் வீட்டில் உச்சம் பெறுவதால் வேலை செய்யும் இடங்களில் பெண்களால் எதிர்ப்போ, தடைகளோ, பிரச்சனைகளோ ஏற்படக்கூடும். குழந்தைகள் வழியில் அதிகப்படியான அக்கறை தேவைப்படும்.




**க**டக ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதம் முற்பாதியில் காரியத் தடைகளை ஏற்படுத்தக்கூடும். தீவிர முயற்சிகளின்பேரில் காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம். மாதத்தின் பிற்பாதியில் தொழில், உத்தியோகத் துறைகளில் ஏற்றம் உண்டாகும். நீண்ட நாட்களாக எண்ணி வந்த காரியம் ஒன்று நிறைவேறும். செவ்வாய் லாபஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் அரசாங்கம், அதிகாரிகள் மூலம் நன்மை ஏற்படலாம். ஒரு சிலருக்குப் பதவி உயர்வு முதலியன ஏற்படும். புத்திர வர்க்கத்தார் சகோதர வர்க்கத்தார் மூலம் நன்மை ஏற்படலாம்.

22–ஆம் தேதி முதல் செல்வம், செல்வாக்குக் கூடும் வாய்ப்புண்டு. 6–இல் சனி, கேது சஞ்சரிப்பதால், உங்களின் வசதி, வாய்ப்புகளை அதிகரித்துக் கொள்ளலாம். 11–ஆம் தேதி முதல் 9–இல் புதன் சஞ்சரிப்பதால் குறுகிய காலப் பயணங்கள், உறவினர் வகைச் சந்திப்பு நன்மை பயக்கும். 15–ஆம் தேதி முதல் சுக்கிரன் 9–இல் உச்சம் பெற்றுச் சஞ்சரிப்பதால், நூதனப் பொருள்கள் வாங்கும் யோகமுண்டு. 22–ஆம் தேதி முதல் சுப காரிய முயற்சிகளில் இறங்க நன்மை ஏற்படும். புதிய முயற்சிகளை மாதத்தின் பிற்பாதியில் தொடங்க நன்மை ஏற்படும்.




**சி**ம்ம ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் எதிர்பாராத செலவுகளையும், தேக நலிவுகளையும் ஏற்படுத்தக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் 9–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால், காரியத் தடைகள் ஏற்பட்டாலும் காரியங்களை நிறைவேற்றிக் கொள்ளலாம். உங்களின் இடைவிடாத முயற்சி தேவை. சனி – கேது 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் குழந்தைகளைப் பற்றிய சிந்தனை, குழப்பம், கவலை அதிகப்படும். செவ்வாய் 10–இல் சஞ்சரிப்பதால் தொழில் தலத்தில் ஏதேனும் கோபதாபமான சூழ்நிலையைச் சந்திக்க நேரலாம்.

குரு 22–ஆம் தேதி வரை சில நன்மைகளைத் தற்காலிகமாக ஏற்படுத்தக்கூடும். 22–ஆம் தேதிக்குப் பிறகு நன்மைகளை அதிகம் எதிர்பார்க்க இயலாது. ஏதேனும் சுப காரியங்கள் 22–ஆம் தேதிக்குள் சிலருக்கு எதிர்பாராமல் நிறைவேறும் வாய்ப்புண்டு. ராகு 11–இல் சஞ்சரிப்பதால், மாற்று மதக் காரர்கள் தக்க சமயத்தில் உதவக்கூடும். ஒரு சில நூதன மனிதர்கள் நண்பர்களாகவும் கூடும். சுக்கிரன் 8–இல் 15–ஆம் தேதி முதல் சஞ்சரிப்பதால், வாகனப்பீடை ஏற்படும். உங்களின் ஆடம்பரப் பொருள்களைப் பத்திரப்படுத்திக் கொள்ள வேண்டும். புதிய முயற்சிகளுக்கு ஏற்ற மாதமல்ல.

**க**ன்னி ராசி அன்பர்களுக்கு, இம்மாதம் சூரியன் 7, 8–ஆம் இடங்களில் சஞ்சரிப்பதாலும், மற்றைய கிரகங்கள் அனைத்தும் பாதகமான நிலையில் சஞ்சரிப்பதாலும் மிகவும் விரும்பத்தகாத பலன்களையே இம்மாதம் அடைய இயலும். மாதத்தின் முற்பாதியில் 7–ஆமிடத்தில் சூரியன் சஞ்சரிப்பதால், வாழ்க்கைத் துணைவர் வழியில் செலவினம் வரக்கூடும். குடும்பப் பிரச்சனைகள்

## கன்னி



கவலையை ஏற்படுத்தலாம். மாதத்தின் பிற்பாதியில் 8–இல் சூரியன் சஞ்சரிப்பதால், எதிர் பாராத சம்பவங்கள், செலவுகள் ஏற்படும் வாய்ப்புண்டு. தேக நலனும் சிலருக்குப் பாதிப்பை ஏற்படுத்தக்கூடும்.

குரு 22–ஆம் தேதி வரை 4–இல் சஞ்சரிப்பதால், குடும்பத்தில் வயதான வர்களுக்கு அசௌகர்யத்தை உண்டாக்க வாய்ப் புண்டு. செவ்வாய் 9–இல் சஞ்சரிப்பதால் இறை வழிபாடு நல்லது. வீண் பயம் விலகிப் போகும். புதன் 11–ஆம் தேதி முதல் 7–இல் நீசம் அடைவ தால் உடலாலும், மனதளவிலும் பலவீனப்படு வீர்கள். சுக்கிரன் 15–ஆம் தேதி முதல் 7–இல் உச்சம் பெற்றுச் சஞ்சரிப்பதால் சில எதிர்ப்புகள் பெண்களால் ஏற்படக்கூடும். திருமணம் முதலிய சுப காரியங்கள் கைகூடுவது கடினம். ராகு 10–இல் சஞ்சரிக்கத் தொடங்கியிருப்பதால், தொழில், உத்தியோகத் துறைகளில் மாற்றங்கள் நிகழ வாய்ப்புண்டு.

## துலாம்



**து**லாம் ராசி அன்பர் களுக்கு, சூரியன் இம்மாதத் தின் முற்பாதியில் 6–ஆம் வீட் டில் சஞ்சரிப்பதால் தொழில், உத்தியோகத் துறைகளில் சாத கமான பலன்களை எதிர்பார்க்க லாம். மாதத்தின் பிற்பாதியில் 7–இல் சூரியன் சஞ்சரிப்பதால், நண்பர்கள், ரத்த சம்பந்தம் உடைய உறவினர்கள் சந்திப்புகள் ஏற்படலாம். செவ்வாய் 8–இல் சஞ்சரிப்பதால் உங்களது பொறுமையைச் சிலர் சோதிப்பர். கோபத்தைக் கட்டுப்படுத்திக் கொள்வது நல்லது. குரு 22–ஆம் தேதி வரை நற்பலன்களைக் கொடுக்காது. 22–ஆம் தேதி முதல் பண வருவாயை ஏற்படுத் தும். சுப காரியங்களில் ஈடுபாடு கொள்ளலாம். 3–இல் சனி – கேது சஞ்சரிப்பதால் வசதிகளை அதிகப்படுத்திக் கொள்ளலாம்.

11–ஆம் தேதி வரை புதன் ஏதேனும் குழப் பத்தைக் கொடுக்கலாம். முடிவெடுப்பதில் சிரமம் உண்டாகும். சுக்கிரன் 15–ஆம் தேதி வரை அதிர்ஷ்ட வாய்ப்புகளை ஏற்படுத்தும். பின்னர் மாதக் கடைசி வரை எதிர்ப்பு, விவகாரம், உணர்ச்சி வசப்படுவதால் துன்பம், மற்றவர் களுக்கு எதிரியைப் போல் காட்சி அளிப்பது முதலிய பலன்களை ஏற்படுத்தும். செவ்வாய் 8–இல் சஞ்சரிப்பதால் குடும்பத்தில் சர்ச்சை களுக்கு இடம் கொடுக்க வேண்டாம். புது முயற்சி கள் இம்மாதம் வேண்டாம்.

## விருச்சிகம்



**வி**ருச்சிக ராசி அன்பர் களுக்கு, சூரியன் இம்மாதத் தின் முற்பாதியில் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் உங்கள் முயற்சிகள் எதுவாயினும் தடைகள் ஏற்படலாம். மேலும் தேவையற்ற மனக் குழப்பங் களும் வந்தகலும். மாதத்தின் பிற்பாதியில் 6–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால் தொழில் துறையில் நன்மை ஏற்படும். எதிர்ப்புகளை வெற்றி கொள்ள லாம். செவ்வாய் 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் கணவன், மனைவியிடையே தர்க்கங்கள், சண்டை சச்சரவுகள் ஏற்படலாம். சனி வாக்கு ஸ்தானத்தில் சஞ்சரிப்பதால் பண வருவாய் இருந்து வரும். செலவும் இணையாக இருக்கும்.

இரண்டில் குரு 22–ஆம் தேதி வரை சஞ் சரிப்பதால் தொழில் துறையில் தன லாபம் இருக்கும். 22–ஆம் தேதிக்குப் பின்னர் மீண்டும் ராசி மீது குரு சஞ்சரிப்பதால் மன இறுக்கத்திற்கு ஆளாவீர்கள். கேது 2–இல் சஞ்சரிப்பதால் சிக் கனம் அவசியம். 8–இல் ராகு சஞ்சரிப்பதால் அடுத்த ஒன்றரை ஆண்டுக்காலம் நூதன இடங் களில் தொழில் செய்யவோ, குடியிருக்கவோ சந் தர்ப்பங்கள் ஏற்படும். 5–இல் 15–ஆம் தேதி முதல் சுக்கிரன் சஞ்சரிப்பதால், சில அதிர்ஷ்ட வாய்ப்பு கள் கைகூடி வரும். புது முயற்சிகளை மாதத்தின் பிற்பாதியில் தொடங்க வெற்றி ஏற்படும்.

## தனுசு



**த**னுசு ராசி அன்பர் களுக்கு, சூரியன் இம்மாதத் தின் முற்பாதியில் 4–ஆம் வீட் டில் சஞ்சரிப்பதால் அலைச்சல் அதிகப்படும். தேக நலிவுகள் அவ்வப்போது ஏற்பட்டு நிவர்த்தியாகும். மாதத்தின் பிற்பாதியில் 5–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிப்பதால் மனக்குழப்பம் ஏற்படும். குழந்தைகளைப் பற்றிய சிந்தனையும் செலவினங் களும் ஏற்படும். செவ்வாய் 6–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வழக்கு விவகாரங்கள் தொடங்க வெற்றி ஏற்படும். அதேசமயம் ஒரு சிலருக்குத் தங்களது புதல்வர்களே எதிரியாகக்கூடும். ராகு 7–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் மாற்று மதக்காரர் களிடம் நட்புக் கொள்வதில் எச்சரிக்கை தேவை.

ராசி மீது சனி – கேது சஞ்சரிப்பதால் விரக்தி மனப்பான்மை ஏற்படும். உடல் சோர்வும் மனச் சோர்வும் ஏற்படும். எக்காரியமும் தாமதமாகவே நிறைவேறும். புதன் 11–ஆம் தேதி முதல் நீசம்

பெற்று 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் வாழ்க்கைத் துணைவர் மூலமோ, தொழில் வகையிலோ அதிருப்தி ஏற்படலாம். 15–ஆம் தேதி முதல் சுக்கிரன் 4–ஆம் வீட்டில் உச்சம் பெற்றுச் சஞ்சரிப் பதால் குடும்பத்தில் சிக்கல், கலகம் ஏற்பட வாய்ப் புண்டு. திருமணம் முதலிய சுப காரியங்களுக்குத் தற்சமயம் அனுகூலமற்ற காலமாகும்.

## மகரம்



**ம**கர ராசி அன்பர் களுக்கு, சூரியன் இம்மாதத் தின் முற்பாதியில் தொழில் வகை அனுகூலமும், தனம், பொருள் லாபமும், முயற்சிகள் யாவும் தடையின்றி ஈடேறு வதும் ஏற்படும் பலன்களாகும். மாதத்தின் பிற்பாதியில் உடல் நலிவு, அலைச்சல், உஷ்ண பீடிதம், சிரசு வலி முதலிய பலன்களை ஏற்படுத்தக்கூடும். 14–ஆம் தேதி வரை சுக்கிரன் சாதுர்யமான பேச் சாற்றலைக் கொடுக்கும். புதன் 11–ஆம் தேதி முதல் 3–ஆம் வீட்டில் நீசம் பெறுவதால் ஏற்கனவே செய்த தவறு ஒன்றை நினைத்து வருத்தப்படு வீர்கள். செவ்வாய் 5–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் அடிக்கடி முடிவுகளை மாற்றிக்கொள்ள நேரிடும்.

சனி 12–இல் சஞ்சரிப்பதால் முதலீடுகள் செய்யலாம். 12–இல் கேது சஞ்சரிப்பதால் கெட்ட கனவுகள் தோன்றும். ஒரு சிலர் ஆசிரமங் களுக்குச் சென்று வரக்கூடும். பாதகமான திசாபுத்தி நடைபெற்றால் வீட்டைவிட்டுச் சிலர் ஆசிரமங்களுக்குச் சென்று நிரந்தரமாகத் தங்கு வர். குரு 22–ஆம் தேதி வரை தர்மார்த்த காரியங்களில் உங்களை ஈடுபாடு கொள்ளச் செய்யும். பின்னர் 11–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் நண்பர்களைப் பெரிதும் நம்ப வேண்டாம். 6–இல் ராகு சஞ்சரிப்பதால் பிறரது சொத்து, சுகங்களை நிர்வகிக்கும் சூழ்நிலை ஏற்படலாம்.

## கும்பம்



**கு**ம்ப ராசி அன்பர்களுக்கு, சூரியன் இம்மாதத்தின் முற்பாதியில் பணத்தேவையை அதிகரிக்கக்கூடும். மாதத்தின் பிற்பாதியில் 3–ஆம் வீட்டில் சூரியன் சஞ்சரிக்க இருப்பதால் தொழில் துறை நன்மையும், பொருளாதார முன் னேற்றமும், புதிய முயற்சிகளில் வெற்றியும் உண்டாகும். செவ்வாய் 4–ஆம் வீட்டில் சஞ் சரிப்பதால் உங்களது நடவடிக்கை நடத்தையில் நியாயம் இருக்க வேண்டும். 22–ஆம் தேதி முதல் குரு பார்வை செவ்வாய்க்கு ஏற்படுவதால், இடமாற்றம், பதவி உயர்வு, சொத்துச் சேர்க்கை முதலிய பலன்களைச் சிலர் அடையக் கூடும். 14–ஆம் தேதி வரை உங்கள் ராசி மீது சுக்கிரன் சஞ் சரிப்பதால் இளமையுணர்வு கூடும்.

15–ஆம் தேதி முதல் சுக்கிரன் 2–இல் சஞ் சரிப்பதால் பெற்றோர் அல்லது இதர பெண்களின் மூலம் தனம், பொருள் கிட்டலாம். புதன் 11–ஆம் தேதி முதல் 2–இல் நீசம் பெற்றுச் சஞ்சரிப்பதால், சில அத்தியாவசியச் செலவுகள் உறவினர்கள் வழியிலோ, குழந்தைகள் வழியிலோ ஏற்படக் கூடும். சனி – கேது 11–இல் சஞ்சரிப்பதால் பெரி யோர்களின் ஆசியும், அறிவுரையும் நன்மை பயக்கும். சிலர் ஆன்மிகப் பெரியவர்களுடன் நட்புப் பாராட்டுவர். குரு 10–இல் சஞ்சரிப்பதால் தொழில் வழிப் பயணங்கள் நன்மை பயக்கும்.

## மீனம்



மீன ராசி அன்பர் களுக்கு, சூரியன் இம்மாதத் தின் முற்பாதியில் விரும்பத் தகாத பலன்களை ஏற்படுத்தக் கூடும். வீண் விவாதம், பிரச் சனைகளைத் தவிர்ப்பது நல் லது. உடல் நலிவுகள் ஏற்பட் டால் தகுந்த மருத்துவம் செய்து கொள்ள வேண்டும். மாதத்தின் பிற்பாதியில் ரத்த சம்பந்தம் உடைய உறவினர்களால் உதவி கிடைக்கலாம். ராகு 4–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால் பயணங்கள் ஏற்படலாம். அதே சமயம் போக்குவரத்துகளில் கவனம் வேண்டும்.

சனி – கேது 10–ஆம் வீட்டில் சஞ்சரிப்பதால், நற்கர்மங்களில் ஈடுபட்டால் பிறரது அபி மானத்தைப் பெறலாம். தொழில், உத்தியோகத் துறைகளில் தற்காலிகமாகச் சில பின்னடைவுகள் ஏற்படலாம். சுக்கிரன் 14–ஆம் தேதி வரை 12–இல் சஞ்சரிப்பதால், சுக போகத்தைக் கொடுக்கும். 15–ஆம் தேதி முதல் ராசி மீது சஞ்சரிப்பதால் எதிர்பாராத சம்பவங்களால் வருத்தம் ஏற்பட வாய்ப்புண்டு. 22–ஆம் தேதி முதல் குரு 9–இல் சஞ்சரிப்பதால் சுப காரியங்களில் ஈடுபாடு கொள் ளலாம், ஈடேறும். புதன் 11–ஆம் தேதி முதல் நீசம் அடைவதால், தாயார் வழியிலோ, வாழ்க்கைத் துணைவர் வழியிலோ பிரச்சனைகள் ஏற்படலாம்.

## சுவாமி கமலாத்மானந்தர்



# எது உண்மையான வழிபாடு? (4)

அன்பிலும், இதயத்தின் தூய்மையான பக்தியிலும்தான் மதம் வாழ்கிறதே தவிர, சடங்குகளில் மதம் வாழவில்லை.

ஒருவன் உடலும் மனமும் தூய்மையாக இல்லாமல், கோயிலுக்குச் செல்வதும் சிவபெருமானை வழிபடுவதும் பயனற்றவை. உடலும் மனமும் தூய்மையாக இருப்பவர்களின் பிரார்த்தனைகளை சிவபெருமான் நிறைவேற்றுகிறார்.

ஆனால், தாங்களே தூய்மையற்றவர்களாக இருந்துகொண்டு, பிறருக்கு மதபோதனை செய்பவர்கள் இறுதியில் தோல்வியே அடைகிறார்கள்.

லுக்குச் செல்லும் ஒருவன், ஏற்கெனவே தன்னிடம் இருக்கும் தன் பாவங்களுடன் மேலும் ஒன்றை அதிகப்படுத்துகிறான்; கோயிலுக்குப் புறப்பட்டபோது இருந்ததைவிட, இன்னும் மோசமானவனாக அவன் வீடு திரும்புகிறான்.

திருத்தலங்கள், புனிதமான



புற வழிபாடு என்பது, அக வழிபாட்டின் அடையாளம் மட்டுமே ஆகும். அக வழிபாடும் தூய்மையும்தாம் உண்மையான விஷயங்கள். இவையின்றிச் செய்யப்படும் புறவழிபாடு பயனற்றது. இதை நீங்கள் மனத்தில் பதிய வைத்துக்கொள்ள முயற்சி செய்யுங்கள்.

'நாம் எதை வேண்டுமானாலும் செய்யலாம்; பிறகு ஒரு திருத்தலத்திற்குச் சென்றால், அந்தப் பாவங்கள் எல்லாம் மன்னிக்கப்பட்டுவிடும்' என்று நினைக்கும் அளவிற்குக் கீழான நிலைக்கு, இந்தக் கலியுகத்தில் மக்கள் வந்துவிட்டார்கள்.

தூய்மையற்ற உள்ளத்துடன் கோயி

பொருள்களாலும் மகான்களாலும் நிரம்பி இருப்பவை. மகான்கள் வாழ்கின்ற இடங்களில் கோயில் எதுவும் இல்லையென்றாலும், அந்த இடங்கள் திருத்தலங்கள்தான். நூறு கோயில்கள் இருந்தாலும், அங்கே புனிதமற்றவர்கள் இருப்பார்களானால் அங்கு தெய்விகம் மறைந்துவிடும்.

திருத்தலங்களில் வாழ்வதும் மிகவும் கடினமான செயலாகும். காரணம், சாதாரண இடங்களில் செய்யும் பாவங்களைச் சுலபமாக நீக்கிக்கொள்ள முடியும். ஆனால் திருத்தலங்களில் செய்யும் பாவத்தை நீக்கவே முடியாது.



மனத்தைத் தூய்மையாக வைத்திருப்பதும், பிறருக்கு நன்மை செய்வதும் தான் எல்லா வழிபாடுகளின் சாரமாகும். ஏழை எளியவர்களிடமும், பலவீனர்களிடமும், நோயாளிகளிடமும் சிவபெருமானைக் காண்பவன்தான் உண்மையில் சிவபெருமானை வழிபடுகிறான். விக்கிரகத்தில் மட்டும் சிவபெருமானைக் காண்பவனின் வழிபாடு ஆரம்ப நிலையில்தான் இருக்கிறது.

ஒரே ஒரு ஏழைக்காகிலும், அவனது ஜாதி, இனம், மதம் போன்ற எதையும் பாராமல் அவனிடம் சிவபெருமானைக் கண்டு, அவனுக்கு உதவிகள் செய்து தொண்டாற்றுபவனிடம் சிவபெருமான் மிகவும் மகிழ்ச்சி கொள்கிறார். கோயிலில் மட்டும் தன்னைக் காண்பவனை விட, அவனிடம் சிவபெருமான் அதிக மகிழ்ச்சி கொள்கிறார்.

ஒரு பணக்காரனுக்கு ஒரு தோட்டம் இருந்தது. அதில் இரண்டு தோட்டக்காரர்கள் இருந்தார்கள். ஒருவன் சோம்பேறி. அவன் வேலையே செய்ய மாட்டான். ஆனால் யஜமானன் தோட்டத்திற்கு வந்தால் போதும்; உடனே எழுந்துபோய் கைகூப்பி வணங்கியபடி யஜமானனிடம், "ஓ, என் யஜமானின் முகம் எவ்வளவு அழகாக இருக்கிறது!" என்று புகழ் பாடி, அவர் முன்னால் பல்லை இளித்துக்கொண்டு நிற்பான்.

மற்றொரு வேலைக்காரன் அதிகம் பேசுவதே இல்லை. ஆனால் அவன் கடினமாக உழைப்பான். பல வகையான பழங்களையும் காய்கறிகளையும் பயிர் செய்து, நீண்ட தூரத்தில் வசிக்கும் தன்னுடைய எஜமானனின் வீட்டிற்குச் சுமந்துகொண்டு செல்வான்.

இந்த இரண்டு தோட்டக்காரர்களில் யாரை எஜமானன் அதிகம் விரும்புவார்? சிவபெருமான்தான் அந்த எஜமானன். இந்த உலகம் அவரது தோட்டம். இங்கே இரண்டு வகையான தோட்டக்காரர்கள் இருக்கிறார்கள். ஒரு வகையினர் சோம்பேறிகள் – ஏமாற்றுக்காரர்கள். அவர்கள் எதுவும் செய்வதில்லை; சிவபெருமானின் அழகான கண்களையும் மூக்கையும் மற்ற குணநலன்களையும் பற்றிப் பேசிக் கொண்டிருப்பார்கள். ஏழைகளும், பலவீனர்களுமான எல்லா மனிதர்கள், விலங்குகள் மற்றும் அவரது படைப்புகள் அனைத்தையும் மிகுந்த கவனத்தோடு பராமரிப்பவர்கள் மற்றொரு வகையினர்.

இவர்களில் யார் சிவபெருமானின் அன்பிற்கு உரியவர்கள்? நிச்சயமாக அவருடைய பிள்ளைகளுக்குச் சேவை செய்பவர்களே சிவபெருமானின் அன்பிற்கு உரியவர்கள்.

தந்தைக்குச் சேவை செய்ய விரும்புவர்கள், முதலில் பிள்ளைகளுக்குச் சேவை செய்ய வேண்டும். சிவபெருமானுக்குச் சேவை செய்ய விரும்பு



பவர்கள், முதலில் அவருடைய குழந்தைகளாகிய இந்த உலக உயிர்கள் அனைத்திற்கும் தொண்டு செய்ய வேண்டும்.

“இறைவனின் தொண்டர்களுக்குச் சேவை செய்பவர்களே இறைவனின் மிகச் சிறந்த தொண்டர்கள்'' என்று, சாஸ்திரங்களிலும் சொல்லப்பட்டிருக்கிறது. இந்தக் கருத்தை நீங்கள் நினைவில் வைத்துக்கொள்ளுங்கள்.

மீண்டும் சொல்கிறேன் : மனத்தூய்மையுடன் இருங்கள்; உங்களை நாடி வரும் ஏழைகளுக்கு உங்களால் இயன்ற உதவி செய்யுங்கள். இது நல்ல செயல். இதன் பலனாக உங்கள் இதயம் தூய்மையடையும். அதனால் எல்லோரிடமும் குடிகொண்டிருக்கும் சிவபெருமான் உங்களிடம் வெளிப்பட்டுத் தோன்றுவார்.

அவர் எல்லோருடைய இதயத்திலும் எப்போதும் இருக்கிறார். அழுக்கும் தூசியும் படிந்த கண்ணாடியில் நாம் நம் உருவத்தைப் பார்க்க முடியாது. அஞ்ஞானமும் தீய குணங்களும் தாம் நம் இதயம் என்ற கண்ணாடியில் படிந்திருக்கும் தூசியும் அழுக்குமாகும்.

நமது நன்மையை மட்டுமே நினைக்கும் சுயநலம், பாவங்கள் எல்லாவற்றிலும் முதல் பாவமாகும். 'நானே முதலில் சாப்பிடுவேன்; மற்றவர்களைவிட எனக்கு அதிகமாகப் பணம் வேண்டும்; எல்லாம் எனக்கே வேண்டும்; மற்றவர்களுக்கு முன்னால் நான் சொர்க்கம் போக வேண்டும்; எல்லோருக்கும் முன்னால் நான் முக்திபெற வேண்டும்' என்றெல்லாம் நினைப்பவன் சுயநலவாதி.

சுயநலம் இல்லாதவனோ, “நான் கடைசியில் இருக்கிறேன். சொர்க்கம் செல்வதைப் பற்றி எனக்குக் கவலையில்லை. நான் நரகத்திற்குச் செல்வதால் என் சகோதரர்களுக்கு உதவ முடியுமானால் நான் நரகத்திற்குச் செல்லவும் தயாராக இருக்கிறேன்'' என்று சொல்கிறான்.

இத்தகைய சுயநலமற்ற தன்மைதான் ஆன்மிகம். சுயநலம் இல்லாதவனே மேலான ஆன்மிகவாதி; அவனே சிவபெருமானுக்கு அருகில் இருக்கிறான். அவன் படித்தவனாக இருந்தாலும் சரி, படிக்காதவனாக இருந்தாலும் சரி – அவன் அறிந்தாலும் சரி, அறியவில்லை என்றாலும் சரி – அவனே மற்ற எல்லோரையும்விட சிவபெருமானுக்கு அருகில் இருக்கிறான்.

சுயநலம் கொண்டவன் எல்லாக் கோயில்களுக்கும் சென்று வழிபட்டிருந்தாலும், புண்ணியத் தலங்கள் அனைத்தையும் தரிசித்திருந்தாலும், சிறுத்தையைப் போல் தன் உடல் முழுவதும் மதச் சின்னங்களை அணிந்திருந்தாலும் – அவன் சிவபெருமானிடமிருந்து விலகியே இருக்கிறான்.

●

கட்டுரை

முனைவர் இரா.மோகன்



# பட்டுக்கோட்டையாரின் சொல்லமுதம்

தமிழ்த் திரையுலகில் அழுத்தமாகவும் ஆழமாகவும் தடம் பதித்துள்ள தலைமுறைகள் மூன்று. மதுர பாஸ்கரதாஸ், பாபநாசம் சிவன், உடுமலை நாராயண கவி ஆகியோர் திரையிசையின் முதல் தலைமுறையைச் சார்ந்தவர்கள். கண்ணதாசன், மருதகாசி, பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம், வாலி ஆகியோர் இரண்டாம் தலைமுறைக் கவிஞர்களுள் இன்றியமையாதவர்கள். வைரமுத்து, மு.மேத்தா, நா.காமராசன், புலமைப்பித்தன் முதலானோர் மூன்றாம் தலைமுறையில் வருபவர்கள்.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம்

இவர்களுள், தமிழ்த் திரையுலகில் ஒரு பாட்டுக் கோட்டையாக விளங்கியவர் பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் (1930–1959). வாழ்ந்த நாள் கொஞ்சமேயாயினும், கால வெள்ளத்தைக் கடந்து நிற்கின்ற கருத்துக்கள் நிறைந்த பாடல்கள் பலவற்றைப் படைத்துத் தந்த பெருமை அவருக்கு உண்டு.

கவிஞர் வைரமுத்து குறிப்பிடுவது போல் "இரண்டே ஆண்டுகள் பள்ளிப் படிப்பு. இருபத்தொன்பது ஆண்டுகளே வாழ்வு. ஆறு ஆண்டுகளே கலையுலக ஆட்சி. ஐம்பத்தேழு மட்டுமே படங்கள். எல்லாம் தொகுத்துப் பார்த்தாலும் இருநூற்று அறுபத்திரண்டே பாடல்கள். ஆனால் திரைவெளியில் அவன் பிடித்த இடம் இன்னொருவரால் எட்டப்பட முடியாதது; பாட்டுப் பயணத்தில் அவன் பதித்த தடம் காலப் புழுதியால் அழிக்கப்படாதது."

பட்டுக்கோட்டையார் பிறந்தது ஒரு விவசாயக் குடும்பத்தில்; தமிழ்நாடு விவசாயிகள் சங்கத்துடன் பட்டுக்கோட்டை கொண்டிருந்த தொடர்பும் யாவரும் அறிந்ததே. எனவே அவரது திரையிசைப் பாடல்களில் விவசாயத் தொழிலின் தாக்கம் ஆங்காங்கே இடம்பெறுவது என்பது தவிர்க்க இயலாத ஒன்றாக அமைந்தது; அவரது உவமைகளில் சொல்லாக்கங்களில் அத்தாக்கம் மிக இயல்பாக வெளிப்பட்டது.

பட்டுக்கோட்டையின் உவமைகளுள் படித்தவுடன் நெஞ்சில் இடம்பிடித்துக் கொள்ளும் ஓர் அழகிய உவமை இதோ:

"உழவனும் ஓயாத / உழைப்பும் போல் நாமே

ஒன்றுபட்ட வாழ்க்கையினில் / என்றும் இருப்போம்"

பட்டுக்கோட்டையார் படைக்கும் காதலர்கள் 'உழவனும் ஓயாத உழைப்பும் போல் என்றும் வாழ்வில் ஒன்றுபட்டு இருப்போம் நாம்' என்ற ஒருமித்த முடிவுக்கு வருகின்றனர்.

'சின்னஞ்சிறு கண்மலர் செம்பவள வாய்மலர்

சிந்திடும் மலரே ஆராரோ!' என்பது பதிபக்தி படத்திற்காகப் பட்டுக்கோட்டையார் எழுதிய ஒரு தாலாட்டுப் பாடல். இதில் ஒரு தாய், குழந்தையின் தந்தை ஆர்வத்தோடு வந்து அள்ளி அணைத்து அதன் கன்னத்தில் முத்தமிடுவது போல் கற்பனை செய்து தாலாட்டுப் பாடுகிறாள். உணர்ச்சி மய மான இக்காட்சியைப் பட்டுக்கோட்டையார் சொல் லோவியமாக்கி இருக்கும் பாங்கு வித்தியாச மானது; அவருக்கே உரியது:

"பாப்பா உன் அப்பாவைப் பார்க்காத ஏக்கமோ?

பாய்ந்தே மடிதனில் சாய்ந்தால்தான் தூக்கமோ?

தப்பாமல் வந்துன்னை அள்ளியே அணைப்பார்

தாமரைக் கன்னத்தில் முத்தங்கள் விதைப்பார்"

குழந்தையின் கன்னம் தாமரை போன்றது எனப் பாடுவதில் புதுமை ஒன்றும் இல்லை; ஆனால் தந்தை பாச உணர்வின் உச்சத்தில் நின்று குழந்தையின் கன்னத்தில் முத்தமிடு வதற்குத் 'தாமரைக் கன்னத்தில் முத்தங்கள்' இடுவார் என்றோ, 'சொரிவார்' என்றோ 'பொழி வார்' என்றோ பாடாமல், 'விதைப்பார்' என்று பாடியிருப்பது பட்டுக்கோட்டைக்கு மட்டுமே கைவந்த ஒன்று.

பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம் திரை யிசையில் விழிப்புணர்வை விதைத்தவர். சின்னப் பயலுக்கும் 'சேதி' சொன்ன சிந்தனைக் கவிஞர் அவர்; 'தாயத்'திலும் சமுதாயத்திற்குச் 'சங்கதி' தந்த சத்தான கவிஞர் அவர்; 'விவரம் மண்டை யில் ஏறணும்' என்று பாடிய வீரியம் நிறைந்த கவிஞர் அவர். தத்துவம் பாடினாலும், தாலாட்டுப் பாடினாலும் – இனிய காதலைப் பாடினாலும், இயற் கையையே பாடினாலும் – சமூக உணர்வோடு பாடுவதுதான் பட்டுக்கோட்டையின் வாடிக்கை.

பட்டுக்கோட்டையார் படைக்கும் காதலன் ஒருவன் தன் காதலியை நோக்கி, 'முகத்தில் முகம் பார்க்கலாம் – விரல் நகத்தில் பவழத்தின் நிறம் பார்க்கலாம்!' என்று அழகுணர்வு ததும்பப் பாடி மகிழ்வதோடு நின்றுவிடவில்லை; அதற்கு ஒரு படி மேலே சென்று,

"இகத்தில் இருக்கும் சுகம் எத்தனையானாலும்

இருவர்க்கும் பொதுவாக்கலாம் – அன்பே

அதன் எண்ணிக்கை விரிவாக்கலாம்"

என்ற சமூக உணர்வுடன் முழக்கமிடுகிறான்! இங்ஙனம் பட்டுக்கோட்டையாரின் திரையிசைப் பாடல்களில் வரும் காதலர்கள் பெரும்பாலும் காதல் உணர்வும் சமூக உணர்வும் கைகோர்த்துச் செல்லும் இயல்பினராகவே படைக்கப் பட்டுள்ளனர். சான்றாக, 'நாடோடி மன்னன்' என்ற திரைப்படத்திற்காகச் 'சும்மா கெடந்த நிலத் தைக் கொத்தி' எனத் தொடங்கிப் பட்டுக்கோட் டையார் பாடியுள்ள புகழ்பெற்ற பாடலிலிருந்து ஒரு பகுதியைச் சுட்டிக் காட்டலாம்:

"பெண் : மாடா ஒழைச்சவன் வாழ்க்கையிலே – பசி

வந்திடக் காரணம் என்ன மச்சான்?

ஆண் : அவன்

தேடிய செல்வங்கள் வேறே இடத்திலே

சேர்வதனால் வரும் தொல்லையடி.

பெண் : பஞ்சைப் பரம்பரை வாழ்வதற்கு – இனிப்

பண்ண வேண்டியது என்ன மச்சான்?

ஆண் : தினம்

கஞ்சி கஞ்சி என்றால் பானை நிறையாது

சிந்திச்சு முன்னேற வேணுமடி!"

வாடிக்கையாய் வரும் துன்பங்களை இன்னும் நீடிக்கச் செய்வது மோசம்; அவற்றைக் கட்டாயம் ஒரு முடிவுக்குக் கொண்டு வர வேண்டும்; ஏழை எளியவரின் சேரிக்கும் இன்பம் திரும்ப வேண் டும். இந்த இரண்டு செயல்களும் நடைமுறைக்கு வரவேண்டும் என்றால், என்ன செய்ய வேண்டும் தெரியுமா? நல்லவர் ஒன்றாய் இணைய வேண்டு மாம். அப்போதுதான் மீதம் உள்ளவரும், நாளை வருவதை எண்ணி எண்ணி நாழிக்கு நாழி தெளிவார்களாம். இதே கருத்தை,

"நாளை உலகம் நல்லோரின் கையில்

நாமும் அதிலே உயர்வோம் உண்மையில்"

எனப் பிறிதோர் பாடலிலும் பட்டுக்கோட்டை பாடி யிருப்பது இங்கே மனக்கொளத் தக்கதாகும்.

பட்டுக்கோட்டை இவ்வுலகில் வாழ்ந்த காலம் மிகக் குறைவே; இருபத்தொன்பது ஆண்டுக் காலமே என்றாலும், அதற்குள் அவர் ஈடுபட்டிருந்த தொழில்கள் மிக அதிகம்; அவர் தமது இருபத் தொன்பது ஆண்டுக் கால வாழ்வில் பதினேழு வகையான தொழில்களில் ஈடுபட்டிருந்தார் என




அறிய முடிகின்றது.

பட்டுக்கோட்டை தம் திரையிசைப் பாடல்களில் ரிக்ஷா இழுக்கும் தொழிலாளி, ஆலைத் தொழிலாளி, தாயத்து விற்கும் தொழிலாளி எனப் பல்வேறு தொழிலாளர்களின் வாழ்க்கை நிலைகளைக் குறித்து இதயம் ஒன்றிய ஈடுபாட்டுடன் பாடியுள்ளார்; உண்மை ஒளி விளங்க உருக்கமாகப் பாடியுள்ளார். காட்டாக, ஆலைத்தொழிலாளி ஒருவனின்அவல நிலையினைச் சித்திரிக்கும் வகையில் 'இரும்புத் திரை' படத்திற்காகப் பட்டுக்கோட்டை இயற்றிய பாடல் ஒன்றினைச் சுட்டலாம்.

ஆலையில் பணியாற்றும் தொழிலாளி மாதம் முப்பது நாளும் மாடாய் உழைக்கிறான்; சொட்டுச் சொட்டாய் வேர்வை விட்டுப் பட்டினி கிடந்து பாடு படுகிறான்; ஆனாலும் சம்பளம் வாங்கும் முதல் தேதியன்று அவன் காண்பது என்ன? 'கையிலே வாங்கினேன் பையிலே போடல்லே, காசு போன இடம் தெரியல்லே!' என்பதுதான். காதலி பாப்பா காரணம் கேட்டால் ஏது சொல்லுவது? அவனுக்கு ஒன்றுமே புரியவில்லை; ஆனாலும் ஒன்று மட்டும் தெளிவாகப் புரிகின்றது. மொத்தத்தில் 'ஏழைக்குக் காலம் சரியில்லே!' அவ்வளவுதான்! விதவிதமாய்த் துணிகள் இருக்கின்றன; ஆனால் விலையைக் கேட்டால் நடுக்கம் வருகின்றது. வகைவகையாய் நகைகள் இருக்கின்றன. ஆனால் மடியைப் பார்த்தால் மயக்கம் வருகின்றது. எதை எதையோ வாங்க வேண்டும் என்று எண்ணம் இருக்கிறது; ஆனால் வாங்குவதற்கு ஏற்ற வழியில்லை. அதையும் இதையும் வாங்க வேண்டும் என்று எண்ணாமல் இருக்க மட்டும் முடியவில்லை. அந்தத் தொழிலாளியின் மனக்கண் முன்னே கண்ணுக்கு அழகாக ஒரு பெண் – அந்தப் பெண்ணுக்குத் துணையாக ஆண் – ஒன்றுக்குப் பத்தாக இருக்கும் செல்வம் – உலகம் நிறையக் காணப் படும் இன்பம் – அத்தனையும் அணி வகுத்து வருகின்றன.

இவ்வளவு இருந்தும் என்ன பயன்? அவனது அடிமனத்தில் ஓர் ஏக்கம் பிறக்கின்றது. இவ்வளவும் படைத்த கடவுள் இவற்றோடு நிற்காமல் என்னைப் போலே இல்லாத பலரையும் படைத்திருக்கிறானே! எப்போதும் ஏக்கத்திலேயே வாழ – வாட – வைத்திருக்கிறானே! வேதனையின் – விரக்தியின் ஆற்றாமையின் ஏக்கத்தின் விளிம்பில் நின்றுகொண்டு அவன் கேட்கும் கேள்வி இதோ :

"என்னைப் போலவே பலரையும்
படைச்சு – அண்ணே
என்னைப் போலே பலரையும் படைச்சு
இதுக்கும் அதுக்கும் ஏங்க வைச்சான்
ஏழையைக் கடவுள் ஏன் படைச்சான்?"

'ஏழை இறந்தால் எரிக்க விறகில்லை; ஆழ வயிறெரிந்து வெந்தால்தான் உண்டு! தேவனே! ஏழைக்கு எதற்கு சாவு? எனப் பொட்டில் அடித்தாற் போல் கேட்கும் கன்னட நாட்டுப்புறப்பாடல் ஒன்று உண்டு. அதுபோல் இப்பாடலின் முடிவில் முத்தாய்ப்பாகக் கேட்கிறார் பட்டுக்கோட்டையார்.

'பாண்டித்தேவன்' என்னும் திரைப்படத்திற்காக எழுதிய பாடல் ஒன்றில் பட்டுக்கோட்டையார் 'முடியிருந்தும் மொட்டைகளாய், மூச்சிருந்தும் கட்டைகளாய், விழியிருந்தும் பொட்டைகளாய்' விழுந்து கிடக்கும் நாட்டு மக்களின் மெத்தனமான போக்கினைக் குறித்துக் கடுமையாகச் சாடியுள்ளார்.




'சொல்லுறதைச் சொல்லிப்புட்டேன், செய்யுறதைச் செஞ்சிடுங்க' என இயல்பான பேச்சு நடையில் பாடலைத் தொடங்கும் கவிஞர், 'நல்லதுன்னா கேட்டுக்குங்க, கெட்டதுன்னா விட்டுடுங்க' என்று தெளிவாக இரண்டில் ஒன்றைச் செய்யுமாறு சொல்லித் தொடருகிறார்; 'முன்னாலே வந்தவங்க என்னென்னமோ சொன்னாங்க, மூளையிலே ஏறுமுன்னு முயற்சியும் செஞ்சாங்க! ஒண்ணுமே நடக்காம உள்ளம் நொந்து செத்தாங்க! என்னாலும் ஆகாதுன்னு எனக்குத் தெரியுமுங்க!' என்று தம் முன்னோர்க்கு நேர்ந்த அவல முடிவைச் சுட்டிக் காட்டும் அவர், தம் இயலாமையைக் குறித்துத் தாம் நன்கு தெரிந்து வைத்திருப்பதையும் எடுத்துரைக்கிறார்.

அதற்குப் பிறகு அவர் பணிந்த குரலில் 'இன்னும் எத்தனை நாள் இப்படியே விழுந்து கிடக்கப் போகிறீர்கள்? உலகம் போகிற பாதையை முறையைத் தெரிந்து, உள்ளம் தெளிந்து, உண்மை




உணர்ந்து எப்போது உயரப் போகிறீர்கள்?' என்று நாட்டு மக்களைப் பார்த்து நயமாகக் கேட்கிறார்.

இவ்வளவு நேரம் நயந்தும் பயந்தும், நல்ல படியாகவும் நாகரிகமாகவும், வேண்டியும் விரும்பியும் கேட்டும் நாட்டு மக்களிடமிருந்து எந்தவிதமான எதிர்விளைவும் வினையும் இல்லை என்பதை அறிய நேரும் போது கவிஞருக்குக் கோபம் பற்றிக் கொண்டு வருகிறது; இதுவரை 'குணம் என்னும் குன்றேறி' நின்ற கவிஞர், இப்போது வெகுளியின் எல்லையில் நின்று நாட்டு மக்களை நோக்கி நறுக்கென்று கேட்கிறார்;

"சித்தர்களும் யோகிகளும் / சிந்தனையில் ஞானிகளும்
புத்தரோடு ஏசுவும் / உத்தமர் காந்தியும்
எத்தனையோ உண்மைகளை / எழுதி எழுதி வச்சாங்க
எல்லாந்தான் படிச்சீங்க? / என்ன பண்ணிக் கிழிச்சீங்க?"

'எல்லாந்தான் படிச்சீங்க! என்ன பண்ணிக் கிழிச்சீங்க?' – கவிஞர் வாலி வியந்து கூறுவது போல், 'அடேயப்பா! சவுக்கெடுத்து சொடுக்கி விட்டது போல என்ன சொல்வீச்சு?' ஆம், இங்கே இடம்பெற்றிருப்பது பட்டுக்கோட்டையாரின் சொல்லாட்சியன்று; சொல்வீச்சு!

"கோடி கொடுப்பினும் கிட்டுவதோ – பட்டுக்
கோட்டைக் கவிஞனின் சொல்லமுதம்?"

என எழுத்தாளர் ஜெயகாந்தன் பட்டுக்கோட்டையாரைப் பற்றி இயற்றிய கையறுநிலைக் கவிதையில் குறிப்பிட்டிருப்பது முக்காலும் உண்மை; வெறும் புகழ்ச்சி இல்லை.

●

**அஷ்ட பரிமளம் என்பன...?**

**அகில், சந்தனம், பச்சைக் கற்பூரம், குங்குமப்பூ, கோரோசனை, கஸ்தூரி, ஜவ்வாது, புனுகு ஆகிய எட்டும் 'அஷ்ட பரிமளம்' எனப்படும். இவற்றின் அபிசேகம் சிவனுக்குச் சிறந்தது.**

**– ஏ.பாஸ்கர், சேலம்.**



# தென்றலே எனக்காக...

வண்ண மலர்களின்
வாசனையை நுகர்ந்து வர
உனக்குத் தடை விதித்தது யார்?

வெய்யோனின் சுடுகதிர்கள்
வெம்மை முகங்காட்டி
உன் குளுமையை
வெற்றிகொள்ளத் தடுத்தது யார்?

காட்டு மூங்கில்கள்
நாதமிசைக் குழலுக்குள்
உன்னைச் சிறை வைக்க நினைத்ததுவோ?

வெள்ளி அருவிகள்
அவற்றின் குளுமையை அள்ளவிடாமல்
உன்னை ஆர்ப்பரித்துத் தடுத்தது யார்?

கூவும் குயில்கள்
அவற்றின் குரலோசையைப் பின்தொடர
உனக்கு ஆசைகாட்டித் தடுத்தது யார்?

தடுத்தாலும் நீ...
அனைத்தையும் கடந்து வந்தாய்!
என்னிடம்
அன்புகொள்ளத் தவழ்ந்து வந்தாய்!
அருமைத் தென்றலே...!



வானதி சந்திரசேகரன்

சிறுகதை

# பின் தொடர்தல்

“தீபிகா, தீபிகா இங்க ஓடி வாயேன்... நான் ஒருத்தனைப் பத்தி உன்னிடம் சொன்னது ஞாபக மிருக்கா?”

“எவனோ ஒருத்தன் உங்க வீட்டுக்குப் பக்கத்தில இருக்கான்னு சொன்னியே, அவனைப் பத்தியா சொல்ற ரம்யா?”

“ஆமாம், அவனைப் பத்தித்தான்.”

“அவனுக்கு இப்ப என்ன?”

“அவன் இந்த பி.எஃப். ஆபீசுக்கே வந்திட்டான். அதோ பாரு, புளூ கலர் சர்ட் போட்டுட்டு அங்க பேசிட்டிருக் கானே அவன்தான். அவன் இப்ப என்னைத் தேடறான்.”

“ரம்யா! நீ ஏன் பதற்றப் படறே? சும்மா இரு பேசாம. அவன் என்ன செய்யறான்னு பார்க்கலாம்!”

“தீபி, இதோ பாரு பாக்கறான், பாக்கறான்.”

“உன்னைப் பாக்கிற மாதிரித் தெரி யலையே. நல்லாப் பாரு.”

“ஐயோ, வேண்டாம் சாமி, போச்சு. அப்படியே ஒட்டிக்குவான்.”

“நான் போயிப் பேசட்டுமா?”

“என்ன பேசப்போற?”

“யாரைப் பாக்கணும்னு கேக் கறேன்.”

“வம்ப விலை கொடுத்து வாங் கணுமா – பேசாம வா. நம்ம சீட்டுக் குப் போகலாம். கேன்டீன் வேண்டாம்.”

இருவரும் டீ இடைவேளையில் கேன்டீனுக்குப் போகாமலேயே தங்கள் சீட்டிற்குத் திரும்பிவிட்டனர்.

மாலை 5.30 மணி. அலுவலகம் முடிந்து ரம்யாவும், தீபிகாவும் அவர வர் ஸ்கூட்டரில் வீட்டுக்குக் கிளம்பினார்கள்.

வீடு 3 கிலோ மீட்டர் தூரம்தான். சென்ட்ரல் பஸ் நிலையத்தைக் கடப் பதற்கே அரைமணி நேரமாகும். கோவை பஸ் நிலையம் கூட்ட நெரி சலில் எப்போதும் திக்கு முக்காடும். ஒரு வழியாக சாயிபாபா காலனி வந்து சேர்ந்தார்கள். ரம்யாவுக்கு என்ன தோன்றியதோ தெரியவில்லை, தீபிகாவையும் தன் வீட்டுக்கு டீ சாப்பிடக் கூப்பிட்டாள்.

வீட்டில் போய் இருவரும் இறங்கி யவுடன் மறுபடியும் ரம்யாவுக்குக் காலையில் ஏற்பட்ட பதற்றம். தீபிகா வைக் கூப்பிட்டு “தீபி, பார்த்தியா, அந்த அவன் அதோ அங்கிருந்து பார்க்கிறதப் பார்த்தியா?”

“அதுதான் அவன் வீடா? உன் வீட்டுக்குப் பக்கத்தில்தான் இருக் கானா? உள்ளே போயிட்டானே, அந்த வீட்ல யாரு இருக்கா?”

“அவனோட அப்பா, அம்மா இருப்பாங்களோ என்னவோ தெரியாது.”

“எப்ப இங்கே குடி வந்தாங்க?”

“2 மாதமிருக்கும். வந்ததில இருந்து அவன் என்னை நோட்ட

மிடறதில இருக்கான். சில நேரம் பின்னாலேயும் அவன் ஸ்கூட்டரில் வர்றான். எனக்கு பயமா இருக்குடி...”

“நீ எதுக்கு பயப்படற? அவன் வந்து உங்கிட்டப் பேசினா, பதில் பேசாத. அதுவே அவனை அவ மானப் படுத்தின மாதிரித்தான். அப்படிச் செய்.”

“சரி சரி, உள்ளே வா. டீ சாப்பிட லாம். அம்மா ரெடியா இருக்காங்க, நமக்கு டீ கொடுக்க.”

இருவரும் பின்னர் பிரிந்தனர். மறுநாள்தானே சந்திக்கப் போகிறார் கள். அவள் வீட்டை விட்டுப் போகும் போது ரம்யாவைப் பற்றியே நினைத்துக் கொண்டு போனாள். கார ணம், ரம்யா அழகானவள். ஆனால் மிக மிகப் பயந்தவள். அதைவிட, அவளுக்கு வெட்கம் வேறு. பதற்ற மடைவாள்.

ஆனால், தீபிகா சற்றுத் துணிச்ச லான பெண். இருவருக் கும் பி.எஃப். ஆபீசில் வேலை. நல்ல சிநேகிதிகள். தீபிகா விற்கு ஓர் ஆசை. ரம்யாவுக்கு ஏதாவது உதவி செய்ய வேண்டு மென்று. இந்த விஷயத்தில் அவளு டைய பயத்தைப் போக்கி, அவளுக்குத் தைரியம் வரச் செய்ய வேண்டுமென்று ஆசைப் பட்டாள்.



சில நாள் கழித்து ஆபீசுக்கு வரும்போது ரம்யாவின் ஸ்கூட்டர் பஞ்சர் ஆகிவிட்டது. பஞ்சர் போடும் கடைக்கு ஸ்கூட்டரைத் தள்ளிக் கொண்டு போனாள்.

மறுபடியும் பதற்றம். அவனும் அதே கடையில். முன் சக்கரத்திற்குக் காற்றுப் பிடிக்க வந் தான். வேலை முடிந்தது. அவன் உடனே போய்விட்டான்.

ரம்யா பஞ்சர் போட்டுவிட்டு அங் கிருந்து புறப்பட்டாள். ஆபீஸ் போன வுடன் தீபிகாவிடம் ஓடினாள். பஞ்சரான விஷயத்தைச் சொல்லி முடித்தபோது வேர்த்து விறுவிறுத் தாள். ஏன் பதற்றம் எனக் கேட்ட போது, “அந்தப் பஞ்சர் கடைக்கு அவனும் வந்தான்” என்று கூறினாள்.

பாஞ்சசன்யா

“அவனும் பஞ்சர் போட வந் தானா?” என்று தீபிகா, ரம்யாவிடம் கேட்க, “இல்லை, இல்லை. அவன் முன் சக்கரத்திற்குக் காற்றுப் பிடிப் பதற்காக வந்திருந்தான். பிறகு வேலை முடிந்தவுடன் போய்விட்டான்.”

“சரி, அதற்கென்ன?”

“வேண்டுமென்றே பஞ்சர் கடைக்கு வந்து பஞ்சர் இல் லாமல் காற்றுப் பிடித்தா னென்றால், அவன் திட்டம் எப்படிப்பட்டது என நினைத்துப் பார்த்தேன். வேர்த்து விறுவிறுத்து விட்டது.”

“ஓகோ, பின் தொடர்கின்றானோ?”

“உறுதியாகச் சொல்ல முடியவில்லை. சந்தேகம்தான் வருது.”

“போலீஸில் புகார் தந்து விடலாமா?”

“ஐயோ, அது விவ காரமாகிவிடுமே,”

“சரி, இன்னும் சற் றுக் கவனிப்போம்.

**“இந்தப் பொண்ணையா? இவங்க யாரென்றே எனக்குத் தெரியாது. ஒரு முறைகூடப் பார்த்தது கிடையாது. நான் எப்படி இவங்களைப் பின்தொடர முடியும்?”**

அயோக்கியனா இருந்தால் நிச்சயம் அகப்பட்டே தீருவான். பயப்படாதே, வா போகலாம்” என்று ஆபீசிற்குள் போனார்கள்.

“சில வாரங்கள் கழித்து அந்த அவன் வீட்டிலிருந்து தபால்காரர் ரம்யா வீட்டிற்கு வந்து, ரம்யாவிடம் ஒரு தபால் கவரைக் காட்டி, ‘இந்த விலாசம் தெரியுமா’ என விசாரித்தார். அந்தக் கவரில் கார்த்திகேயன் என இருந்தது. ரம்யா தனக்குத் தெரியா தென்று சொல்லிய பிறகு, ‘அந்த வீட் டில் அப்படிப்பட்டவர் இல்லையா’ எனத் தபால்காரரிடம் விசாரித்தாள்.

‘அந்த விலாசதாரர் வீட்டைக் காலி செய்துவிட்டுப் போய்விட்டார் களாம். எங்கே இருக்கிறார் என்று தெரியாது என்றார்கள்’ எனக் கூறினார்

சில வாரங்களுக்குப் பிறகு ரம்யா வும், தீபிகாவும் காந்திபுரம் அன்ன பூர்ணா ஓட்டலில் சாப்பிட அமர்ந் தனர்.

ஆச்சரியம். அந்த அவன், அதே அவன்தான். அவர்கள் அமர்ந்திருந்த அதே டேபிளுக்கு வந்து அவர்களுக்கு எதிரே அமர்ந்தான்.

ரம்யாவுக்கு வேர்க்கத் தொடங்கி விட்டது. தீபிகாவுக்கு அவன் வீட்டைக் காலி செய்துவிட்டுப் போனது தெரியாது. அதனால் தீபிகா அவன் ரம்யாவைப் பின்தொடர்ந்து வந்திருப்பதாக நினைத்துக் கொண்டு அவனிடம், “மிஸ்டர், உனக்கு வேறு டேபிள் கிடைக்கவில்லையா?” எனக் கேட்டாள்.

உடனே அவன், “ஏன் இப்படிக் கேட்கிறீங்க? இங்கே உட்கார்ந்தால் உங்களுக்கு அசௌகரியமாக இருக் கிறதா?” எனக் கேட்டான்.

“நீ குப்புசாமி சாஸ்திரி வீதியில் தானே குடியிருக்கிறாய்? இந்தப் பொண்ண நீ பின்தொடர்ந்து வந்து கொண்டிருக்கிறாய். இப்ப சொல் உனக்கு என்ன வேணும்?”

“நான் குப்புசாமி சாஸ்திரி வீதியில் குடியிருந்தது உங்களுக்கு எப்படித் தெரியும்?”

“அதைப்பற்றிப் பிறகு பேசலாம். நீ இந்தப் பொண்ண எதற்குப் பின் தொடர்கிறாய்?”

“இந்தப் பொண்ணையா? இவங்க யாரென்றே எனக்குத் தெரியாது. ஒரு முறைகூடப் பார்த்தது கிடையாது. நான் எப்படி இவங்களைப் பின் தொடர முடியும்?”

“பொய் வேறு சொல்றியா? அன் றைக்குப் பி.எஃப். ஆபீசுக்கு வந்தாயா, இல்லையா? பஞ்சர் கடைக்கு வந்தாயா, இல்லையா?”

இதைக் கேட்டவுடன் ரம்யாவுக்கு வேர்ப்பது மேலும் அதிகரித்து விட்டது. உடனே ரம்யாவே பேசி னாள். “மிஸ்டர் கார்த்திகேயன்தானே நீங்கள்?”

“என்னது, மிஸ்டர் கார்த்திகேயன் என்கிறாய்? அவர் என் அப்பா. அவர் எப்படி உனக்குத் தெரியும்?” என்றான்.

“குப்புசாமி சாஸ்திரி தெரு வீட்டில் குடியிருந்தது நீங்கள்தானே?”

“அப்பாவுக்கு உடல் நலமில்லை. கே.எம்.சி.எச். சிட்டி சென்டரில் சிகிச் சைக்காகப் பக்கத்துத் தெருவில் ஒரு வீட்டை வாடகைக்குப் பிடித்து 2 மாதங்கள் குடியிருந்தோம். அது சரி நீங்கள் யார்? அந்தத் தெருவில் குடி யிருந்த தகவல் உங்களுக்கு எப்படித் தெரியும்?” எனக் கேட்டான்.

ரம்யாவுக்கும், தீபிகாவுக்கும் ஒரே குழப்பம். உடனே, அந்த அவன் ரம்யாவைப் பார்த்து “என்னைப் பின் தொடர்ந்து நீ வருகிறாயா? பொறு, பொறு போலீசில் உன்னைப்பற்றிப் புகார் செய்கிறேன்” என்றான்.

ஒருவருக்குத் தெரியாமல் மற்றொருவர் என்பதை தீபிகா புரிந்து கொண்டாள். ரம்யாதான் அவன் பின்தொடர்வதாகக் கற்பனை செய்து




கொண்டாள். அவள் சொன்ன தகவல்களால் அவன் தன்னை ரம்யா பின்தொடர்வதாக உணர்ந்தான். உண்மையில் யாரும், யாரையும் பின்தொடரவே இல்லை. தீபிகா வுக்குப் புரிந்துவிட்டது.

தீபிகா தலையிட்டு இருவரையும் சமாதானம் செய்தாள். மூவரும் சரி யான புரிதலோடு பிரியும் போது, காபிக்கான பில்லை தீபிகாவே கொடுத்து, அந்தப் பின்தொடரும் சந்திப்புகளைக் கொண்டாடினாள். •

நேர்காணல்




# வடலூரில் வழிகாட்டும் ஒரு கல்வி நிறுவனம்



டாக்டர் இரா.செல்வராஜ்




வடலூரில் தமிழகத்தின் மேனாள் முதலமைச்சர் உத்தமர் ஓ.பி. ராமசாமி ரெட்டியார் அவர்களால் நிறுவப்பெற்று, அருட்செல்வர் ஐயா அவர்களால் வளர்க்கப்பெற்ற 'ஓ.பி.ஆர். கல்வி நிறுவனங்கள் தமிழ கத்தின் புகழ்பெற்ற முக்கியக் கல்வி நிறுவனங்களில் ஒன்றாகத் திகழ்கின்றன.

இக்கல்வி நிறுவனங்களின் வளர்ச்சி பற்றிய அருட்செல்வரின் எண்ணங்களையெல்லாம் செயல் வடிவமாக்கிய பெருமைக்குரியவர், ஓ.பி.ஆர். கல்வி நிறுவனங்களின் செயலராகப் பொறுப்பேற்றுத் திறம்படச் செயலாற்றி வருபவர் டாக்டர் இரா. செல்வராஜ் அவர்கள்.

வறண்ட பகுதியாக இருந்த வடலூர்ப் பகுதியில் இன்று பல பெரிய கட்டடங்கள் வந்துள்ளன. அவற்றில் வணிக நிறுவனங்கள் வளர்ந்தோங்கியுள்ளன. இந்த நிலைக்கு அருட்செல்வரும், டாக்டர் இரா. செல்வராஜ் அவர்களும் நல்கியுள்ள பங்களிப்புகள் எதிர்காலத் தலைமுறையினரால் போற்றற்குரியவை.

டாக்டர் செல்வராஜ், நாடாளுமன்ற முன்னாள் தலைவர் திருமதி. மீரா குமார் அவர்களால் 'அம்பேத்கர் விருது' அளித்துக் கௌரவிக்கப்பட்டவர்.

தொடக்கப்பள்ளியாகவும், ஆதரவற்றோர் இல்லமாகவும் மட்டுமே இருந்த 'வள்ளலார் குருகுலக் கல்வி நிறுவனங்கள்' இன்று மேல்நிலைப் பள்ளிகள், கலைக்கல்லூரி, ஆசிரியப்பயிற்சிக் கல்லூரிகள், செவிலியர் கல்லூரிகள் என வளர்ந்துள்ளன. அதற்கு அருட்செல்வரின் தளபதியாகச் செயல்பட்டவர் டாக்டர் இரா. செல்வராஜ் அவர்கள் 'ஓம்



கல்வி நிலையத்திற்கு வருகை தந்த புரவலர் திரு. ம. பாலசுப்பிரமணியம் அவர்களை வரவேற்கிறார் டாக்டர் இரா.செல்வராஜ். அருகில் நிர்வாக அலுவலர் திருமதி லதா ராஜா வெங்கடேசன், தலைவரின் தனிச்செயலர் சி. ரவீந்திரன்

சக்தி'க்கு அளித்த பேட்டி...

**“கேள்வி : ஓ.பி.ஆர். கல்வி நிறுவனங்கள் அருட்செல்வர் ஐயாவின் நிர்வாகத்திற்கு எப்போது வந்தன? எப்படி வந்தன?**

**பதில் :** நாடு விடுதலை பெற்றபோது 1947 முதல் 1949 வரை உத்தமர் ஓ.பி.ஆர். அவர்கள் தமிழ்நாட்டின் முதலமைச்சராக இருந்தார். அரசியலிலிருந்து அவர் விலகி இருந்தபோது, 1951–இல் சுத்த சன்மார்க்க நிலைய அறக்கட்டளையைத் தொடங்கினார். அப்போது ‘வள்ளலார் குருகுலம், அப்பர் ஏழை மாணவர் விடுதி, சான்றோர் இல்லம், இராமலிங்கர் தொண்டர் படை முதலியவற்றை நிறுவினார். வடலூரில் பல நிறுவனங்களுக்கு இலவசமாகவும் இடங்களைக் கொடுத்தார்.



லண்டன் பயணத்தின்போது ஐயா அருட்செல்வருடன் டாக்டர் இரா.செல்வராஜ்

இவற்றைத் தனக்குப் பின் நிர்வகிக்க கி.ஆ.பெ. விசுவநாதம், ஆத்தூர் சாம்பசிவ ரெட்டியார் ஆகியோர்க்குக் கடிதங்கள் எழுதினார். அவர்கள் ஏற்க மறுத்து விட்டனர்.

அப்போது பணப்பற்றாக்குறை ஏற்பட்டது. என்ன செய்வதென்று யோசித்துக் கொண்டிருந்த போது, பொள்ளாச்சி சன்மார்க்க சங்கத் தலைவரான அமரர் ப. நாச்சிமுத்துக்கவுண்டரும், ருக்மணி அம்மையாரும் நேரில் வந்து ரூ. 5 ஆயிரம் நன்கொடை அளித்தனர். அன்றைக்கு அது மிகப் பெரும் தொகை. அப்போது, திரு. ப. நாச்சிமுத்துக் கவுண்டரின் பின்புலத்தைப் பார்த்து, அவருடைய குமாரர் அருட்செல்வர் ஐயாவிடம் ஓ.பி.ஆர். நிறுவனங்களை ஒப்படைக்க முடிவு செய்து, 1969–இல் ஒப்படைத்தார். 25.8.1970–இல் காலமானார்.

**கேள்வி : நீங்கள் எப்படி இங்கே பணிக்கு வந்தீர்கள்?**

**பதில் :** உத்தமர் ஓ.பி.ஆர். மறைவிற்குப் பின்னர், ஞானசபை இருந்த நிலத்தைச் சுற்றிலும் மதில்சுவர் கட்டி, நூலகம் அமைக்க அருட்செல்வர் ஐயா முடிவு செய்து, கரும்பு விவசாயிகளிடம் சிறு சிறு தொகையை நன்கொடையாகப் பெற்றுப் பணிகளைத் தொடங்கினார்.

அவற்றைப் பொறுப்பாகப் பார்த்துக் கொள்ள ஒருவர் தேவைப்பட்டார். அப்போது நான், சக்தி சர்க்கரை ஆலையில், கரும்பு இன்ஸ்பெக்டராகக் களப்பணியாற்றிக் கொண்டிருந்தேன்.

என்னை நன்கு அறிந்திருந்த அப்போதைய சக்தி சுகர்ஸ் பொது மேலாளர் திரு. எஸ்.வி. பாலசுப்பிரமணியம் அவர்கள், அருட்செல்வரிடம் என்னை வடலூருக்கு அனுப்பலாம் என்றார். அதன்படி அருட்செல்வர் ஐயா அவர்கள் 1980–இல் என்னை இங்கே அனுப்பி வைத்தார். வந்த உடனே நான் ஓபிஆர் பண்ணை வேலைகளைத் தொடங்கி விட்டேன்.



பட்டமளிப்பு விழாவில் தலைவர் திரு. சங்கர் வாணவராயர். திருவள்ளுவர் பல்கலைக்கழகத் துணைவேந்தர் டாக்டர் கே. முருகன், டாக்டர் இரா.செல்வராஜ்.

**கேள்வி : இந்த நிறுவனத்தை வளர்ப்பதற்குரிய நிதியை எப்படித் திரட்டினீர்கள்?**

**பதில் :** முதலில் விவசாயப் பண்ணையைச் சீர்திருத்தம் செய்வதற்குத்தான் நான் 1980–இல் இங்கு வந்தேன். பண்ணை



ஓ.பி.ஆர். கல்வி நிறுவனத்தில் 17.3.2019 அன்று நடைபெற்ற மாதப்பூசம் லட்சார்ச்சனை நிகழ்ச்சி

விவசாயம் செய்வதற்கு எனக்குக் கடனாக ரூ. 15 லட்சம், ஒரு டிராக்டர், ஒரு பசு மாடு தரப்பட்டன. இவற்றைக் கொண்டுதான் 150 ஏக்கர் விவசாயத்தைச் செய்யத் தொடங்கினேன்.

அப்போதே இங்கிருந்த ஆதரவற்றோர் இல்லத்திற்கும், தைப்பூசத்திற்கும், மற்ற விழாக்களுக்கும் இந்த விளைநிலங்களிலிருந்து நெல் கொடுப்பார்கள். நான் வந்தபின் நெல், கரும்பு, வாழை முதலியன பயிர் செய்து கொடுத்தோம். அப்போது கீற்றுக் கொட்டகைகளில் வகுப்பறைகள் நடந்தன. அவற்றைக் கட்டடங்களாக்க அருட்செல்வர் விரும்பினார்.

1992–இல் நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்திற்காகப் பண்ணை நிலங்களை எடுத்துக் கொண்டார்கள். அதன் மூலம் ரூ. 2.5 கோடி ரூபாய் கிடைத்தது. அந்தத் தொகையை வங்கியில் வைப்பு நிதியாக வைத்து விட்டோம். அப்போது என்னை இக்கல்வி நிறுவனங்களின் செயலராகப் பொறுப்பேற்றுக் கொள்ளும்படி அருட்செல்வர் ஐயா கூறினார். அப்படித்தான் இங்கே பணிக்கு வந்தேன்.

பின்னர் உயர்நிலைப்பள்ளியை மேல்நிலைப் பள்ளியாக்க நாங்களே இங்கு வசூல் செய்து 2 வகுப்பறைகள் கட்டினோம். திறப்புவிழாவிற்கு வந்த அருட்செல்வர் தனக்கு வேண்டிய தொழிலதிபர்கள் பலருக்குக் கடிதம் தந்து என்னை அவர்களிடம் அனுப்பினார். அவ்வாறுதான் நிதியுதவியைப் பெற்றோம்.

1995–இல் மழவந்தாங்கலில் இருந்த தொழுநோயாளிகள் மையத்தை ஏற்றுக்கொண்டபோது, நர்சிங் கல்வியைக் கொண்டுவரச் சொன்னார்கள். 2000–ஆவது ஆண்டில் முதன்முதலில் தமிழகத்தில் நர்சிங் டிப்ளமோ கல்வி கொண்டு வந்தது இங்குதான். அதன்பின் தமிழகத்தில் 236 நர்சிங் கல்வி நிலையங்கள் வந்துவிட்டன.

பின்னர் ஆசிரியப் பயிற்சிக்கு விண்ணப்பித்தோம். அதற்கும் கட்டடங்கள் கட்டினோம். பின்னர் பி.எஸ்சி. நர்சிங் வந்தது.

2005–இல் பி.எட். கல்லூரி வந்தது. கலைக் கல்லூரி வந்தது. காந்தியடிகள் நூலகம் வந்தது. இப்படிப் படிப்படியாகப் பல நிறுவனங்கள் வந்துவிட்டன. இனி, இதை நிகர்நிலைப் பல்கலைக் கழகமாக மாற்றுவதற்காக, ரூ. 8 – 9 கோடி செலவில் 77 ஆயிரம் சதுர அடிப் பரப்பளவில் கட்டடம் கட்டப்பட்டு வருகிறது.



**கேள்வி : இந்தக் கல்வி நிறுவனங்களின் இடம் எத்தனை ஏக்கர் பரப்புள்ளது?**

**பதில்** : வள்ளலார் குருகுல வளாகம் 19 ஏக்கர், 17 சென்ட். ஸ்ரீராமகுப்பத்தில் உள்ள இடம் 27 ஏக்கர். அன்னம்புத்தூரில் 70 சென்ட் இடம். விளைநிலங்களாக இருந்த மற்ற பண்ணை நிலங்கள், நெய்வேலி நிலக்கரிச் சுரங்கத்திற்காக எடுக்கப்பட்டுவிட்டன. பேரூராட்சிக்கும், காவல் நிலையத்திற்கும், எங்கள் நிலங்கள் கொடுக்கப்பட்டுள்ளன.

**கேள்வி : ஓ.பி.ஆர். கல்வி நிறுவனங்களில் படிக்கும் மாணவ – மாணவியர், ஆசிரியர்கள் எத்தனை பேர்?**



கணினி ஆய்வுக்கூடம்




கல்வி நிலையத்திற்கு வருகை தந்த
பா.ம.க. நிறுவனர் மருத்துவர் ச. இராமதாசை வரவேற்கிறார்
டாக்டர் இரா.செல்வராஜ். அருகில் பேரா. மா.வயித்தியலிங்கன்

**பதில்** : இங்குப் படிப்பவர்கள் ஏறத்தாழ 4 ஆயிரம்பேர் உள்ளனர். வள்ளலார் குருகுலம் மேல் நிலைப்பள்ளி – சுயநிதிப்பள்ளி, 6–10 வரை ஆங் கிலவழிக் கல்வி, 11 – 12 ஆங்கில வழிப்பள்ளி. 6 – 10 வரை அரசு உதவி பெறுகின்றன. மற்றவை சுயநிதிக் கல்விதான். அப்பர் ஏழை மாணவர் விடுதியில் ஏழை மாணவர்கள் உள்ளனர்.

பி.எட், எம்.எட். கல்லூரிகள் இங்கு உள்ளன. இவை ஒவ்வொன்றிலும் இரண்டு பிரிவுகள் உள்ளன. நர்சிங்கில் 4 பிரிவுகள் உள்ளன. பி.எஸ்சி. நர்சிங், டிப்ளமோ நர்சிங், கிராமப்புறச் செவிலியர், உயர்நிலை நர்சிங் என்பன அவை. கலைக்கல்லூரியும் உள்ளது. மழவந்தாங்கலில் பி.எட். கல்லூரி உள்ளது.

விடுதியில் 4 வகைகள் உள்ளன. கட்டணம் செலுத்தக்கூடியவை, செலுத்தாதவை என இரண்டு. கட்டணம் செலுத்தாத விடுதியில் ஏழைக் குழந்தைகள் 400 பேர் படிக்கின்றனர். கஸ்தூர்பா காந்தி பாலிகா நிறுவன நிதியுதவியில், படிப்பைப் பாதியில் விட்டவர்கள் மீண்டும் படிக்க வழிவகை செய்யப்பட்டுள்ளது. அவர்களை, 6, 7, 8–ஆம் வகுப்புகளில் மத்திய, மாநில அரசுகளின் உதவியுடன் படிக்க வைக்கிறோம். 9–ஆம் வகுப் பிற்குப் பின்னர் அருட்செல்வர் நிதியுதவியில் படிக் கிறார்கள். இதன் மூலம் பொறியியல் பட்டப்படிப்பு, ஆசிரியப்பயிற்சி, நர்சிங் பயிற்சி, பட்டப்படிப்புகள் முதலியன பயின்று, நல்ல வேலைகளுக்குப் பலர் சென்றிருக்கிறார்கள். இங்கும் சிலர் பணியில் உள்ளனர்.

6–ஆம் வகுப்பில் சேர்ந்து, 10 –ஆம் வகுப்பு வரை இலவசக் கல்வி அளிக்கப்படுகிறது. ஓ.பி.ஆர். நினைவுத் தொடக்கப்பள்ளியில் 1–ஆம் வகுப்பு முதல் 5–ஆம் வகுப்பு வரையும் இலவசக் கல்வி உள்ளது. பள்ளிகள் மட்டுமே 5 வகைகள் உள்ளன.

பள்ளிகள், கல்லூரிகள் அனைத்திலும் சேர்த்து இருபால் ஆசிரியர்கள் 200 பேர் உள்ளனர்.



அம்பேத்கர் விருதுபெற்ற டாக்டர் இரா.செல்வராஜ் அவர்களுக்கு
சென்னையில் நடைபெற்ற பாராட்டுவிழாவில் வி.சி.க. தலைவர்
தொல் திருமாவளவன், திமுக தலைவர் மு.க. ஸ்டாலின்,
பா.ம.க. தலைவர் ஜி.கே. மணி.



மாணவியரின்
கலை நிகழ்ச்சிகள்

இந்தக் கல்வி நிறுவனங்கள் வளர அருட்செல்வர் ஐயாவும், சக்தி சுகர்ஸ் நிறுவனமும்தான் காரணம். எனவே, அவர் இருக்கும் திசை நோக்கி வணங்குங்கள் என்று மாணவர்களிடம் எப்போதும் நான் சொல்வேன்.

**கேள்வி : அருட்செல்வர் காலத்திற்குப் பின்னர் உருவான கல்வி நிறுவனங்கள்?**

**பதில் :** அருட்செல்வர் ஐயா காலத்திற்குப் பின்னர் ஆங்கிலவழிப் பள்ளியும், நர்சிங்கில் ஏ.என்.எம். பிரிவும் கொண்டுவரப்பட்டுள்ளன. பெரிய கட்டடங்கள், கேன்டீன், மாணவர் விடுதியில் ஒரு பகுதி, கணினி ஆய்வகம் கொண்டு வரப்பட்டுள்ளன. தமிழ் வழிப்பள்ளிக்கு இணையாக ஆங்கிலவழி மேல்நிலைப்பள்ளி கொண்டு வரப்பட்டுள்ளது. தமிழகத்தில் ஆங்கிலவழிப் பள்ளிக்கு இலவச சைக்கிள்கள் கொடுக்கப்பட்டது நமது பள்ளியில்தான்.

**கேள்வி : தற்போது ஓ.பி.ஆர். கல்வி நிறுவனங்களின் தலைவர் யார்?**

**பதில் :** தற்போது ஓ.பி.ஆர். கல்வி நிறுவனங்களின் தலைவராக அருட்செல்வரின் மகள்வழிப் பெயரர் திரு. சங்கர் வாணவராயர் அவர்கள் செயல்பட்டு வருகிறார். அருட்செல்வரின் இரண்டாம் புதல்வர் திரு. ம. பாலசுப்பிரமணியம் அவர்கள் புரவலராக இருந்து வருகிறார்.

**கேள்வி : இக்கல்வி நிறுவனங்கள் வருவதற்கு முன்பு வடலூர்ப் பகுதியின் நிலை?**

**பதில் :** வடலூர்ப்பகுதி முன்னர் காடாகக் கிடந்த பகுதி. இப்போது நகரப் பகுதியாகிவிட்டது. கடைகள், வணிக நிறுவனங்கள் பெருகி விட்டன. இங்குள்ள 4 ஆயிரம் மாணவர்களும் சென்று பொருள்கள் வாங்குவதால், ஜவுளிக்கடைகள், பேன்சிப் பொருட்கள் விற்பனையகங்களும் குடியிருப்புகளும் பெருகியுள்ளன.

ஒணான்குப்பம் என்னும் சிற்றூர் புயலால் பெரும் சேதமடைந்துவிட்டது. அப்போது, தலைவர் சங்கர் வாணவராயர் கூறியபடி, கிராமப் பகுதிகளைப் போய்ப் பார்த்து வந்தபின் அங்குள்ள பள்ளியில் மேசை, நாற்காலிகள், டெஸ்க்குகள் எல்லாம் உடைந்து விட்டன, தண்ணீரில் அடித்துச் செல்லப்பட்டு விட்டன என்று அவரிடம் கூறினோம்.

ஸ்டவ், உணவுப் பொருள்கள், பால் பவுடர், மேசை, டெஸ்க், பெஞ்சுகள் வாங்கித் தரச் சொன்னார். அந்தக் கிராமத்தையே நாங்கள் தத்தெடுத்துக் கொண்டோம்.

அதன்பின் அந்த ஊருக்குப் பேருந்து வசதியே இல்லை என்பதை அவ்வூர் மக்கள் கூறி முறையிட்டனர். எனவே அங்குள்ள பள்ளி மாணவர்களுக்கு இலவசப் பேருந்து ஏற்பாடு செய்தோம். அதில் 64 மாணவர்கள் படிக்க வருகின்றனர். அவர்களுக்குக் கல்வியும் இலவசமாகத் தரப்படுகிறது.

**கேள்வி : ஓ.பி.ஆர். காலத்தில் தொடங்கப்பட்ட ஆதரவற்றோர் இல்லத்தில் இப்போது எத்தனை மாணவர்கள் உள்ளனர்?**

**பதில் :** அந்த இல்லத்தில் 400 மாணவர்கள் உள்ளனர். அவர்களில் 200 பேர்களுக்கு இலவச விடுதி வசதி உள்ளது. 200 பேர்கள் கட்டணம் செலுத்துகின்றனர். மாணவியரும் உள்ளனர்.

**கேள்வி : செயலராகிய தாங்கள் நடத்தும் 'சன்மார்க்கச் செய்தி மடல்' சிறப்பாக வருவதற்குக் காரணம் – இதற்கெனத் தனி ஆசிரியர் குழு உள்ளதா?**



**பதில் :** சன்மார்க்கச் செய்தி மடல் நிர்வாகக் குழுவில் எங்கள் நிர்வாக அலுவலர் ஒருவர் உறுப்பினராக உள்ளார். கல்வி நிறுவன ஆசிரியர்கள் இருவர் இருக்கின்றனர். ஆறுமுகம் என்ற நல்ல கவிஞர் உள்ளார். நான் இதனை விடிய விடிய ஆறு முறையாவது படித்துத் திருத்தங்கள் செய்வேன்.

**கேள்வி : அதில் தாங்கள் எழுதி வரும் 'நினைத்துப் பார்க்கிறேன்' தொடர் புத்தகமாக வரவுள்ளதா?**

**பதில் :** ஆம்! தயாராகிக் கொண்டிருக்கிறது. எனக்கு இப்போது 73 வயது நடக்கிறது. எனது 75–ஆவது அகவை நிறைவில் இரண்டு தொகுதிகளாக வெளியிடத் திட்டமிட்டுள்ளேன்.

**கேள்வி : ஓ.பி.ஆர். கல்வி நிறுவனக் கலை நிகழ்ச்சிகளின் சிறப்பிற்குக் காரணம்?**

**பதில் :** அதற்கென்று இங்கே உள்ள முந்தைய மாணவர்களே உள்ளனர். அவர்களைத் தேர்ந்தெடுத்து இங்கேயே ஆசிரியப்பணியில் அமர்த்தியுள்ளோம். அவர்கள் கற்பிக்கின்றனர். **எனது மருமகள் திருமதி லதா ராஜா வெங்கடேசன்** மிகுந்த அக்கறையோடு சிறப்பாக விளக்கவுரை கொடுப்பார்.

வள்ளற்பெருமானுக்கும், ஆறுமுக நாவலருக்கும் இடையே அருட்பா – மருட்பா வழக்கு நடந்த 150–ஆவது ஆண்டு இது. மகளிர் தினம் கொண்டாடப்படும்போது நமது மாணவிகள் சென்று தப்பாட்டம், கரகாட்டம் முதலிய கலை நிகழ்ச்சிகள் நடத்தினர். அதில் என் மருமகள் சிறப்பான விளக்கவுரை கொடுத்தார்.

**கேள்வி : தலைவர் திரு. சங்கர் வாணவராயர் இங்குப் பங்கு பெறுவது பற்றி...**

**பதில் :** திரு. சங்கர் வாணவராயர், இங்கு நடைபெறும் பட்டமளிப்பு விழாக்களிலும், ஓ.பி.ஆர். நினைவு நாளிலும், தைப்பூசத்திற்கும் தவறாமல் வந்து கலந்து கொள்கிறார்.



ஓ.பி.ஆர். அவர்களின் உயில்படியும், அருட்செல்வரின் விருப்பப்படியும் தைப்பூச விழா 3 நாட்கள் சிறப்பாகச் செய்ய வேண்டும், அன்ன தானம் செய்ய வேண்டும். மாதந்தோறும் பூசத் திருநாளில் லட்சார்ச்சனை செய்ய வேண்டும். இலவசக் கண்பரிசோதனை, காந்தியச் சிந்தனை வகுப்புகள் ஆகியவற்றை விடாமல் செய்து வருகிறோம். அதற்கெல்லாம் திரு. சங்கர் வாணவராயரும், புரவலர் திரு. ம. பாலசுப்பிரமணியம் அவர்களும் ஆதரவாக உள்ளனர்.

**கேள்வி : சித்தி வளாகத்தில் ஓ.பி.ஆர். கல்வி நிறுவனங்களின் கலை நிகழ்ச்சிகள்?**

**பதில் :** சமீப காலமாக இல்லை. முன்னர் நடத்திக் கொண்டிருந்தோம். கொடியேற்றத்திற்குச் சென்று வருகிறோம். கலை நிகழ்ச்சிகள் மீண்டும் நடத்துவதற்குக் கேட்டுக் கொண்டிருக்கிறோம். விரைவில் நடத்துவோம்.

சித்தி வளாகம் அருட்செல்வரின் சிந்தனையில் உதித்த சாதனை. அந்தப் பீடத்தையெல்லாம் வடிவமைத்தது என்.ஐ.ஏ. செயலர் டாக்டர் சி. இராமசாமி அவர்களின் குழுவினர்தான்.

**கேள்வி : அருட்செல்வருடன் தாங்கள் சென்ற பயண அனுபவங்களைப் பற்றி...**

**பதில் :** அருட்செல்வரோடு பலமுறை பயணங்கள் சென்றிருக்கிறேன். ஒரு முறை லண்டன், பாரிஸ், ஸ்பெயின் ஆகிய இடங்களுக்கு அழைத்துச் சென்றார்.

லண்டனில் டாக்சி டிரைவர் ஒருவர், அருட்செல்வரிடம் 'நீங்கள் லண்டனுக்கு எத்தனை முறை வந்திருக்கிறீர்கள்?' என்று கேட்டார். அதற்கு அருட்செல்வர், 'நான் பலமுறை வந்திருக்கிறேன். எனது நண்பர் இப்போதுதான் முதல் முறையாக வருகிறார்' என்று என்னைப் பற்றி அவரிடம் சொன்னார்.

என்னை அவரது நண்பர் என்று கூறி என்னைப் பெருமைப்படுத்தியது மறக்க முடியாதது. 'நண்பனே, நலஞ்சார் பண்பனே' என வள்ளலார் இறைவனை நண்பனே என்று பாடியுள்ளார். அந்தப் பாடல்தான் எனக்கு அப்போது நினைவுக்கு வந்தது. ஒரு முறை வேதாரண்யத்திற்கு ரயிலில் சென்றபோது, நான் தலைக்குக் கையை வைத்துப் படுத்திருந்ததைப் பார்த்து, எனக்குத் தமது தலையணையைக் கொடுத்தார். தன்னைப் போலவே தன்னுடன் வருவோரும்



ஓ.பி.ஆர். பண்ணையில் மனைவி, உறவினர்கள் மற்றும் பணியாளர்களுடன் டாக்டர் இரா.செல்வராஜ்

நன்றாக இருக்க வேண்டும் என்ற அவரது உயர்ந்த எண்ணமே இதற்குக் காரணம்.

**கேள்வி : அருட்செல்வர் உங்களிடம் ஒப்படைத்த வேறு பணிகள் உண்டா?**

**பதில் :** அருட்செல்வருக்கும் எனக்கும் 1980 முதல் தொடர்பு உண்டு. அவர் என்னிடம் ஒப் படைத்த வேறு பணிகள் உள்ளன. கஸ்தூர்பா காந்தி தொழுநோய் நிவாரண மையப் பணியை யும், கனகசபை டிரஸ்ட்டையும் எனக்குக் கொடுத் தார். பவர் ஆஃப் அட்டர்னி 18 எனக்குக் கொடுத் திருக்கிறார். வீரைய்யாபிள்ளை சத்திரம் – மாரியம் மாள் மகாலிங்கம் திருமண மண்டபம் புதுப்பிக் கப்பட்டு எனது மேற்பார்வையில் உள்ளது.

இந்நிறுவனத்தில் நிலங்கள் வாங்க, விற்க எனக்கு அனுமதி அளித்திருந்தார். ரூ. 10 லட்சம் செலவில் வீடு ஒன்று வாங்கப்பட்டது. ஈரோடு மாவட்டத்தில் உள்ள கஸ்தூர்பா கிராமக் கல்வி நிலையத்தையும் என்னை நிர்வகிக்கச் சொன் னார். நான் அங்கு சென்று பார்த்து வந்து, நிறைய வேலைகள் இருப்பதைக் கூறினேன். பின்னர் திரு. எஸ்.என். பாலசுப்பிரமணியம் அவர்களிடம் நிர் வாகத்தைக் கொடுத்தார்.

**கேள்வி : ஓ.பி.ஆர். கல்வி நிறுவனம் எப்படி முன் மாதிரிக் கல்வி நிறுவனமாகியது?**

**பதில் :** அருட்செல்வரின் சிந்தனை, செயல் பாடுகள், அவர் தந்த அறிவுரைகள், புரவலர் திரு. ம. பாலசுப்பிரமணியம், தலைவர் திரு. சங்கர் வாணவராயர் ஆகியோரின் வழிகாட்டுதல்கள், எங்களது முழுமையான ஈடுபாடு, ஆகியவையே காரணம். இவற்றால்தான் அருட்செல்வர் எண் ணிய தைவிட மேலும், மேலும் உயர்ந்துள்ளது.

விளையாட்டில் நம் பள்ளி மாணவ மாணவி யரை 6–ஆம் வகுப்பிலேயே ஈடுபடுத்திவிடுவோம். இதனால், 5 ஆண்டுகளில் மாநில அளவில் சிறப்பாக விளையாடி வெற்றி பெறுகின்றனர். பின்னர் கலைக்கல்லூரியிலும் இது தொடரும். திருவள்ளுவர் பல்கலைக்கழகத்தின் 136 உறுப்புக் கல்லூரிகளில் நமது கல்லூரிதான் 5 ஆண்டு களாக வெற்றியாளராக உள்ளது. இவ்வாறு விளையாட்டுத் துறையில் வெற்றி பெறும் மாண வர்களுக்கு அரசு வேலைவாய்ப்புக்கான தேர்வு களுக்கு 25 மதிப்பெண்கள் உண்டு. எங்கள் மாணவி ஒருவர் இம்மாதிரி 5 சான்றிதழ்களும், ஒரு மாணவி 3 சான்றிதழ்களும் வைத்துள்ளனர்.

விளையாட்டில் அவர்களை ஊக்கப்படுத்த காலையில் இறகுப்பந்து விளையாட்டுப் பயிற்சி யில் நானே அவர்களுடன் விளையாடுவேன். மாலையில் ஆசிரியர்களுடன் விளையாடுவேன். நான் மாவட்ட இறகுப்பந்துக் கழகத்தில் 10 ஆண்டுகள் தலைவராக இருந்துள்ளேன்.

அடுத்து, இலக்கிய மன்றங்களின் பேச்சுப் போட்டி, கட்டுரைப்போட்டி, பாட்டுப்போட்டி முதலிய வற்றிலும் நம் மாணவர்கள் எங்குச் சென்றாலும் சிறப்பாகச் செயல்பட்டுப் பரிசுகள் வாங்கியுள் ளனர். ‘அருட்பெருஞ்சோதி’ மந்திரத்தை லட்சார்ச் சனை செய்யும்படி அருட்செல்வர் ஐயா அவர்கள் கூறினார்கள். அவ்வாறு செய்யத் தொடங்கிய பின்னர் இங்கு நல்ல வளர்ச்சி ஏற்பட்டுள்ளது.

**கேள்வி : அருட்செல்வர் நிறுவிய ‘ஓம் சக்தி’ பத்திரிகை பற்றி உங்கள் அபிப்பிராயம் என்ன?**

**பதில் :** ‘ஓம் சக்தி’ பத்திரிகை ஆசிரியர் திரு. சிதம்பரநாதன் எனக்கு நல்ல நண்பர். அவர் நல்ல எழுத்தாளர், சிறந்த கவிஞர், நல்ல பேச் சாளர், பதிப்பாளர். ‘ஓம் சக்தி’யில் வித்தியாச மான, சிறந்த கட்டுரைகள் வெளிவருகின்றன. ராசி பலன்கள் பகுதி குறிப்பிடத்தக்கது. இங்கே வடலூரில் கடைவீதிகளில் விற்பனையாகின்றன.

பேட்டி : **இரா. வேணுகோபாலகிருஷ்ணன்**

Registered with Registrar of Newspapers for India No. 42582/83
Licensed to post without Pre-payment under Regn. No. TN/WR/CBE/016/WPP/2018-20

Date of Publication
28.3.2019

Regd.No.CB/016/2018-20
OM SAKTHI - APRIL - 2019